## *உங்கள் அழகுக்கு புதுப் பொலிவை அளியுங்கள்!*

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் முகம் சோபையுடன் வழவழப்பாகத் தோற்றமளிக்கும்

உங்கள் முகத்திற்கு வசீகரிக்கும் பொலிவை அளியுங்கள். நல்ல அழகியாகத் தோற்றமளிக்க விரும்பும் எந்தப் பெண்மணியும் முதலில் செய்ய வேண்டியது அதுதான். எண்ணெய்ப் பசையில்லாத செளம்யமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் உங்கள் சருமத்திற்கு மிருதுத் தன்மையும் பாதுகாப்பும் கிடைக்கும். அது சருமத்திலுள்ள பெரிய துவாரங்களை மூடி முகத்தில் 'எண்ணெய் வடியும் தோற்றம்' உண்டாகாமல் தடுக்கிறது... முகத்தில் கருப்புப் புள்ளிகள் உண்டாவதிலிருந்து பாதுகாப்பளிக்கிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தனியாக உபயோகித்தால் உங்கள் வதனம் இயற்கைப் பொலிவுடன் விளங்கும். இந்தக் க்ரீமைத் தடவி அதன்மீது பவுடர் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரேசீராகப் படிந்து மணிக்கணக்கில் கலையாமல் இருக்கும்.




## பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்து உங்கள் அழகுக்கு மெருகூட்டுங்கள்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பட்டது)

# கல்கி

சாசுவதமற்ற இந்த உலகத்தில் எல்லாம் அழியக் கூடியவைதான், அழியவும் செய்யும்; ஆனால் எண்ணங்கள், லட்சியங்கள், லட்சியக் கனவுகள் என்றும் அழிவதில்லை. ஒரு லட்சியக் கருத்துக்காக ஒருவன் தன் உயிரைக் கொடுக்கலாம்; ஆனால் அந்தக் கருத்து அவன் இறந்த பிறகு ஆயிரம் உயிர்களில் புகுந்து கொண்டு வாழ்கிறது. இப்படித்தான் ஒரு தலைமுறையின் லட்சியங்களுக்கு மற்றொரு தலைமுறையினர் வாரிசுகளாகின்றனர். எந்த லட்சியக் கருத்தும் இந்த உலகில் துன்பம், தியாகம் இவை இன்றி நிலை பெற்றதில்லை.

—நேதாஜி

## பொருளடக்கம்

விசுவாவசு ஐப்பசி 15 - அக்டோபர் 31



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



"நாம் தன்னிறைவு பெற வேண்டும்!"
உற்பத்தி
சர்க்கார் பிரவேசம்
நாட்டு நலன்
PK



மலர் 25 ★ இதழ் 14

# பிரதமருக்கு யோசனைகள்

**ராஜாஜி**

கல்கி காரியாலயத்தின் முன்பு சுமார் நூறு பேர்கள் என்னுடைய காச்மீர் அபிப்பிராயங்களை ஆட்சேபித்து, நான் அரசாங்க அபிப்பிராயத்தை அப்படியே ஆமோதிக்காததால் என்னைச் சிறையிட வேண்டுமென்றும், என் எழுத்துப் பிரசுரமாகும் பத்திரிகைகளுக்குத் தடை விதிக்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். ஜனசங்கத்துப் பக்தர்கள் 80 பேர் மறுநாள் ஒரு சிறு ஊர்வலம் நடத்தி நான் வசித்து வரும் தெரு வழியில் போலீசார் சொற்படி நின்று, இரண்டு தலைவர்களை என்னைச் சந்திக்க அனுப்பினார்கள். அவர்களும் என் காச்மீர் அபிப்பிராயத்தை நான் மாற்றிக்கொள்ள வேண்டுமென்று ஒரு 'திறந்த கடிதம்' என் பார்வைக்குத் தந்து விட்டுப் போனார்கள். நாஸ்திகப் பெரியாரின் சீடர்களான 'நாத்திக'ப் பத்திரிகையின் ஆசிரியர் போன்றவர்களும் புது காங்கிரஸ் ஜாதியினரும் ஜனசங்கம்—ஹிந்துமகாசபை—ராஷ்டிரீய சுயம் சேவக சங்கம் போன்ற குழுவினரும் எவ்வளவுதான் வற்புறுத்தினாலும் சரி, அவர்களின் பொருட்டு என் மனச்சாட்சியை விட்டுக் கொடுப்பதற்கில்லை. நாட்டைக் காக்கப் போர்புரிய வேண்டும் என்கிற ஆர்வ ஜுரம் கொண்ட பெருவாரி மக்களுடன் ஒத்துப் போகவேண்டு மென்பதற்காக, சுய ஆட்சி நிர்ணய உரிமையில் எனக்குள்ள நம்பிக்கையை நான் கைவிடுவதற்கில்லை.

சிறிய அளவாயினும், பெரிய அளவாயினும் பலப் பிரயோகத்தினால் நம் நாட்டை அடக்க நினைப்பவர்களுக்கு ஒரு நாளும் நாம் வணங்கிக் கொடுக்கலாகாது என்பது உண்மை. தேசிய ரீதியிலிருப்பினும் சரி, தனிப்பட்ட மனிதர் சம்பந்தப்பட்ட விவகாரங்களிலும் சரி ஹிம்சை முறைக்கு ஒருகாலும் அடிபணியாமலிருப்போம்!

ஆனால் அதே சமயத்தில் அடிப்படையான நன்னெறிகளைப் பூரண விசுவாசத்துடன் பற்றி ஒழுகுவோம். அரசியல் சூழ்நிலையின் மாறுதல்களுக்கேற்றபடி அரசாங்கம் அவ்வப்போது தனது கொள்கைகளில் சிலவற்றை மாற்றிக் கொள்ளவேண்டி யிருக்குமெனினும், மாற்றவொண்ணாத கொள்கைகளும் உண்டு. இவற்றில் ஒன்று, ஒரு நாட்டிலுள்ள ஒவ்வொரு பிரஜைக்குமுள்ள அபிப்பிராய சுதந்திரம். தனி நபர்கள் சில கருத்துக்களைக் கடைப்பிடித்து, அவற்றை வெளியிடவும் அரசாங்கத்துக்கு யோசனை கூறவும் பெற்றுள்ள உரிமையைப் பறித்தால் ஜனநாயகத்தின் உயிருக்கே ஆபத்து ஏற்பட்டுவிடும். இன்று உலக நாடுகள் இந்தியாவுக்கு மதிப்புத் தரவேண்டுமெனில், அது நாம் ஜனநாயகத்துக்கு எவ்வளவு தூரம் மதிப்புத் தருகிறோம் என்பதைப் பொறுத்தே அமையும். ஜனநாயத் தத்துவங்களை நாம் கைவிட்டால் நம்மிடம் அவற்றுக்குள்ள மரியாதை குறையும்.

சர்வாதிகாரம் நடத்தும் சர்க்கார்களும் தங்கள் நாட்டை 'ஜனநாயகம்' என்று வர்ணித்துக் கொள்வதுண்டு. எனினும் இந்தியா உண்மையான ஜனநாயக நாடு எனில் மாறுபட்ட கருத்துக்களுக்கு இடம் அளித்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா

— பாரதியார்

தாக வேண்டும். பிரதமர் லால்பஹாதூர் அவர்களிடம் நான் பெருத்த நம்பிக்கை வைத்திருக்கிறேன். பாகிஸ்தான் ஆக்கிரமிப்பினால் ஏற்பட்டுள்ள விளைவுகள் என் நம்பிக்கைக்கு முக்கியமான காரணம்.

பிரதமர் சில நல்ல காரியங்களைச் செய்தாக வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அவையாவன :

1. நாட்டுக்கு நன்மை செய்யும் மார்க்கத்திலிருந்து சர்க்காரின் பொருளாதார சித்தாந்தம் வெகுதூரம் விலகிவிட்டது. இதை மாற்றி ஸ்திரமான அடிப்படையின் மீது பொருளாதாரத்தை அமைக்க வேண்டுமாயின் பலவிதமான சர்க்கார் கட்டுப்பாடுகளை நீக்கியாக வேண்டும். கட்டுப்பாட்டு நீக்கத்துக்கென்றே ஒரு கமிட்டி அமைக்க வேண்டும்.

2. அவசியமாக இருந்தே தீரவேண்டிய சில பெர்மிட்டுக்களையும் லைசென்சுகளையும் யோக்கியமாக விநியோகிப்பதற்காகச் சுதந்திரமான டிரிப்யூனல் நிறுவ வேண்டும்.

3. தனியார் துறைத் தொழில்களிலும் விவசாயத்திலும் முதலீடு பெருகி, ஊக்கம் வளருவதற்காகத் தூண்டுதல்களை அளிக்க வேண்டும்.

4. வரிகளைக் கணிசமான அளவுக்குக் குறைக்க வேண்டும்.

5. சர்க்காரின் நிருவாகச் செலவுகளைக் கட்டுப்படுத்துவதற்கான வழி வகைகளை ஆராய்ந்து செயலாக்குவதற்கு ஒரு குழு அமைக்க வேண்டும்.

6. சட்டத்தின் ஆட்சியும் ஜனநாயகமும் ஒன்றுக்கொன்று உரசலில்லாமல் இணக்கமாகச் செயல்பட வேண்டுமாயின் மக்களின் ஜீவாதார உரிமைகளை மதித்து, அவற்றுக்குப் புத்துயிர் தர வேண்டும்.

7. அபேட்சகர்கள் தங்களுடைய அல்லது தங்கள் கட்சியுடைய பண பலத்தைக் கொண்டு தேர்தல்களில் வெற்றி பெறுகிற நிலைமை மாறி, பண பலமில்லாதவர்களும் தேர்தலில் தைரியமாகப் போட்டியிடுவதற்கு உகந்த வழியில் தேர்தல் அமைப்பை முற்றிலும் சீர்திருத்தியமைக்க வேண்டும்.

8. போர், ஆக்கிரமிப்பு இவற்றைத் திறமையுடனும் தீரத்துடனும் எதிர்த்து நிற்போம். அதே போதில் அண்டை நாடுகளுடன் நட்போடு வாழுவதையே நமது வெளிநாட்டுக் கொள்கையின் நிரந்தர நோக்கமாகக் கருதுவோம்.

9. சிறிய நிலச் சொந்தக்காரர்கள், குத்தகைதாரர்கள் ஆகியோரிடமிருந்து நேரடியாகவோ மறைமுகமாகவோ பலவந்த முறையில் சர்க்காரால் தானியக் கொள்முதல் செய்யப்படாது என்று உறுதியளிக்க வேண்டும். சர்க்கார் அதிகாரிகளும், சர்க்கார் சார்புள்ள மற்றவர்களும் நிர்ப்பந்தம் செய்ய மாட்டார்கள் என்று உறுதியானால்தான் சிறிய நிலச் சொத்துக்களில் உற்பத்தி பெருகி, உற்பத்தி ஸ்தானத்தின் சுற்றுப்புறங்களுக்கு ஸப்ளை அதிகரிக்கும். தங்கள் சரக்கு விலை போக வேண்டுமென்ற போட்டி உணர்வு உற்பத்தியாளரிடம் ஏற்பட்டு, இவ்வாறு போட்டி யிருப்பதால் விலை ஏறாமல் தடுக்கும் சக்தியை மக்கள் பெறும் போது உணவுப் பிரச்னை பெருமளவில் தீரும். ஸப்ளை தட்டுப்பாடோ, பஞ்சமோ ஏற்படாது. ரேஷன் முறையை அமுலாக்குவதால் எவ்வாறேனும் உணவுப் பண்டங்களைச் சேமித்து வைத்துக் கொள்வதற்கு முற்படுவார்கள். அதாவது சர்க்கார் நினைப்பதற்கு நேர்மாறாக, இன்றைவிட அதிகமாக உணவு தானியங்கள் தேங்கும். எனவே, கொள்முதல் செய்வதெனில் பெரிய பண்ணையாளர்களிடமிருந்து மட்டுமே செய்ய வேண்டும்.

உணவு தானிய விநியோகம் வியாபாரிகளிடமே இருக்க வேண்டும். இந்தத் துறையில் சர்க்கார் தலையிடுவதால் லஞ்ச ஊழலும், கொடுங்கோன்மையுமே பெருகும்.

10. ஆசிய அரசியலில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த அம்சம் சீன அபாயமே என்று உணரவேண்டும். அதற்கேற்ப நமது அந்நியக் கொள்கையைச் சக்தி வாய்ந்ததாக உருவாக்கிக் கொண்டு இந்தியாவின் பிரதேச ஒருமைப்பாட்டுக்கும் தற்காப்புக்கும் பங்கம் ஏற்படாமல் தடுக்க வேண்டும். சீனத்தின் போக்கு காரணமாக நமது வட எல்லையிலுள்ள அண்டை நாடுகளில் நமக்குள்ள செல்வாக்கு குன்றி விடாமலும் பார்த்துக் கொள்ளவேண்டும்.

## கிராம மக்களின் அவல நிலை

இந்தியாவிலுள்ள கிராமப்புறக் குடும்பங்கள் மொத்தத்தில் 2789 கோடி ரூபாய் அளவுக்குக் கடன்பட்டிருப்பதாக ரிஸர்வ் பாங்கு மதிப்பிட்டுள்ளது. கிராமப்புறங்களில் வாழும் குடும்பங்களில் அறுபத்து ஐந்து சதவிகிதத்தினர் கடன் பட்டு வருவதன் மூலமே வாழ்க்கையை நடத்த முடிவதாக ரிஸர்வ் பாங்கு அறிக்கையிலிருந்து தெரிய வருகிறது.

விவசாயம் முதலிய தொழில்கள் புரியும் கிராம மக்கள் கடன் வாங்குவதும் அவற்றை மறுபுறம் தீர்த்துக் கொண்டு வருவதும் சகஜமாகிவிட்டது. ஆனால் அவர்கள் எந்த அளவுக்குக் கடன்பட்டு வருகிறார்கள், எந்த அளவுக்கு அதை தீர்க்கிறார்கள் என்பது கவனிக்கவேண்டிய விஷயம்.

சராசரியில் 500 ரூபாய்க்குக் கடன்பட்டுள்ள குடும்பங்களில் மூன்றில் ஒரு பங்கினரே கடனை ஓரளவேனும் தீர்க்க முடிந்திருக்கிறது. சராசரியில் இக் குடும்பங்கள் கடனில் ஐந்தில் ஒரு பகுதிதான் தீர்க்க முடிந்திருக்கிறது. இத் தகவல் ஒன்றே நமது கிராம மக்களின் அவல நிலையைப் புலப்படுத்துவதற்குப் போதும்.

# என்ன சேதி?

## நந்தா குழம்புகிறார்!

தொழில் துறையில் சர்க்காரின் பிரவேசத்தை விஸ்தரிப்பதால் சோஷலிஸத்தை உருவாக்கிவிட முடியாது என்று உள்துறை மந்திரி ஸ்ரீ நந்தா அவர்கள் கூறியிருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. சர்க்காரின் தொழிலகங்களில் வேலை செய்வதைவிட, தனியாரின் தொழிலகங்களில் வேலை செய்வதையே விரும்புவதாகப் பல தொழிலாளிகள் தம்மிடம் கூறியிருப்பதாகவும் அவர் தெரிவித்திருப்பது இதைவிட மகிழ்ச்சிகரமானவிஷயம்.

ஆயினும், நம்முடைய மகிழ்ச்சி நிலைத்து நிற்க இடமில்லை. ஏனெனில், அவ்வப்போது காங்கிரஸ் மந்திரிகள் இவ்வாறு 'ஆன்ம சுத்தி'ப் பேச்சுக்கள் பேசி, மக்களின் பாராட்டைப் பெறுவது வழக்கமாகிவிட்டது. பேச்சு புது திசையிலிருந்தாலும் சர்க்காரின் காரியங்கள் பழைய போக்கிலேயே தான் சென்று வரும்.

உண்மை நிலவரத்தைப் புரிந்துகொண்டாலும் அதன் காரணத்தைக் காணும் விவேகமும், நிவர்த்தி தேடுகிற தைரியமும் நமது மந்திரிகளுக்குக் கிடையாது. சோஷலிஸ ஸ்வர்க்கத்தைப் பற்றிய தமது பிரமை தீர்ந்ததற்குக் காரணம் 'சில சக்திவாய்ந்த சுயநலக் கூட்டத்தினரின் போக்கைத் தடுக்க முடியாமல் இருப்பதே' என்கிறார் நந்தா. இங்கேதான் அவருடைய சிந்தனைக் குழப்பத்தைக் காண்கிறோம்!

'சக்தி வாய்ந்த ஒரு சுயநலக் கூட்டம்' நாட்டைப் பாழ்படுத்தி வருவதை நாம் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் ஸ்ரீ நந்தா நினைப்பது போல் இந்தக் கூட்டம் தனியார் துறைத் தொழிலதிபர்களைக் கொண்டதல்ல. ஆட்சி போதை தலைக்கேறிய காங்கிரஸின் சுயநலக் கூட்டம்தான் தேசத்தின் ஏழை மக்கள் முன்னேறுவதற்குத் தடையா யிருக்கிறது. இவ்விஷயத்தில் நந்தா குழப்பம் நீங்கித் தெளிவு பெறுவாரா? அல்லது 'மேற்கண்ட செய்தி முழுவதுமே தவறானது' என்று மறுதளித்துத் தமது சகாக்களின் வழக்கத்தைத் தாமும் அநுஷ்டித்துக் காட்டுவாரா?

## உணவு பெருகுமா?

ஆயிரம் மூட்டை நெல் அறுவடை செய்யக்கூடிய வயலில் நெற்பயிர் மழையின்மையால் வாடிக் கொண்டிருந்தது. அந்தச் சோகக் காட்சி உண்மையான அக்கறையுள்ள நில உடைமைக்காரனுக்குத்தான் வேதனை தரும். தான் பணம் கொடுத்து உதவி வயலைவிடச் சற்றுத் தாழ்ந்த மட்டத்திலிருக்கும் தண்ணீரை இறைக்க ஏற்பாடு செய்ய அந்த நில உடைமைக்காரர் முயன்றார். ஆனால் குத்தகைக்காரர்கள் ஏதோ அற்ப விஷயத்தில் தகராறு செய்து மறுத்து விட்டார்கள். பயிர் வாடிப்போய் வருகிறது.

இதைப்பற்றி எழுதும் அந்த நிலச் சொந்தக்காரர் பின்வருமாறு கூறுகிறார்:

"கேரள நாட்டு விவசாயச் சட்டங்கள் என் சொந்த நிலத்தில் நான் நுழையவே அநுமதிக்காதே! பிறகல்லவா அப்பயிர்களுக்குத் தண்ணீர் இறைப்பதைப் பற்றிப் பேச வேண்டும்?"

இப்படிச் சென்ற பத்தாண்டுகளாக நமது நாட்டு விவசாய முறையைப் பாழ்படுத்தி விட்டு, இப்பொழுது உணவுப் பொருள் விஷயத்தில் தன்னிறைவு காண வேண்டுமென்றால் முடியுமா? இது போன்ற நிலை வரக் கூடும் என்று எச்சரிக்கை செய்தவர்களை எள்ளிநகையாடியவர்கள் இன்று 'தன்னிறைவு, தன்னிறைவு' என்று கூக்குரலிட்டால் எப்படிச் சாத்தியமாகும்? விவசாயத் துறையில் புதிய நம்பிக்கையும் ஊக்கமும் ஏற்பட, இதுபோன்ற விதிகளும் சட்டங்களும் ரத்து செய்யப்பட வேண்டும். அப்போதுதான் நாட்டில் விவசாயத்தில் அநுபவமும் ஆர்வமும் மிக்கவர்கள் முதலீடு செய்து உணவைப் பெருக்க முன்வருவார்கள்!

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஜவான்களின் தோள் மீது உட்கார்ந்து கொண்டு தேர்தல் வெற்றி பெற்று விடலாம் என்ற ஆசையின் மேல் சில காங்கிரஸ் காரர்கள் பொதுத் தேர்தலை ஒரு வருஷம் முன்னதாகவே — அதாவது 1966லேயே— நடத்தி விடலாம் என்று எண்ணியதற்குச் செயலுருவம் தர பிரதமரவர்களால் இயலவில்லை. நமது ராணுவ வீரர்களின் தியாகங்களையும், அதிலிருந்து தோன்றியுள்ள கீர்த்தியையும் ஆள்கிற கட்சியின் மீது மாயமாக ஏற்றிச் சூட்டோடு சூடாகத் தேர்தல் நடத்தினால் அமோக வெற்றி பெறலாம் என்பது காங்கிரஸ்காரர்களின் ஆசை. ஜவான்களின் சாதனைகளையும் தியாகங்களையும் கண்டு மக்கள் அடைந்துள்ள பிரமிப்புக் கிளர்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டு, உள்நாட்டு விவகாரங்கள் யாவற்றிலும் காங்கிரஸ் சர்க்கார் செய்துள்ள ஊழல்களையும் பொருளாதாரத்திலும் தொழில் துறையிலும் விவசாயத்திலும் அது உண்டாக்கியுள்ள உற்பாதங்களையும் மறக்கச் செய்து விடலாம் அல்லவா? காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த கனவான்கள் தான் யுத்த களத்தில் போரிட்டு நாட்டுக்கு வெற்றி பெற்றுத் தந்தார்கள் என்ற பிரமையை உண்டாக்கி, இதனால் ஆளும் கட்சி செய்துள்ள தவறுகளுக்கெல்லாம் மக்களிடம் மன்னிப்புப் பெற்று விடலாம் என்பது காங்கிரஸின் ஆசை. அரசியலில் இதைவிட அருவருக்கத் தக்க ஆபாசம் வேறு எதுவும் இருக்க முடியாது.

ஆனால் தேர்தல் கமிஷனர், நிர்வாக சௌகரியங்களை முன்னிட்டுத் தேர்தலை ஓராண்டு முன்னதாக நடத்துவது அசாத்தியம் என்று பிரதமருக்கு யோசனை சொன்னதாகத் தெரிகிறது. தேர்தலை உடனடியாக நடத்த வேண்டும் என்று கூறியவர்களெல்லாம் இப்போது தங்கள் யோசனை பற்றி வெட்கப்படுவதாகத் தோன்றுகிறது. இது போல் தாங்கள் யோசனை கூறவே இல்லை என்றும், ஏதோ தமாஷைப் பெரிதுபடுத்தி விட்டதாகவும் கூறித் தட்டிக் கழிக்கப் பார்க்கிறார்கள்.

ஆயினும், இந்த அம்பு பயன்படாவிட்டாலும் காங்கிரஸின் அம்பறாத்தூணியில் வேறு அம்புகள் இருக்கின்றன.

❀❀❀

சூயஸுக்குக் கிழக்கிலுள்ள நாடுகளோடு உள்ள ராணுவத் தொடர்புகளை பிரிட்டன் நீக்கிக் கொள்ளவேண்டுமென்று டோரிக் கட்சித் தலைவர் பவல் அவர்கள் கூறியிருப்பதாகச் செய்தி வந்துள்ளது. இது மிகவும் ஆபத்து விளைவிக்கக்கூடிய கருத்து. பிரிட்டனின் ராணுவ உதவிகள் ரத்தாவதால் ஏற்படும் சூனியத்தை இட்டு நிரப்புவதற்கு அமெரிக்கா முன்வராவிடில், பவல் கொள்கையின் விளைவாக ஆசியாவில் கம்யூனிஸ விஸ்தரிப்பு அபாயகரமாகப் பரவிவிடும். பிரிட்டன் சூயஸுக்குக் கிழக்கேயுள்ள பகுதிகளில் தனது ராணுவப் பொறுப்புக்களைக் குறைத்துக் கொள்ளக் கூடுமென்றும், இது காரணமாக இப்பகுதிகளில் கம்யூனிஸப் பரவலைத் தடுப்பதற்காக அமெரிக்கா அதிகப் பொறுப்பேற்க வேண்டியிருக்கும் என்றும் அமெரிக்கர்கள் ஓரளவு முன்கூட்டியே உணர்ந்து வருவதாகத் தெரிகிறது.

சீனாவுக்கும் ருஷியாவுக்குமிடையே ஏற்பட்டிருக்கும் பேதம் காரணமாக, ஆசியாவுக்குள்ளேயே இரு தரப்புக்கள் தோன்றி, அவையே ஒன்றையொன்றைச் சமாளித்துக் கொள்ளக் கூடும் என்ற கற்பனையின் மீது பவல் அவர்கள் ஆசிய நாடுகள் விவகாரத்தில் மேல்நாடுகள் பொறுப்பேற்க வேண்டிய அவசியமில்லை என எண்ணுகிறார் போலும்! ருஷியச் சார்பில் சில ஆசிய நாடுகளும், சீனச் சார்பில் மற்ற ஆசிய நாடுகளுமாகச் சேர்ந்து ஒன்றையொன்று இழுத்துப் பிடித்துக் கொள்ளும் என்பது வெறும் பிரமை. ருஷியாவாயினும், சீனாவாயினும் எதன் பிடி ஓங்கினாலும் மொத்தத்தில் ஆசிய நாடுகளில் கம்யூனிஸ ஏகாதிபத்தியமே பரவும் என்பதை உணர்பவர்கள் இத்தகைய ஒரு நிலைக்கு ஆசியா முழுவதையும் உட்படுத்த பவல் ஒருகாலும் பிரியப்பட மாட்டார் என்று நம்புவார்கள்.

சீனாவுக்கும் ருஷியாவுக்குமிடையேயுள்ள போட்டி இன்னும் பகையாக உருவாகிவிடவில்லை. ஆயினும் இப்படி எண்ணித்தான் கம்யூனிஸச் சார்பில்லாத நாடுகளில் சில இவ்விரு நாடுகளில் ஒன்றுக்கு எதிராக மற்றது உதவுமென நம்பிப் புதைச் சேற்றில் அழுந்தக்கூடிய ஆபத்து ஏற்பட்டிருக்கிறது

இதையெல்லாம் பிரிட்டனின் டோரிக் கட்சித் தலைவர் உணர்ந்திருக்கக் கூடும். எனவே, பிரிட்டிஷ் சர்க்காரின் செலவுகளைக் கட்டுப்படுத்தும் நோக்கத்திலேயே அவர் அதன் ராணுவத் தொடர்புகளைக் குறைப்பது பற்றிப் பேசியிருப்பார் என்று நாம் ஊகிக்கலாம். எது எப்படியாயினும், ருஷியாவும் சீனாவும் நிரந்தரமாகப் போட்டியிட்டு வரும் என்றும், இந்தப் பரஸ்பரப் போட்டி காரணமாகவே கம்யூனிஸச் சார்பில்லாத நாடுகள் பிழைத்துக் கொள்ளும் என்றும் நினைப்பது அஜாக்கிரதையாகும். அமெரிக்காவின் சிந்தனை இந்த ரீதியில் செல்லாது என்று நம்புவோமாக.

❀❀❀

நிதிமந்திரி இன்னமும் பதவியில் இருக்கிறார். ஆகவே அவர் கணக்குப்படி தேசம் இன்னும் திவாலா நிலையைப் பிரகடனப்படுத்தவில்லை.

நிதி மந்திரி என்ன கூறினாலும் உண்மை நிலையை 'பாங்க் ஆப் இந்தியா'வின் வருடாந்திர அறிக்கை சந்தேகமற வெளிப்படுத்துகிறது. 1964 அக்டோபரிலிருந்து 1965 செப்டம்பர் வரையில் தேசத்தின் தொழில் நிலையை ஆராயும் இவ்வறிக்கை, இந்த இடைக்காலத்தில் முதலீடு செய்யக் கூடியவர்கள் யாவரும் மிகவும் சோர்வுற்றிருந்தார்கள் என்று கூறுகிறது. அரசியல், பொருளாதார, ராணுவ நெரிசல் காரணமாக முதலீடு செய்யக் கூடியவர்கள் மேன்

மேலும் நம்பிக்கை இழந்து விட்டதாகவும், விலைகள் மேன்மேலும் உயர்ந்து வருவதாகவும், அந்நியச் செலாவணியை ஈடுகட்டும் பிரச்னை தீவிர மடைந்திருப்பதாகவும் அறிக்கை கூறுகிறது.

1962—63ல் மொத்த விலையின் குறியீட்டு எண் நூறு என்று வைத்துக் கொண்டால், இந்த விலை 1964 அக்டோபர் முடிவில் 155.7 ஆக உயர்ந்துள்ளது; நிகழும் ஆண்டில் மேலும் உயர்ந்து செப்டம்பர் தொடக்கத்தில் 166.8 ஆகியுள்ளது. உணவுப் பண்டங்கள், ஆலைத் தொழிலுக்கு உரிய மூலப்பொருள்கள் இவற்றின் விலைவாசி ஏறி வந்ததே மொத்த விலை ஏறுவதற்குக் காரணம் என்று கூறப்பட்டுள்ளது. சென்ற பல ஆண்டுகளாகத் தேசப் பொருளாதாரத்தில் புகுந்து இதற்கு முன் கேட்டிராத நேர்முக — மறைமுக வரிகளிலும், கடன்களிலும் நாட்டை ஆழப் புதைத்தபின் காங்கிரஸ் ஆட்சியில் இந்தியா காட்சியளிக்கும் கோலம் இந்த லட்சணத்தில் இருக்கிறது. நான்காம் திட்டம் உள்படச் சுமார் நாற்பதாயிரம் கோடி ரூபாய்களுக்குப் பிரம்மாண்டமான திட்டங்கள் போட்டுத் தேசப் பொருளாதாரத்தில் இத்தகைய ஒரு நிலையை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

தேசத்தின் எல்லா நடப்புக்களின் மீதும் எவ்வித நிபந்தனையுமின்றிப் பூரண ஆளுகை பெற்றுள்ள ஒரு கட்சி - மிகச் சமீப காலம் வரையில் உலக நாடுகளிடமிருந்தெல்லாம் தாராளமான உதவி பெற்று வந்த ஒரு கட்சி - பொருளாதாரத்தில் இப்பேர்ப்பட்ட படுதோல்வி அடைந்திருக்கிறது! 'இமாலயத் தவறு' என்ற சொற்றொடரைப் பொருத்துவதற்கு இதைவிடப் பாத்திரமான தோல்வி எதுவும் கிடையாது.

ஃஃஃ

நாட்டுக்கு உணவு படைக்கும் விவசாயிக்கு வெகுமதி அளிக்க வேண்டுமேயன்றி வரி விதிக்கக் கூடாது என்று காந்தியடிகள் வலுவாகக் கருதியதை நினைவூட்டுகிறேன். நிலத்துக்கு 'ரிவினியூ' என்கிற பெயரில் விதிக்கப்படுகிற வரியை நீக்கிவிட வேண்டுமென அவர் தீர்மானமாக விரும்பினார். தேச பிதாவுக்கு மரியாதை செலுத்த வேண்டுமாயின் அதை அவரது கருத்துக்கிசைந்த காரியங்களின் மூலம் வெளிப்படுத்துவோம். அர்த்தமற்ற, அல்லது சுயநலச் சார்புள்ள வார்த்தை ஜாலங்களால் மகாத்மா அவர்களுக்கு மரியாதை செலுத்துவதில் பொருள் இல்லை.

ஃஃஃ

ரண சிகிச்சை மூலம் பித்தப்பை அகற்றப்பட்ட அமெரிக்க ஜனாதிபதி ஜான்ஸன் அவர்கள் விரைவிலேயே ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறி, பூரண தேக ஆரோக்கியம் பெற்றுத் தமது பணியைத் தொடர வேண்டுமென உலக முழுவதிலுமுள்ள அன்பர்கள் பிரார்த்தித்தது பலித்து விட்டது.

லிண்டன் ஜான்ஸன் அவர்கள் நல்ல பலசாலி. அமெரிக்கா, வைத்தியத் துறையில் தேர்ந்த முன்னேற்றம் கண்டிருக்கிறது. ஆயினும் மற்ற அம்சங்களையும் நாம் கவனிக்க வேண்டும். ஆறே காலடி உயரமும், 220 ராத்தல் எடையுமுள்ள ஜான்ஸன், 1942ல் கப்பற் படை அதிகாரியாக இருந்தபோது நுரையீரல் ரணத்துக்கு ஆளானவர். அதிலிருந்து அவருக்கு அடிக்கடி கடுமையான ஜலதோஷம் பிடிப்பதுண்டு. 1948லிருந்து சிறுநீர்ப் பையில் சேர்ந்து வரும் கற்களை அகற்றுவதற்காகப் பல முறை ரண சிகிச்சை பெற்றவர். 1955ல் கடுமையான இதய நோய்க்கும் ஆளானவர். எனினும் ஓய்வே கொள்ளாமல் கடினமாக உழைப்பவர் அவர். வேலை நேரத்துக்கு வரம்பு கட்ட முடியாமல் நீண்ட நேரம் உழைத்து வரும் அவருக்குப் பசி அதிகம். இது போன்ற நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிப்பது டாக்டர்களுக்கு மிகவும் சிரமம். எனினும், எல்லா இடையூறுகளுக்கும் மேலாக மக்களைக் கவனித்துக் கொள்ள ஆண்டவன் ஒரு வழி அறிவான்!

ஃஃஃ

நிபுணர்களான நிருபர்களின் சுருக்கமான கருத்து வருமாறு: 'இந்தோனேசியாவில் சீனக் கம்யூனிஸ்ட் தலைவர் மாவ்—ஸே—துங் தோல்வி கண்டு வருகிறார். இந்தோனேசியக் கம்யூனிஸ்ட்கள் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்ற முயலும் வரையில் சீனக் கம்யூனிஸ்ட்கள் தங்கள் விருப்பப்படியே இந்தோனேசிய சம்பவங்களை நடத்திக் கொண்டனர். கடைசியில் இந்தோனேசியக் கம்யூனிஸ்ட்கள் தங்கள் முயற்சியில் தோற்றதோடு, சுகர்ணோவும் பலமிழந்து, மாவ்—ஸே—துங்கும் வெற்றி வாய்ப்பை இழந்துவிட்டார். இந்தோனேசியாவில் கம்யூனிஸத்துக்கு எதிர்ப்பு அதிகரித்து வருகிறது.'

ஜெர்மன் நிருபர் ஒருவர் பின்வருமாறு கருதுகிறார்: 'தேசிய சக்தி, சமய சக்தி, கம்யூனிஸம் மூன்றையும் இணைப்பதில் முன்பு வெற்றி கண்டு வந்த சுகர்ணோ பிற்பாடு அவை சிதறிப் போனதைக் கண்டு கொண்டார். மும்முனைச் சக்திப் போராட்டத்தில் சுதேச ராணுவத்தின் பலத்தைக் குறைக்க வேண்டுமென்ற கருத்தில் கம்யூனிஸ்ட் கட்சியைப் பலப்படுத்த முயற்சி எடுக்கலானார். கம்யூனிஸ்ட்களின் கையில் ஆட்சியைத் தராமலே அவர்களைக் கொண்டு ராணுவ சக்தியைக் குறைக்க எண்ணினார். ராணுவத்திலேயே கம்யூனிஸ செல்வாக்குக்கு அதிக இடம் அளித்தார். உடனே சுதேசிய உணர்ச்சி கொண்ட ராணுவத்தினர், இதில் சீனத்தின் வேலைத்தனத்தை உணர்ந்து எதிர்ப்புத் தெரிவித்தனர். அவர்களுக்கு சுகர்ணோ இணங்காததாலேயே அவரது ஆட்சியைக் கவிழ்க்க முயற்சி மேற்கொள்ளப்பட்டது. ராணுவத் திட்டத்தை முறியடித்து விடலாம் என்று எண்ணிய சுகர்ணோ தம்மிடத்தைப் பிடித்துக் கொள்ள ஒரு புரட்சிக் குழுவே தயாராக இருப்பதைக் கண்டு திடுக்கிட்டார். சீனத்தின் நலன்களுக்கெல்லாம் ஆதரவு தந்து, ஐ. நா.விலிருந்து வெளியேறிய சுகர்ணோவின் தோல்வி சீனத்துக்கும் தோல்வியாகும். எனினும், அது ஜாக்கிரதையுடன், சுகர்ணோ எவ்வாறேனும் கம்யூனிஸ்ட்களின் கைக்குள் வர வேண்டும் என்று சூழ்ச்சி செய்து வருகிறது.'

## செய்திப் படங்கள்





(1) லாகூரில் இச்சோஹில் பகுதியில் நடந்த கடுமையான போரில் மடிந்த எதிரிகளின் சடலங்களை பாகிஸ்தானியரின் கோரிக்கைக்குப் பெருந்தன்மையுடன் இணங்கி அவர்களிடமே ஒப்படைத்தார்கள் நம் படை வீரர்கள். பாகிஸ்தானியர் இறந்தவர்களின் உடல்களுடன் திரும்புவதைக் காணலாம் இந்தப் படத்தில்.

(2) லாகூர் டோக்ரை பகுதியில் நடந்த கடுமையான சண்டையில் தீரமுடன் போரிட்ட இந்திய ஜவான்களை ராணுவ மந்திரி சவான் தட்டிக் கொடுத்துப் பாராட்டுகிறார்.

(3) பர்மா, கானடா, பிரான்சு, இத்தாலி, அமெரிக்கா ஆகிய நாடுகளைச் சேர்ந்த ராணுவப் பார்வையாளர்கள் லாகூர், சயால்காட் ஆகிய பகுதிகளுக்குச் சென்று பாகிஸ்தான் போரில் நம் இந்தியப் படைகளின் சாதனைகளை நேரிடையாகக் கண்டு கொண்டனர்.

(4) கவிஞர் தமிழழகன் பாடிய திரு காமாட்சி பிரபந்த நூல்களின் அரங்கேற்று விழா அக்டோபர் 6ந் தேதி திரு கி. வா. ஜகந்நாதன் அவர்களின் தலைமையில் நடந்தது. ஸ்ரீ டி. கே. சண்முகம் திரு தமிழழகனுடைய கவிதைத் திறமையை வியந்து பாராட்டி, அவருக்குச் 'சந்தக் கவிமணி' என்ற பட்டத்தையும், சரிகைச் சால்வையையும் வழங்கிக் கௌரவித்தார்.





# வெற்றித்திருநகர்



**அகிலன்**



அத்தியாயம் இரண்டு

## சோறுடைய சோழநாட்டில்.....

தென்காசியின் சித்திரா நதிக் கரையிலிருந்து புறப்பட்டவர்கள் சோழ நாட்டின் காவேரி நதியைக் கடந்து வந்து விட்டார்கள். அவர்கள் கொண்டு வந்திருந்த உணவுப் பொருள்கள் தீர்ந்து போய் இரண்டு தினங்களாகி விட்டன. சோறுடைய சோழ நாட்டுக்குள் புகுந்து விட்டால் உணவு கிடைப்பதில் தடையிருக்காது என்று நம்பிக் கொண்டிருந்தார் சந்திரசேகர பாண்டியர். அவர்களிடம் போதுமான அளவுக்குப் பொன் இருந்தது.

ஆனால் சோழ நாட்டிலும் சோற்றுப் பஞ்சம் தலைவிரித்தாடத்தான் செய்தது. எந்தப் பொன்னி நல்லாள் அந்த நாட்டு மக்களுக்குக் காலங் காலமாகச் செந்நெல்லைக் கொட்டிக் கொட்டிக் கொடுத்தாளோ, அவளே அங்கு நல்லாட்சி நிலவாதது கண்டு அடிக்கடி சீற்றங் கொண்டாள். வெள்ளம் பெருக்கெடுத்த காலங்களில் வெள்ளத்தினால் பஞ்சம்; மழையற்ற காலங்களில் வறட்சியால் பஞ்சம்; காவேரிக்கு அணைகளிட்டுக் கட்டிக் காத்து வந்த சோழப் பேரரசர்

களோ, பாண்டியப் பேரரசர்களோ அப்போது இந்த மண்ணில் இல்லை.

முன்னாள் சோழப் பேரரசர்களது விருந்தோம்பும் பண்பின் உறைவிடங்களாகச் சோழ நாட்டுக் கோவில்கள் திகழ்ந்த காலம் ஒன்றிருந்தது. நாடு முழுதும், ஊர்தோறும், தலை நிமிர்ந்து நின்ற நூற்றுக் கணக்கான கோவில்கள் அந்தக் காலங்களில் வழிப்போக்கர்களுக்கு உணவளித்து வந்தன. நிழல் கொடுத்து அவர்களை இளைப்பாறச் செய்தன. ஆனால், அவை யெல்லாம் சோழர்கள் சோழர்களாகவும் பாண்டியர்கள் பாண்டியர்களாகவும் இருந்த காலங்களில் நடந்த நிகழ்ச்சிகள்.

காலம் மாறி விட்டது. வழிப்போக்கர்களுக்கும் பசித்துக் களைத்தவர்களுக்கும் சோழ நாட்டு மக்கள் தங்கள் வீட்டுக் கதவுகளை அடைத்தார்கள். கோவில்களின் கதவுகளும் எப்போதும் அடைத்துக் கிடந்தன. வழிபாடுகளோ, ஆடல் பாடல்களோ, விருந்தோம்புதலோ அந்த மண்ணில் மறக்கப்பட்ட நிகழ்ச்சிகள் போல் தோன்றின.

திருவல்லபனின் வீரர்கள் சிலர் பெரும் பொருள் கொடுத்துத் தானியங்களும் காய் கறிகளும் வாங்கி வந்தார்கள். வழக்கம்போல் ஊர்ப்புறத்துப் பாழ் மண்டபம் ஒன்றில் சமையல் நடந்து கொண்டிருந்தது. கற்களை அடுக்கி வைத்து நெருப்பு மூட்டிச் சோறு பொங்குவதில் முனைந்திருந்தார்கள் சிலர். தமக்காகத் துணைக்கு வந்திருக்கும் திருவல்லப பாண்டியன் அது போன்ற துன்பங்களுக்குப் பழக்கப்படாதவன் என்பதைச் சந்திரசேகர பாண்டியர் அறிவார். அவனோ எதையும் பொருட்படுத்தாதவன் போல் வீரர்களில் ஒருவனாகச் சேர்ந்து உழைத்து வந்தான்.

"திருவல்லபா ! நடப்பது வீரசோழனின் ஆட்சிதான். இருந்தும் நாடு இருக்கும் நிலையைக் கண்டாயா?" என்றார் பாண்டியர்.

"செங்கோலுக்குரிய பண்பையே வீர சோழன் பறி கொடுத்து விட்டான்!"

"இந்த நிலையில் என்னுடைய செங்கோலையும் அவன் பறித்துக் கொண்டு விட்டான்!"

திருவல்லபனுக்கு இது சுருக்கென்று தைத்தது. பாண்டிய நாட்டில் ஒரு புது விழிப்பை அவர் ஏற்படுத்த முனைந்த சமயத்தில், திடீரென்று அவர் மீது பாய்ந்தான் வீரசோழன். எலும்புக் கூடாய்க் கிடந்த பாண்டிய மண்ணில் மீண்டும் உழவும் தொழிலும் பெருகப் பாடுபட்டார் பெரிய பாண்டியர். ஆகவே, அவர் தம் படைப் பெருக்கத்தில் கவனம் செலுத்த வில்லை. அதை நன்கு பயன்படுத்திக் கொண்டான் வீரசோழன்.

அப்போது சாலையோரமாகத் தொலைவில் காவலுக்கு நின்று கொண்டிருந்த அப்துல் தன் குதிரையைத் திருப்பிக் கொண்டு விரைந்து வந்தான்.

"யாரோ இரண்டு பேர்கள் குதிரைகளில் வருகிறார்கள்; ஆயுதங்கள் வைத்திருப்பதாகவும் தெரிகிறது."

சந்திரசேகர பாண்டியரின் முகம் வெளுத்தது. திருவல்லபன் தனது உடைவாளை இறுகப் பற்றிக் கொண்டு குதிரை கட்டியிருந்த திசையில் திரும்பிப் பார்த்தான். வீரர்கள் அனைவரும் அப்படியே தங்கள் வேலைகளையெல்லாம் விட்டு, ஆயுதங்களை



எடுத்துக் கொண்டு, ஒரே அணியாகத் திரண்டு நின்றார்கள்.

''இரண்டு பேர்கள் என்பதால் இரண்டே விநாடிகளில் முடித்து விடலாம்'' என்றான் அப்துல்.

''இந்த இருவரும் முன்னோடிகளாக இருந்து, இவர்களுக்குப் பின்னால் இன்னும் பலர் வந்தால்?'' என்று ஐயத்தை எழுப்பினார் பெரிய பாண்டியர்.

''பொறுத்திருந்து பார்ப்போம். அவர்களாக வாள் வீசாத வரையில் நாம் அவர்களைத் தாக்க வேண்டாம்'' என்றான் திருவல்லபன்.

வீரர்கள் எச்சரிக்கையோடு அவர்களது வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். எதிரில் வந்து கொண்டிருந்த குதிரைகள் அவர்களை எதிர்க்க வந்தவையாகத் தோன்றவில்லை. குதிரைகளின் மீதிருந்தவர்களும் சோர்வும் தளர்ச்சியுமாய்க் காணப்பட்டனர். அச்சத்தோடும் வியப்புடனும் அவர்கள் விழித்தார்கள்.

வந்தவர்களில் இளைஞனாகத் தோன்றியவனுக்கு இருபத்தைந்து வயதிருக்கலாம். அகன்று பரந்த விழிகளும் எடுப்பான நாசியும் உருண்டு திரண்ட தோள்களுமாய்த் தோன்றிய அவன், ஒரு நாட்டுப்புறத்து இளைஞனைப் போல் உடுத்திக் கொண்டிருந்தான். அவனோடு வந்த மற்றொரு மனிதருக்கு அவனைவிடப் பத்துப் பன்னிரண்டு வயது அதிகமாக இருக்கும். அவரும் எடுப்பான தோற்றமுடையவராகத்தான் இருந்தார். புழுதி படிந்திருந்த அவர்களுடைய உடைகளிலிருந்து அவர்கள் நெடுந்தூரப் பயணத்தை மேற்கொண்டவர்கள் என்பது புலனாகியது. இரு சாராரும் ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக் கொண்டனர்.

பிறகு, மண்டபத்தையொட்டி அடுப்பில் சோற்றுப் பானை பொங்குவதைக் கண்டு விட்ட இளைஞன் எதிரில் நின்றவர்களைச் சிறிதும் பொருட்படுத்தாதவன் போல், ''முதலியாரே! அங்கு பாருங்கள்!'' என்று சுட்டிக் காட்டினான்.

''சோழ நாட்டில் சோறு பொங்குவதை இப்போதுதான் பார்க்கிறோம்!'' என்று கூறினார் அவர்.

''பருப்பும் நெய்யுமாய் மூக்கைத் துளைக்கிறது, முதலியாரே! இப்போது என்னைவிட்டால் அந்த ஒரு பானைச் சோற்றையும் நானே ஒரு கை பார்த்து விடுவேன். பசி! அகோரப் பசி!''

''அதற்குள் இவர்கள் நம்மையே ஒரு கை பார்த்து விடுவார்கள் போலிருக்கிறது. பசி எடுத்த புலிகளைப் போல் விழிக்கிறார்கள்!'' என்றார் முதலியார்.

குதிரைகளிலிருந்து அவர்கள் குதித்தார்கள். இளைஞன் நேரே திருவல்லப பாண்டியனின் அருகில் வந்து நின்றான். ''ஐயா! வாளில் ஒரு கையும் கண்களில் கூர் வேலுமாய் நீங்கள் விழிக்கிற விழிப்பே எங்களுக்கு அச்சம் தருகிறது. எங்களால் உங்களோடு இப்போது வாள் வீச முடியாது. பசி வந்தால் பத்தும் பறந்துபோகும் என்பார்கள். எங்களுக்குப் பசி வந்து பத்து நாழிகைப் பொழுதுக்கு மேலாகிறது. முதலில் சோறு போடுங்கள். பிறகு வாள் வீசுவோம்!''

''யார் நீங்கள்?'' என்று அதட்டினான் திருவல்லபன்.

''வீரர்கள்; அதாவது வீரர்களாக இருந்தவர்கள்!'' என்றான் இளைஞன்.

''நாங்கள் தொண்டை நாட்டைச் சேர்ந்த தமிழர்கள். வடக்கே விஜயநகரத்துப் படையில் போர்வீரர்களாக இருந்தோம். இப்போது அங்கே வீரர்களுக்கு வேலையில்லை. அதனால் தெற்கே புறப்பட்டு விட்டோம்'' என்றார் முதலியார்.

''விஜயநகரத்தில் வீரர்களுக்கு வேலை இல்லையா!'' என்று வியப்போடு கேட்டார் சந்திரசேகர பாண்டியர்.

''கிருஷ்ணதேவராயர் போர்க் களங்களில் பெற வேண்டிய வெற்றிகளையெல்லாம் பெற்று முடித்து விட்டார். பகைவர்கள் எல்லோருமே பணிந்து போய் அவருடைய நட்பை நாடுகிறார்கள். நான்கு திசைகளிலும் அவர் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நடுங்குகிறார்கள். ராயரின் காலம் வரையில் இனி நாட்டில் போர் இருக்காது. அதனால் எங்களுக்கு அங்கு வேலை இல்லை'' என்றான் இளைஞன்.

அவர்கள் இருவருடைய குரலிலும் தெலுங்கின் சாயல் கலந்து ஒலித்ததால் அவர்கள் விஜயநகரத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டுமென்றே பாண்டியர்கள் இருவரும் நம்பினார்கள். பகைவர்கள் அல்லர் என்ற எண்ணமும் அவர்களுக்கு ஏற்பட்டு விட்டது.

''சோழ நாட்டுக்கும் பாண்டிய நாட்டுக்கும் போர் நடக்கிறதென்று கூறினார்கள். ஏதாவது ஒருவர் பக்கம் சேர்ந்து போரிட வேண்டுமென்று புறப்பட்டிருக்கிறோம்'' என்றான் இளைஞன்.

''சோழ நாட்டுப் படையில் சேரலாமென்று வந்தீர்கள் போலும்!'' என்றான் திருவல்லப பாண்டியன்.

''அப்படியொன்றும் இல்லை. சோழ நாட்டில் உள்ள சோற்றுப் பஞ்சத்தைப் பார்த்த பிறகு பாண்டிய நாடே தேவலாம் என்று தோன்றுகிறது. நாங்கள் தொண்டை நாட்டுத் தமிழர்கள். போர் செய்வது எங்கள் தொழில். எங்களுக்குச் சோழ நாடும் ஒன்றுதான்; பாண்டிய நாடும் ஒன்றுதான். யார் எங்களை அமர்த்திக் கொண்டாலும் அவர்களுக்காக நாங்கள் போர் செய்வோம்!''

''போர் முடிந்து வெகு நாட்களாகின்றன; பாண்டிய நாடு தோற்று விட்டது'' என்றான் பாண்டியன்.

இளைஞனும் முதலியாரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். ''நாங்கள் ஏமாந்து போனோம்; இங்கேயும் எங்களுக்கு வேலை கிடைக்காது போல் தோன்றுகிறது'' என்றான் இளைஞன்.

பிறகு சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, ''ஒரு முக்கியமான செய்தி!'' என்று திருவல்லப பாண்டியனிடம் நெருங்கினான். ''பேரரசர்களும் பெரும் படைகளும் தமிழ் நாட்டில் இல்லாததால், முன்பு படைவீரர்களாக இருந்தவர்கள் இப்போது தங்கள்

ேரத்தையும் உழைப்பையும் மிச்சமாக்கும் பஜாஜ் வீட்டு வேலை உபகரணங்களைக் கொண்டு ங்கள் இல்லத்தை அழகுபடுத்தி வேலைகளைத் திறம்படச் செய்யுங்கள். கண்ணைக் கவரும் அமைப்பும், உத்தரவாதமான நீடித்த உழைப்பும் உடைய இக் கருவிகள் அனைத்தும் உங்கள் க்திக்கு உட்பட்டவைதான்.



# பஜாஜ்

# உபகரணங்களின் உதவியால் வாழ்க்கை பயனடைகிறது

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45-47, வீர் நரிமன் ரோடு, பம்பாய்-1.
இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு




eros' BE-231 G TM

வாள் வீச்சையும் வீரத்தையும் வழிப்பறிக் கொள்ளைகளில் காட்டி வருகிறார்களாம் ;— உங்கள் கூட்டத்தைப் பார்த்தபோது நாங்கள் அப்படித்தான் நினைத்தோம் ; நீங்கள் விரும்பினால் நாங்கள் அதற்கும் சித்தமாக இருக்கிறோம் !''

'தமிழ் நாட்டின் நிலை இவ்வளவு தாழ்ந்து போய் விட்டதே!' என்று நினைத்து மனம் குமுறினார் சந்திரசேகர பாண்டியர். படை வீரர்கள் பரம்பரை தங்களுக்கு ஆதரவு இல்லாத காரணத்தால் கள்வர் பரம்பரையாக மாறிக் கொண்டிருந்தது. வழிப்பறி, கொள்ளை, கொலை இவையே தங்களது வீரத்துக்கு எடுத்துக்காட்டு என்று அது நம்பத் தொடங்கி விட்டது. உழவோ, தொழிலோ செய்து பழக்கமில்லாததால் அவர்களுக்கு வழிமறித்து வாள் சுழற்றுவதே தொழிலாகவும் போய் விட்டது ! நாடெங்கிலும் கள்வர் பயம் நீக்கமற நிறைந்துவிட்ட காலம் அது.

தங்களுடைய வீரர்களைக் கலைந்து போகும்படி கட்டளையிட்டு விட்டுச் சிறிது நேரம் திருவல்லபனும் சந்திரசேகர பாண்டியரும் தனித்துப் பேசிக் கொண்டார்கள். வந்திருப்பவர்கள் இருவரும் வெறும் போர் வீரர்களாக இருக்க முடியாது என்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டு விட்டது. விஜய நகரத்து ஆட்கள் என்பதிலும் அவர்களுக்கு ஐயம் எழவில்லை. ஆகவே, அவர்களை விருந்தினர்களாக உபசரித்து அனுப்புவதே ஏற்றது என்ற முடிவுக்கு வந்தார்கள்.

வந்தவர்கள் இருவருக்கும் முதலில் உணவு பரிமாறப் பெற்றது. சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டே, ''இப்படி ஒரு விருந்து போட்ட உங்களுக்காக எங்கள் உயிரையே கொடுக்கலாம் என்று தோன்றுகிறது '' என்றான் இளைஞன்.

''எந்த நன்றியை மறந்தாலும் உப்பும் சோறும் போட்ட நன்றியை மட்டும் மறக்கவே கூடாது'' என்றார் முதலியார்.

''சோழ நாட்டுக் குடிமக்களுக்கு ஏன் சோறு கிடைக்க வில்லை என்ற இரகசியத்தை இங்கு வந்த பிறகுதான் நான் கண்டு பிடித்தேன்'' என்றான் இளைஞன். ''வீர சோழர், அவருடைய சிற்றரசர்கள், அதிகாரிகள் ஒவ்வொருவரும் நூற்றுக்கணக்கான மனைவிகளை மணந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய குழந்தை குட்டிகளோ ஆயிரக்கணக்கானவர்கள். ஆறில் ஒரு பங்கு திறை வாங்காமல் படிக்குப் பாதி வாங்கியும் இந்தக் குடும்பங்களுக்குச் சோறு போட்டு மாளவில்லை. அரசர்களும் அதிகாரிகளும் இங்கு குடிமக்களையே அடித்துச் சாப்பிடுகிறார்கள். நான் வந்தாலும் வரக் கூடும்!''

''நண்பரே, நீங்கள் யாராக இருந்தாலும் சரி; ஆனால் வேலை தேடித் திரியும் ஓர் எளிய வீரர் என்று மட்டும் எங்களை நம்பச் செய்யாதீர்கள்!'' என்று அந்த இளைஞனின் கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டே கூறினான் திருவல்லபன்.

திடுக்கிட்டான் இளைஞன்.

''இந்த நாட்டை நீங்கள் சுற்றிப் பார்த்திருக்கிறீர்கள்; இதன் துன்பங்களை உணர்ந்து கொண்டிருக்கிறீர்கள்; அவற்றின் மூலகாரணங்களையும் ஆராய்ந்திருக்கிறீர்கள். என்றாலும் உங்களைப் பற்றிய விவரங்களை நாங்கள் கேட்க விரும்பவில்லை; நீங்கள் கூறமாட்டீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும் '' என்றான் திருவல்லப பாண்டியன்.

''நண்பன் என்று என்னை அழைத்தீர்களல்லவா? அதையே நான் இறைவனின் திரு வாக்காக ஏற்றுக் கொள்கிறேன். அதுவே இப்போதைக்குப் போதும்'' என்று உள்ளுணர்வின் உருக்கத்தோடு கூறினான் இளைஞன்.

## அத்தியாயம் மூன்று

# விசுவநாதன்

**வ**ந்தவர்கள் இருவரும் வயிற்றுக்கு வஞ்சனை செய்யாமல் நான்கு பேர்கள் உண்ணக் கூடிய உணவுக்கு மேல் உண்டு தீர்த்தார்கள். பிறகு தாம்பூலம் தரித்துக் கொண்டு சிறிது களைப்பாறினார்கள். அடுத்தாற்போல் மெல்ல எழுந்து அந்த இடத்தைச் சுற்றி வந்தார்கள். வீரர்கள் அனைவரது சாப்பாடும் நடந்து முடிந்தது. திருவல்லப பாண்டியனும் அப்துலும் எஞ்சியிருந்தவற்றைத் தங்களுக்குள் பகிர்ந்து சாப்பிடுவதில் முனைந்திருந்தனர். மற்றவர்களுக்குத் தெரியாமல் இந்தக் கூற்று நடைபெற்றுக் கொண்டிருந்ததை, அவர்களுக்குத் தெரியாமல் உற்றுக் கவனித்தான் இளைஞன்.

''முதலியாரே! இந்த நாட்டின் பண்பு மங்கிப் போயிருக்கிறதே தவிர, மறைந்து போய் விடவில்லை. விருந்தினர்களுக்கும் வீரர்களுக்கும் போட்டு விட்டு, தங்களை வருத்திக் கொள்ளும் தலைவர்களும் இங்கு இருக்கிறார்கள்.'' இளைஞனின் குரல் தழுதழுத்தது. தெய்வத் திருக்காட்சியைக் கண்டு விட்டவன் போல் அவன் மெய்சிலிர்த்தபடியே நின்றான்.

**பொ**ழுது சாய்ந்தது. வந்தவர்கள் இருவரும் விடைபெற்றுக் கொண்டு குதிரைகளின் மீது தாவி ஏறினார்கள். திருவல்லபனுக்கு ஏனோ ஓர் இனம் புரியாத பாசம் அந்த இளைஞனிடம் ஏற்பட்டு விட்டது. ''வாய்ப்பிருந்தால் மீண்டும் சந்திப்போம்!'' என்றான்.

''திருவல்லப பாண்டியரே!'' என்று முதன் முறையாக அவனுடைய பெயரைக் குறிப்பிட்டு அழைத்து, ''உங்களுக்காகவும், பெரிய பாண்டியருக்காகவும் என் வீரர்கள் சேந்தமங்கலத்தில் காத்துக் கொண்டிருப்பார்கள் ; முதலியாரையும் அங்கு விட்டுச் செல்கிறேன்; எவ்வித இடையூறுமின்றி நீங்கள் அனைவரும் விஜயநகரத்துக்கு வந்து சேரலாம்'' என்று மிடுக்கோடு கூறினான் அந்த இளைஞன்.

அனைவரது விழிகளும் அவனை ஒரே சமயத்தில் ஏறிட்டு நோக்கின. ''இறைவனைத்

தேடி அடியார்கள் அலைவதுண்டு; அடியாரைத் தேடி இறைவன் வருவதில்லை'' என்று நாத்தழுதழுக்கக் கூறினார் பெரிய பாண்டியர். தம்மைத் தடுத்தாட்கொள்வதற்காக விஜயநகரத்துச் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரே அங்கு வந்து விட்டது போல் அவருக்குத் தோன்றியது.

ஆனால் கிருஷ்ணதேவராயரை அவர் நன்கு அறிவார். வந்திருக்கும் இளைஞன் கிருஷ்ண தேவராயரல்லன்.

''யார் நீங்கள் என்பதை நான் அறியலாமோ....?''

''தேவராயரின் அடிமை; அவருக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுக்கும் பெரும் பேறு பெற்ற அடைப்பக்காரன். என் சொல்லில் உங்களுக்குச் சந்தேகம் வேண்டாம்.''

மறைத்து வைத்திருந்த ஒரு மோதிரத்தை எடுத்து விரலில் அணிந்து கொண்டு அந்தக் கரத்தைப் பாண்டியர் முன்பாக நீட்டினான் அவன். பாய்ந்து வரும் முள்ளம்பன்றியின் உருவிலுள்ள வராகச் சின்னம் பொறித்த இலச்சினை மோதிரம் அது. சட்டென்று அதைப் பற்றித் தமது விழிகளில் ஒற்றிக் கொண்டார் பாண்டியர். ''என் துன்பங்களெல்லாம் தீர்ந்து விட்டன'' என்றார்.

குதிரைகள் இரண்டும் மின்வெட்டும் வேகத்தில் பறந்தன. கண்ணுக்குள் புள்ளிகளாக அவை மறையும் வரையில் அவற்றையே அவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மறைந்த பின்னரும் சந்திரசேகர பாண்டியரின் விழிகளில் அந்த இளைஞன் காட்டிய இலச்சினை விடிவெள்ளி போல் மின்னத் தொடங்கியது.

''இருவல்லபா! உன் முயற்சி வீண் போகவில்லை; நம் லட்சியம் நம் கண்களில் பட்டு விட்டது'' என்றார் பாண்டியர்.

''நன்முயற்சிகள் என்றுமே வீண் போவதில்லை. முயற்சிகளுக்கு நேரக் கூடிய சோதனைகளை நாம் தாண்டி வரும் போது, சாதனைகள் நம்மையே தேடி வரும் என்பதற்கு இதுவே ஓர் எடுத்துக்காட்டு. முயற்சியின் திருவினைதான் இந்த வீரரை நம்மிடம் அனுப்பி வைத்திருக்கிறது.''

துருவ நட்சத்திரத்தை வழிகாட்டியாகக் கொண்டு முன்னேறும் இலட்சியவாதிகளைப் போல், அந்த இளைஞன் காட்டிய இலச்சினையின் ஒளியைத் தங்களது நெஞ்சத்தில் பதித்துக் கொண்டு, பாண்டியநாட்டு வீரர்கள் யாவரும் தங்கள் குதிரைகள் மீது தாவினர். அந்தக் கணத்திலிருந்து அவர்கள் உடலில் புது வலிமை, உள்ளத்தில் புதிய நம்பிக்கை, நாடி நரம்புகளில் புதிய உற்சாகம் பொங்கத் தொடங்கியது.

சேந்தமங்கலத்தில் அவர்களுக்கென்று, முதலியாரும் வீரர்களும் காத்திருந்தார்கள். மாற்றிக் கொள்வதற்குப் புதிய குதிரைகள் இருந்தன. தேர்களும் சிவிகைகளும் மற்ற எல்லா வசதிகளுமே அவர்களுக்கு அங்கு கிடைத்தன. காவலுக்கும் ஏவலுக்கும் துணை வருவதற்கும் வீரர்களுக்குப் பஞ்சமில்லை.

அந்த இளைஞனை மட்டும் அங்கு காணோம். அவன் முன்னதாக விஜயநகரத்துக்குச் சென்று விட்டதாக அறிவித்தார் முதலியார்.

ஆம்; அவன் மட்டிலும் தனியே விஜய நகரத்தை நெருங்கிக் கொண்டிருந்தான். சேந்தமங்கலத்தை விட்டு அவன் வந்து நான்கைந்து தினங்களுக்கு மேலாகிவிட்டன. விஜய நகரத்தை அடுத்திருந்த சிற்றூரில் இரவைக் கழித்துவிட்டு, முதற்கோழி கூவியவுடன் அங்கிருந்து கிளம்பினான்.

நேரம் கருக்கிருட்டு நேரம்; பாதை காட்டு மலைப் பாதை. வழியில் ஓடிய காட்டாற்றின் கரையில் சிறிது நேரம் குதிரையை நிறுத்தி விட்டு, தன் உறக்கத்தை விரட்டுவது போல் அதில் இறங்கிக் குளித்தான். பிறகு நிதானமாகக் கரைக்கு வந்து மீண்டும் குதிரை மீது ஏறினான்.

ஆற்றின் மறுகரையில் இருந்து இரண்டு உருவங்கள் அவனையே கவனித்து விட்டுப் பிறகு இருளில் மறைந்தன. இளைஞனோ விஜயநகரத்தின் எல்லை நெருங்கி விட்டதால் எவ்வித எச்சரிக்கையுமின்றி உல்லாசமாகக் குதிரையைத் தட்டி விட்டான். 'பொழுது நன்றாகப் புலர்ந்தவுடன் வெளிக் கோட்டை வாயிலுக்குப் போய்ச் சேர்ந்தாலே போதும்.'

சாலையின் இரு புறங்களிலும் மரங்கள் அடர்ந்து, தலைக்கு மேல் குடை கவிழ்த்தாற்



போல் கிளைகள் தழுவிக் கொண்டிருந்தன. கரைந்து கொண்டிருந்த கருக்கிருட்டு விட்டுச் சென்ற மெல்லிய ஒளி அங்கே புக முடியாமல் தவித்தது. நள்ளிரவிலும் நடுச்சாலை வழி செல்ல அஞ்சாத அவனோ அலட்சியமாகக் குதிரையைத் தன் போக்கில் போக விட்டிருந்தான்.

பாதையின் ஒரு புறத்திலிருந்து மறு புறத்துக்கு ஓர் உருவம் ஓடியது போல் அவனுக்குத் தோன்றியது. கடிவாளத்தை இறுகப் பற்றிக் குதிரையை நிறுத்திக் கொண்டு அவன் உற்றுக் கவனித்தான். அவனுடைய வலது கரம் உடைவாளைப் பற்றியது. மின்னலைப் போல் ஓடி ஒளிந்த உருவம் சட்டென்று மறுபடியும் இருளில் தலை காட்டியது. அதன் கரத்திலும் மின்னலைப் போல் ஒரு நெடுவாள் பளிச்சிட்டது. 'எதிர்பாராத இடத்தில் எதிர்பாராதவிதமாக ஓர் எதிர்ப்பா?' என்று நினைத்துக் கொண்டு, அதன் அருகில் குதிரையைச் செலுத்தி நிறுத்தினான்.

''யார் நீ? நில் அங்கே!'' என்று கரகரத்த குரலில் உறுமியது அந்த உருவம்.

''நீ யார்? அதைச் சொல்!'' என்று முழங்கியபடியே குதிரையிலிருந்து குதித்தான் இளைஞன். இருளுக்குப் பழகிய அவன்



**கணவர்: மூன்று ரூபாய்க் கூலியில் தையல்காரர் தீபாவளிச் சட்டை தைத்துக் கொடுத்து விட்டார். போட்டுக் கொண்டிருக்கேன். சரியா இருக்கா, இல்லையா? ஏதேனும் குறைக் கணுமா, சொல்லு!**

**மனைவி: முதலில் போய்க் கூலியைக் குறைத்துக் கொண்டு வாருங்கள்!**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கண்களுக்கு அந்த மரத்தடி நிழலில் மற்றோர் உருவமும் பதுங்கி நிற்பது தெரிந்தது.

அவர்களை அவன் உற்றுப் பார்க்க முயன்ருன். தலைகளில் பெரிய பெரிய முண்டாசுகளோடு மீசையும் தாடியுமாய்த் தென்பட்டார்கள். கழுத்துக்களில் தொங்கிய கிளிஞ்சல் மாலைகள் அவர்கள் அந்த மலைக் காட்டுப் பகுதிகளில் வாழ்ந்த குறும்பர்களாக இருக்க வேண்டும் என்ற ஐயத்தை அவனிடம் கிளறி விட்டன. குறும்பர்களில் கொள்ளையடிக்கும் பழக்கமுள்ளவர்கள் பலர் இருந்தாலும், அவர்கள் ஒருபோதும் நாட்டு மக்களிடம் தங்கள் கைவரிசைகளைக் காட்டுவதில்லை. பகை நாட்டின் மீது படையெடுக்கும் காலங்களில் மட்டும், முதலில் குறும்பர்களை ஏவிவிட்டுப் பகைவரிடையே கலவரங்கள் விளைவிக்கச் செய்வார் கிருஷ்ண தேவராயர். குடிமக்களுக்கு அவர்களால் துன்பம் என்று தெரிந்தால் அவர்களுக்கு மிகக் கடுமையான தண்டனைகள் உண்டு. 'கிருஷ்ணதேவ ராயரின் ஆட்சியிலா இப்படி நடக்கிறது!' [என்று திகைத்தான் இளைஞன்.

''நீ யார்? நீ எங்கே போய் வருகிருய்? போய் வந்த வேலை என்ன? உண்மையைச் சொன்னுல் பிழைத்துப் போவாய். இல்லாவிட்டால்......?''

சரேலென்று வாள்முனை அவனது பரந்த மார்பை நோக்கிப் பாய்ந்தது. குறும்பர்களிலும் பகைவர்களின் ஒற்றர்கள் இருப்பார்கள் போலும் என்று நினைந்தான் அவன். அவனுடைய உடைவாள் அந்த எதிர் வீச்சைத் தடுத்து நிறுத்தியது.

''சொல்லிவிடு! நாங்கள் இரண்டு பேர்கள் இருக்கிறோம்; உன்னுல் தப்ப முடியாது.''

''முடிந்தால் நீ தப்பியோடிப் பார்!'' என்று கூறிப் புயலெனச் சீறிக் கொண்டு அவன் மீது பாய்ந்தான் இளைஞன். மற்றொருவனும் சேர்ந்து வாளெடுத்தாலும் அவன் எதிர்க்கத் துணிந்து விட்டான். அந்தக் கருக்கிருட்டு நேரத்தில் வாள்முனைகளிலிருந்து தீப்பொறிகள் கிளம்பின. ஆனால் ஒருவன் மட்டிலும் வாள் வீசினனே தவிர, அடுத்தவன் அருகில்கூட வரவில்லை. தான் களைப்படையும் சமயம் பார்த்து அவனும் தாக்கக் கூடுமென்று இளைஞன் எதிர்பார்த்தான்.

பகைவன் அளவுக்கு மீறிய வலிமை படைத்தவன் என்பதைக் கால்நாழிகைப் பொழுதுக்குள் அவன் கண்டு கொண்டான். வயதில் முதிர்ந்தவனுக அவன் தோன்றினுலும் வாள் வீச்சிலும் உடல் வலுவிலும் அவன் பொல்லாதவனுகத்தான் இருந்தான். இளைஞனின் பாடு அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. மேல் மூச்சுக் கீழ்மூச்சு வாங்க அவன் சோர்ந்து விடுவான் போல் தோன்றியது.

''இதோ பார், செய்தியை மட்டும் சொல்லி விடு; உன்னை நாங்கள் விட்டு விடுகிறோம்!'' என்றது நிழலிலிருந்த அடுத்த உருவம்.

''உங்கள் இருவரையுமே நான் விடப் போவதில்லை!'' என்று முன்னிலும் ஆவேசத்தோடு அந்த மலைக் குறும்பன் மீது பாய்ந்தான் இளைஞன். அடுத்தவன் துணைக்கு வருவதற்குள் தனித்தனியே வீழ்த்திவிட வேண்டும் என்ற துடிப்பில் வெறியோடு போராடினுன். பகைவனின் உடைவாள் கணீரென்ற சத்தத்துடன் சாலையில் உருண்டது. வாள் முனையால் நெஞ்சைப் பிளக்கப் போனுன் இளைஞன்.

''நிறுத்து! நிறுத்து விசுவநாதா!'' என்று பதற்றத்துடன் ஒலமிட்டது மரத்தடி நிழலில் நின்ற அடுத்த உருவம்; ''அது யார் என்று இன்னும் உனக்குத் தெரியவில்லையா?''

விசுவநாதன் குரலுக்குரியவரைப் புரிந்து கொண்டான். பிறகு தன்னேடு போரிட்டவரை உற்றுப் பார்த்தான். அவனுடைய உச்சி முதல் உள்ளங் கால்வரையில் நடுங்கியது. நெடுஞ்சாண்கிடையாகத் தரையில் விழுந்து, தான் யாருடன் போரிட்டானே அவரது பாதங்கள் இரண்டையும் பற்றிக் கொண்டு, ''என்னை மன்னித்து விடுங்கள்! மன்னித்து விடுங்கள்!'' என்று விம்மி அழுதான்.

''உன்னையா மன்னிப்பது? நான் பெருமைப்படுகிறேன், விசுவநாதா!'' என்று அவனைத் தம் இரு கரங்களாலும் தூக்கி மார்புறத் தழுவிக் கொண்டார் அவர். அவரது கண்களிலும் கண்ணீர் பொங்கியது. ஆனல் அது ஆனந்தக் கண்ணீர்.

(தொடரும்)




கண்ணைப் பறிக்கும் வெண்மை! கச்சிதமான தூய்மை எல்லாம் ஸர்ப் செயல்...அதன் எல்லை கடந்த வல்லமை, ஏராளமான நுரை, சலவையே வெகு எளிது. சிறுவர் ஆடை, சட்டை, சேலை....எதற்கும் நிகரில்லாத வெண்மை! சிகரமான தூய்மை. கைப்பட வீட்டிலே சலவை செய்திடவே கைகண்ட துணை ஸர்ப்.

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

ந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

# உங்கள் கேசம் உதிருகிறதா?



**பொடுகு**

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.





**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்கு அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

### ப்யூர் சில்விக்ரீன்




கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

### சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்



உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.

# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/65

# சேவைக்கு ஒரு சகோதரி



**மோனிகா ஃபெல்டன் - அநுத்தமா**

**கா**ன்வெண்டில் சேர்ந்ததுமே சுப்புலக்ஷ்மிக்குப் பரிச்சயமானவள், சம வய்துடையவள் அவள். மிகவும் அழகாகத் தேவதைபோல் இருந்தாள். ராஜமந்திரி ஸ்டேஷன் மாஸ்டரின் மனைவி எல்லா ஐரோப்பியர்களும் தேவதைகள்போல் இருப்பார்கள் என்று எண்ணினாளல்லவா? அப்படித்தான் இவள் இருந்தாள். ஒல்லியாக, மிக அழகாக, முத்துப் போன்றதும், ஆனால் மென்மையானதுமான சருமத்துடன், சூரியோதயத்தின் போது காணப்படும் முகில்கள்போல் தங்க நிறத்தில் அலை பாயும் நீண்ட கேசத்துடன் திகழ்ந்தாள். அவள் ஆங்கிலேயப் பெண்ணல்ல, பிரெஞ்சு மங்கை யென்று சுப்புலக்ஷ்மி சீக்கிரமே அறிந்து கொண்டாள். அவள் செல்வம் மிகுந்த உயர் குடும்பத்தில் பிறந்தவள். ஓரிரண்டு ஆண்டுகளில் அவள் தாய்நாடு சென்று தனக்குப் பொருத்தமான மணாளனை அடைவாள்.

மாதங்கள் செல்லச் செல்ல, சுப்புலக்ஷ்மி இந்தப் பெண்ணைப் பார்ப்பது குறைந்து கொண்டே வந்தது. சீக்கிரமே அதற்குக் காரணம் தெரிந்தது. அப்பெண் தனக்கென்று வாழ்க்கை முறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டாள். கன்னிகாஸ்திரீயாக மாற இருந்தாள். அவள் இனி தன் வீடு திரும்பி, தன் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் யாரையும் பார்ப்பதென்பது அரிது. கன்னி மாடத்தின் பயிற்சிக் காலம் முடிந்தவுடன் அவளுடைய பொன் முகில்கள் போன்ற தலை முடி வெட்டப்படும். அவள் விருப்பத்துக்கு மாறாகக் கொடுமையான முறையில் அல்ல; அவள் தானே விரும்பி ஏற்றுக் கொண்ட வாழ்க்கைக்கு ஏற்ப, அவளது பூரணச் சம்மதத்தின் பேரில் தான். அது முதல் அவள் பெண்களிடையேயும், மாதர்களிடையேயும் இருந்து, அவர்களுக்குத் தான் எவ்விதத்திலும் கடமைப் பட்டிருக்காவிட்டாலும் அவர்களுக்குத் தன் முழு சக்திக்கும் ஏற்பப் பணி செய்வதையே கொள்கையாகக் கொண்டு வாழ்க்கை நடத்துவாள். அந்தப் பிரெஞ்சுப் பெண் நம்பிய மதக் கொள்கைகளுக்கு ஒருகாலும் தான் இசைய முடியாது என்று சுப்புலக்ஷ்மி அறிவாள். ஆயின், அந்தப் பிரெஞ்சுப் பெண்ணும், மதர் சேவியரும், மதர் பாலும், மதர் பாட்ரிக்கும் தங்கள் வாழ்நாட்களை இந்தியப் பெண்களின் படிப்புக்காகவே அர்ப்பணிக்க முடியுமானால், அது பின்பற்றப்பட வேண்டிய நல்ல உதாரணம் அல்லவா?

இதுபோல் அவள் சிந்திப்பது இது முதல் தடவை அல்ல; ஒருவேளை சித்தியும் தன் அமைதியான, இங்கிதம் நிறைந்த வழிகளால் இத்தகைய சிந்தனைகளை அவள் மனத்தில் புகுத்தியிருக்கலாம். எப்படி இருந்தாலும், இப்பொழுது அடிக்கடி இந்நினைவுகள் வரலாயின.

இவ்வாறெல்லாம் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கக் காசி ஒரு விநோதமான இடம்தான். அங்கு வருபவர்களில் பலர் அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தைப் பார்த்துவிட்டுச் சில நாட்

களிலோ, சில வாரங்களிலோ திரும்பிச் சென்றுவிடுபவர்கள் அல்ல. வயதானவர்கள் உடனேயோ சில மாதங்களிலோ சில வருஷங்களிலோ அங்கேயே இறக்க வேண்டும் என்று எண்ணி வந்தவர்கள் தாம். அந்த நகரத்திலேயே வாழ்ந்து மடிந்தவர்களையும், வெளியூர்களிலிருந்து வந்து அங்கு இறந்தவர்களையும், தகனம் செய்து, சாம்பலை ஆற்றில் கரைத்து விடுவதற்காக அநேக கட்டங்களுக்கு எடுத்துச் செல்வார்கள். தினந்தோறும் சமாளிக்க முடியாத அளவுக்குச் சடலங்கள் இருந்தன வென்பதைத் தான் இருந்த அறையிலிருந்தே சுப்புலக்ஷ்மியால் பார்க்க முடிந்தது. வரிசைக் கிரமப்படி இறந்தவர்களின் உறவினர்கள் சடலங்களைச் சூழ்ந்து நிற்க, புரோகிதர்கள் அவசரம், அவசரமாக மந்திரங்களைக் கூறி, சடங்குகளை நடத்துவார்கள். நெருப்பை வைத்து அது தன் வேலையைச் செய்து முடிக்கு முன்பே சடலங்களை ஆற்றில் தள்ளி விடுவார்கள். பிறகு வரிசையில் அடுத்து நிற்கும் சடலம் கொண்டு வரப்படும். புதிதாகச் சிதை வளர்ப்பார்கள். இப்படியே தொடர்ந்து நடக்கும். நகரத்தின் சாக்கடை நீரோடும், காய்கறிக் குப்பையோடும், காய்ந்த மலர்களோடும், இறந்த மிருகங்களோடும் சேர்ந்து மூழ்கியோ, அல்லது ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டோ இந்தச் சடலங்கள் மறையும்.

இந்தக் காட்சியை வருணிக்கும் போது சகோதரி குறிப்பிட்டார்: ''கங்கை நீரைப் பற்றி எவ்வளவோ சொல்கிறார்கள். அது மிகவும் புனிதமானது என்கிறார்கள். இத்தனை சடலங்களும் அழுக்கும் மிதக்கும்போது அது எப்படிப் புனிதமாக இருக்க முடியும்?'' அவர் சற்று நிதானித்துத் தம்மைச் சுற்றிலும் பார்த்தார். போகன் வில்லாக்கள் மலர்ந்திருந்தன. திறந்த முற்றத்தின் மறு கோடியில் சிறுவர்களும் சிறுமியரும் - சகோதரியின் பேரன்களும் பேத்திகளும் - விளையாடிக் கொண்டிருந்தனர். பிற்பகலின் அமைதியை, நிசப்தத்தை அவர்களின் சிரிப்பும் கூச்சலும் மட்டுமேதான் குலைத்தன. சகோதரி அவர்களைப் பார்க்கவில்லை. அவர்களைத் தாண்டி எங்கோ வெகு தூரத்தில் பார்த்துக் கொண்டிருந்தார். ஓரிரண்டு விநாடிகளுக்கப்புறம் அவர் கவனம் என்னிடம் மீண்டது. ''ஆயினும், கங்கை நீர் பரிசுத்தமாகத்தான் இருக்கிறது. அந்த விஷத்தையெல்லாம் வீரியமறச் செய்யக் கூடிய மாற்றுப் பொருள்கள் அல்லது மாற்று மருந்துகள் அதில் இருக்கத்தான் வேண்டும். இப்போது இந்த வீட்டில் நான் கங்கை நீர் வைத்திருக்கிறேன்.



அன்றும்....

அது நன்ருகவேதான் இருந்து வருகிறது.''

9

**கா**ரியி லிருந்து சுப்புலட்சுமியும் அவள் பெற்ரேர்களும் அலகாபாத்துக்குச் சென்ருர்கள். அங்கு தமிழ் நாட்டிலிருந்து வந்த யாத்திரீகர்களுக்குப் புரோகிதம் செய்து வைத்த ஒரு தென்னிந்தியப் பிராமணர் வீட்டில் தங்கினர்கள்.

அலகாபாத் நேருஜியின் பிறப்பிடம் என்ற முறையில் இன்று முக்கியத்துவம் பெறுகிறது. ஆனல் அதற்குமுன்பே பல சகாப்தங்களாகவே அது ஒரு புண்ணிய க்ஷேத்திரமாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. கங்கை, யமுனை, அந்தர் வாகினியாகிய சரஸ்வதி ஆகியவை சங்கமமடையும் இடமல்லவா அது? பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறை சங்கம இடத்தில் பெரிய அளவில் உற்சவங்கள் நடக்கும். அவற்றில் கோடிக்கணக்கான ஜனங்கள் கலந்து கொள்வார்கள். இதற்கு இடையே உள்ள காலத்தில் திரிவேணிக்கு யாத்திரீகர்கள் வருவதும் போவதுமாக இருப்பார்கள். ஆற்றில் புண்ணிய ஸ்நானம் செய்தும், படகுகளில் ஏறிச் சங்கம ஸ்தானத்துக்குச் சென்று குளித்தும் பூர்வ ஜென்மத்துப் பாவங்களை யெல்லாம் கழுவிக் கொள்வார்கள்.

அங்கு ஒரு பிரபல நம்பிக்கை இருக்கிறது. சுப்புலக்ஷ்மியும் அவள் தாயாரும் இந்நகரத்துக்கு வருமுன்பே அதைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார்கள். மிகவும் ஒழுக்கமுள்ள ஸ்திரீகள் கடவுளின் விசேஷ அருளுக்குப் பாத்திரமானவர்களாதலால் அவர்கள் சங்கமத்தில் குளிக்கும்போது தேவ மாதர்களால் நேராகச் சொர்க்கத்துக்கு அழைத்துச் செல்லப்படுவார்கள். அவர்களுடைய ஆன்மாக்கள்தான் சொர்க்கத்துக்குச் செல்லும். அவர்களின் சடலங்கள் திருவேணிக்குக் கீழே கங்கையின் அகலமான நீரோட்டத்தில் மிதப்பதைக் காணலாம். ஊன்றிக் கவனித்தால், இந்தச் சடலங்களின் ஆடைகள் கலையாமலிருந்து காணப்பட்டாலும், அவைகளில் ஆபரணங்கள் ஏதுமே இல்லை என்பது புலனுகும். எதற்கும் தெளிவான ஒரு விளக்கத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்றும், பழைய




- காலம் ஓடுகிறது. அதில் எத்தனை எத்தனையோ புதிய மாறுதல்கள்.
- பல்லாண்டுகளுக்கு முன்பு சென்னை நகர் இருந்த தோற்றத்தையும்
- இன்றுள்ள நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கத் தோன்றுகிறது. ரோதாஜி
- ரோட்டில் அன்று டிராம் ஓடிய காட்சி இன்று பழங்கனவாகி
- விட்டது. பசுமையான மரங்களை அங்கு பார்ப்பதும், நிம்மதி
- யாக ரோட்டைக் கடப்பதும் இன்று சாத்தியமா? அன்றும்
- இன்றும் நின்று நிலைத்திருப்பது பச்சையப்பன் கட்டடம்தான்!

காலத்து நம்பிக்கைகளில் மூடத்தனமானவற்றையும் அப்படியே உண்மை என்று கருதி விடாமல் அலசிப் பார்க்க வேண்டும் என்றும் சுப்புலக்ஷ்மி தன் தகப்பனாரிடம் கற்றுக் கொண்டிருந்தாள். ஆகையினால், சிறு வயதில் தான் பயின்றது போலவே, அலகாபாத்திலும் நீருக்குள்ளே நீந்திச் செல்லக் கற்றவர்கள் இருக்கிறார்கள் என்றும், நம்பிக்கையோடு கூடிய பக்தி நிறைந்த பெண்களைக் கடத்திச் சென்று, மூழ்கடித்து அவர்களுடைய நகை நட்டுக்களைப் பறித்துக் கொண்டார்கள் என்றும் கேட்டறிந்த போது அவள் வியப்புற வில்லை. அவர்கள் நீருக்குள் இருந்துகொண்டே மூச்சு விடவும் கற்றிருந்தார்கள். வெகு காலப்பயிற்சியினால் வெகு நேரம் அவர்களால் அவ்வாறு நீருக்குள்ளேயே இருக்க முடிந்தது. சங்கமத்தில் நீராடும் பெண்களைச் சொர்க்கத்துக்கு அனுப்பி வைத்தது இந்தப் பாதகர்கள்தான்!

''ஜாக்கிரதை!'' என்று யாரோ சுப்புலக்ஷ்மியை ஒரு நாள் அவள் நீச்சல் அடிக்கும்போது எச்சரித்தார்கள். அவள் கரைக்கு விரைந்தாள். மயிரிழையில் தப்பினோம் என்று உணர்ந்தாள். ஆயினும் அதற்குப் பிறகும் அவள் தொடர்ந்து நீச்சலடித்தாள். அவ்வாறு அங்கு நீச்சலடிப்பது அபாயகரமானதாயிற்றே என்று அவள் தாயார் கவலைப்பட்டுத் தவித்தாள். ஆனால் சுப்புலக்ஷ்மிக்குத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் தைரியம் இருந்தது.

இதற்கிடையில் அவர்கள் தங்கியிருந்த வீட்டின் சொந்தக்காரரான புரோகிதர் விசாலாட்சியிடம் ஏதேதோ கதைகள் சொல்லி அவளைப் பயமுறுத்திக் கொண்டிருந்தார். விசாலாட்சியின் அச்சத்துக்குக் காரணம் புரோகிதரின் கதைகள் மட்டுமல்ல; அவள் கணவர் சுப்பிரமணிய ஐயர் நடந்து கொண்ட விதமும் அவளைக் கலங்க வைத்தது. தன் மனைவியோடுகூட அலகாபாத்துக்கு வரும் ஒவ்வொரு மனிதனும் செய்ய வேண்டிய சடங்குகளை அவர் செய்ய மறுத்தது விசாலாட்சிக்குத் தாங்கொணாப் பயத்தை விளைவித்தது.

கல்யாணமான தம்பதிகள் அலகாபாத் செல்லும்போது தங்கள் புரோகிதரை அழைத்துக் கொண்டு திருவேணிக்குப் போவது வழக்கம். அவர்கள் படகில் ஏறின உடனே மனைவி கணவரின் மடியில் அமர்வாள். படகோட்டிகள் படகைச் செலுத்திக்கொண்டு போக அவள் தன் கூந்தலை அவிழ்த்து விடுவாள். கணவர் அதை ஒரு நீண்ட சடையாகப் பின்னி விடுவார். சங்கமத்தை அடைந்தவுடன் பின்னலின் கடைசி ஓர் அங்குலத்தை வெட்டி அதைப் புரோகிதருக்குத் தட்சிணையுடன் தானம் செய்வார். இந்தத் தட்சிணை அவள் கணவரின் பொருளாதார வசதியைப் பொறுத்து ரூபாய் ஐந்து முதல் ஆயிரம் வரையில் எந்தத் தொகையாக வேணுமானாலும் இருக்கலாம்.

சகோதரி சுப்புலக்ஷ்மி இந்தப் பழைய நினைவுகளில் ஆழ்ந்து கூறினார்: ''உண்மையில் சொல்லப் போனால், என் தகப்பனாருக்கு இதிலெல்லாம் நம்பிக்கையே இருந்தது கிடையாது. அவர் பக்தி நிறைந்தவர், ஆசார சீலர், இந்து மதத்தில் பற்றுள்ளவர் தான். ஆயினும் இந்த மாதிரி மூட நம்பிக்கைகளுக்கு இடமளிக்க அவர் விரும்பவில்லை. அவரால் இதற்கெல்லாம் உடன்படவே முடியவில்லை.''

ஆனால் சுப்புலக்ஷ்மியின் தாயார் அவ்வாறில்லை. தன் கணவர் இந்தச் சடங்கைச் செய்ய மறுத்ததும் அவள் மிகவும் வேதனைக்குள்ளானாள். அந்தப் புரோகிதரோ அதைச் செய்ய வேண்டியது உசிதம் என்பது மட்டுமல்ல, அத்தியாவசியமானதும்கூட என்று வற்புறுத்தினார்.

ஒரு நாள் விசாலாட்சியிடமும் அவள் பெண்ணிடமும் அவர் சொன்னார்: ''சில நாட்களுக்குமுன் இங்கு வந்திருந்த வேறொரு தம்பதியினர்கூட இந்த விஷயத்தில் உங்கள் இருவரையும் போலவே மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். பல வாரங்கள் இங்கு தங்கினார்கள். புருஷன் செய்ய வேண்டிய நியமத்தை நெடு நாள்வரை அவளால் செய்து வைக்க முடியவில்லை. ஆயினும், அவள் ஓர் உத்தம ஸ்திரீயானதால், விடாமல் கெஞ்சிக் கேட்டதின் பேரில் அவள் கணவர் விட்டுக் கொடுக்கும்படி நேர்ந்தது. எல்லாரும் ஒன்றாகத் திருவேணிக்குச் சென்றோம். காரியங்களெல்லாம் முடிந்தன. எனக்கும் கணிசமான தட்சிணை தந்தார்கள். பிறகு இங்கிருந்துகயைக்குப்போனார்கள். அந்நகரத்தை அவர்கள் அடைந்ததும் மிகவும் குரூரமான புயல் வந்துவிட்டது. அநேக யாத்திரிகர்கள் நீரில் மூழ்கி விட்டார்கள். ஆனால் இந்தத் தம்பதிகள் இங்கு நியமங்களைச் சரிவர நடத்தியதால் எமதர்மன் மனமிரங்கி அவர்கள் உயிரைப் பறிக்காமல் விட்டு விட்டான். அவர்களும் சௌக்கியமாக வீடு திரும்ப முடிந்தது.''

விசாலாட்சி இந்த விஷயத்தைக் கணவரிடம் கூறினாள். அது அவருக்கு

காட்பரி-ஃப்ரையிலிருந்து

# இனிய விருந்து...

Cadbury-Fry


ஹேஸல் நட்

பரவசமூட்டும் பல
சுவை இனிப்புக்கள்
ஆழ உட்பொதிந்தசத்து
வளமிக்க, ஆடை மயமான
பால் சாக்கலேட்.
இஷ்டம்போல் தேர்ந்
தெடுக்க எண்ணற்ற
ரகங்கள்:




ஸ்கார்ச்ட் ஆமண்ட்ஸ்


டாஃபிஸ்


பட்டர்ஸ்காட்ச்


காரமெல்ஸ்


கேண்டி நட்ஸ்.


ஹேஸல் கட்டிகள்


ஆமண்ட்கட்டிகள்


பட்டர்ஸ்கா

CJ TM

வேடிக்கையாக இருந்தது. சில வருஷங்களுக்கு முன் ஸர் சதாசிவஐயரும் அவர் மனைவியும் அலகாபாத்துக்கு வந்திருந்த போது நேர்ந்ததை அவர் ஞாபகமூட்டினர். லேடி சதாசிவ ஐயர் இந்தச் சடங்கைச் செய்ய வேண்டும் என்று விருப்பப்பட்டாள். அவள் கணவருக்கு இது விருப்பமில்லை. மனைவியின் நீண்ட அழகான கூந்தலில் ஓர் அங்குலம் தானம் செய்தால் போதும் கணவருக்கு எவ்வளவோ புண்ணியம் என்று புரோகிதர் பல முறை எடுத்துக் கூறி நிர்ப்பந்தப்படுத்தினர்.

மிகவும் பிரபல வழக்கறிஞரான ஸர் சதாசிவ ஐயர் அந்தப் புரோகிதரைப் பார்த்து, ''ஓர் அங்குலம் வெட்டித் தருவதில் புண்ணியம் இருக்குமானல், இரண்டு அங்குலம் வெட்டுவதில் இன்னும் அதிக புண்ணியமோ?'' என்று விசாரித்தார்.

''கண்டிப்பாக'' என்ருர் புரோகிதர்.

''அப்படி யென்ருல் மூன்று அங்குலம் வெட்டுவது அதைவிடச் சிறந்ததாக இருக்குமல்லவா ?''

''ஆமாம் !''

''அப்படியானல் நான்கு அங்குலம் வெட்டினல் ரொம்ப ரொம்ப நல்லது. நிறையப் புண்ணியத்தை வாரிக் கட்டிக் கொள்ளலாம் !''

''ஆமாம்!''

''சரி, என் மனைவியின் கேசம் முழுவதையும் வெட்டிவிட்டுத் தலையை க்ஷவரம் செய்து விட்டால் அதுதான் சர்வசிரேஷ்டமான காரியமாயிருக்கும். இல்லையா ?''

தாம் ஒரு சிக்கலில் மாட்டிக் கொள்ளாமல் இருக்கப் புரோகிதர் கொடுக்கக் கூடிய மறுமொழி ஒன்றே தான். அவர் அதைத் தந்தார். சுப்புலக்ஷ்மி தான் சிறுமியாக இருந்த போது ஒரு கல்யாணத்தில் லேடி சதாசிவ அய்யரைப் பார்த்ததையும் அப்போது அந்த அம்மாளின் தலை மொட்டையாக இருந்ததைக் கண்டு தான் வியந்ததையும் இப்போது நினைவுகூர்ந்தாள். அதற்கான காரணம் இன்று அவளுக்கு நன்கு விளங்கியது.

சிறிது காலத்தில் அந்த அம்மாளின் கூந்தல் பழையபடி நீளமாகவும் அடர்த்தியாகவும் வளர்ந்து விட்டது.

இந்தப் பழைய நிகழ்ச்சியின் நினைவு தான் போலும், கணவன் சொல்வது ஒரு வேளை சரியாக இருக்குமோ, புரோகிதர் சொல்வது தப்போ என்று விசாலாட்சியை யோசனையில் ஆழ்த்தியது. ஆனல் புரோகிதர் அவளை அவ்வளவு சுலபமாக விட்டுவிடுவதாக இல்லை.

அவள் மனம் மாறி வருவதை ஊகித்து விட்ட அவர் இன்னொரு கதை கூற ஆரம்பித்து விட்டார்: ''வேருெரு பெண்மணி இருந்தாள். அவள் கணவன் மிகவும் பிடிவாதமாக இந்தச் சடங்கைச் செய்ய மறுத்துவிட்டான். மனைவி அவனை இணங்க வைக்க எவ்வளவோ முயன்றும் அவன் ஒப்புக் கொள்ள வில்லை. கடைசியில் இந்தச் சடங்கைச் செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்று அவளையே நம்ப வைத்து விட்டான். அவர்கள் கயைக்குச் சென்று, பிறகு திரும்பித் தெற்கே பயணத்தைத் தொடங்கினர்கள். கோதாவரி, கங்கையின் இளைய சகோதரி என்று உங்களுக்குத் தெரியும். அவர்கள் கோதாவரியை அடைந்ததும் அவர்கள் பிரயாணம் செய்து கொண்டிருந்த ரயிலுக்குக் கோரமான விபத்து ஏற்பட்டு விட்டது. கணவன் கொல்லப்பட்டான். அவன் மனைவி அங்கேயே இருந்து இறுதிச் சடங்குகளைச் செய்யும்படி நேர்ந்து விட்டது. அவள் கனவில் கோதாவரி தோன்றி, 'நீ என் மூத்த சகோதரியான புனித கங்கைக்கு உன் தலை முடியில் ஓர் அங்குலம்கூடத் தியாகம் செய்ய மறுத்து விட்டாய். இதோ பத்தாம் நாள் வருகிறது. நீ செய்த அபசாரத்துக்குத் தண்டனையாக உன் தலையில் உள்ள கேசம் முழுவதையுமே எடுத்துக் கொண்டு விடப் போகிறேன்' என்று கூறியது. எவ்வளவோ சந்தோஷமாக இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்துக்கு வந்த அந்தப் பெண்மணி, முண்டனம் செய்யப்பட்ட விதவையாக மிகுதி வாழ்நாட்களைக் கண்ணீரிலும், கைப்பிலும் கடத்தத் தன்னுடைய வீடு போய்ச் சேர்ந்தாள்.''

இதையெல்லாம் கேட்ட விசாலாட்சி என்றுமில்லாத பீதி அடைந்தாள். அவள் கணவர், ஒருவிதமான ஆபத்துமில்லை, இது போன்ற கதைகளெல்லாம் யாத்திரிகர்களிடமிருந்து பணம் பிடுங்குவதற்காகப் புரோகிதர்களால் புனையப்பட்டவை என்று கூறி ஆசுவாசப்படுத்த முயன்றும் அவளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. எனினும், கயைக்குக் கிளம்ப வேண்டிய சமயம் வந்து விட்டதென்று அவள் கணவர் நிச்சயித்த போது அவள் ஒன்றும் மறுத்துக் கூறவில்லை. தாங்கள் மூவரும் சென்னை போய்ச் சேர்வதற்குள் என்ன விபரீதம் நடக்குமோ என்று குடைந்த தன் பயத்தையும் அவள் மறைக்க முயன்ருள்.

(தொடரும்)



# உங்கள்
# லட்சியத்தின் மேல்...

நீண்டகாலமாய்க் காத்திருந்த ஓய்வு நாள் பிரயாணத்திற்கு ஏற்ற சமயம் வந்து விட்டது. இதற்குத் தயாராகி விட்டால் அதைப்போல் சுகமான - மறக்க வியலாத வேறொன்றும் இருக்க முடியாது. ஆம். உங்கள் மார்க்-IIல் செல்லுவதுதான். அப்பொழுது பிரயாணத் திட்டங்களும் கண்டிப்பான கால அட்டவணைகளும் உங்களுக்குத் தேவைப்படா. ரெயில்வேயில் டிக்கட் பதிவு செய்யும் தொந்தரவுகளும் இருக்கா; பூரண சுதந்திரமுடையவர்களா விருப்பீர்கள். உங்கள் பிரயாணச் சாமான்களை விசாலமான பின்புறப் பெட்டியில் வைத்துக் கொள்ளலாம். உங்களிஷ்டம்போல் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். போகும் வழியில் பிற இடங்களின் கண்கவரும் காட்சிகளைப் பார்த்தவாறு உங்களிஷ்டமான நேரத்தில் குறிப்பிட்ட இடத்தை அடையலாம். அங்கு உங்கள் இச்சைப்படியும் தங்கி யிருக்கலாம். உங்கள் குடும்பத்தினருடன் இடவசதி மிகுந்த உங்கள் பிரியமான மார்க்-IIல் சுற்றுப் பிரயாணம் செய்வது ஓர் தனி இன்பம். அதிலும் நெடுந்தூரம் உல்லாசப் பிரயாணத்திற்கும் துரிதமாகச் செல்லுவதற்கும் புகழ்பெற்ற அம்பாஸடர் மார்க்-IIல் பிரயாணம் செய்வதென்றால் பிரத்தியேகமான சுகமே!

# அம்பாஸடர்
## மார்க் II







ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிட்.
கல்கத்தா

அதிகாரம் பெற்ற ஹிந்துஸ்தான் மோட்டார் வியாபாரிகள்: ஆக்ரா கண்ட்., அலிகார், அஹமதாபாத், அஹமத்நகர், அஜ்மீர், அலஹாபாத், அம்பாலா கண்ட்., அமிர்தசரஸ், அவுரங்காபாத், பெங்களூர், பரேய்லி, பரோடா, பிலாய், போபால், புவனேஸ்வர், பம்பாய், கல்கத்தா, கோயம்புத்தூர், கட்டாக், டேரா-டூன், தன்பாத், தன்லார், டிப்ருகார், தும்கா, கௌஹாத்தி, கோவா, குவாலியர், இம்பால், இந்தூர், ஜபல்பூர், ஜெய்ப்பூர், ஜல்கான், ஜம்மு, ஜாம்ஷெட்பூர், ஜோத்பூர், ஜோர்ஹட், ஜலந்தர் சிட்டி, கான்பூர், காட்மண்டு, கோலாப்பூர், கும்பகோணம், கர்நூல், லக்னோ, மதராஸ், மதுரை, மங்களூர், மீரட், நாக்பூர், புது தில்லி, பாளையம்கோட்டை, பாட்டியாலா, பாட்னா, பாண்டிச்சேரி, பூனா, ராஜ்கோட், ராஞ்சி, சம்பல்பூர், சாட்னா, செகந்திராபாத், ஷில்லாங், ஸில்சார், ஸிலிகுரி, ஸ்ரீநகர், தானா, திருச்சிராப்பள்ளி, திருவனந்தபுரம், வாரணாசி கண்ட்., விஜயவாடா, விஜயநகரம் சிட்டி



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 52. ஆணவத்தின் குரல்

சிங்கமுகாசுரன் அழிந்த செய்தி கேட்ட சூரபன்மன் அலமந்து போய் விட்டான். "ஆ! இரு சிறகுகளா யிருந்த தாரகன், சிங்கமுகன் இருவரையும் இழந்து சிறகொடிந்த பறவையாகி விட்டேனே! தந்தையும் தாயும் தமருமாய் இருந்த சிங்கமுகன் போய் விட்டபின், எனக்கு என்ன வாழ்வு வேண்டிக் கிடக்கிறது? இனி வெற்றிக்காக நான் போராட வேண்டியதில்லை. நானும் போர்க்களத்தில் மடிந்து உன்னைச் சேரவேதான் சண்டையிட வேண்டும்" என்று கூறிப் புலம்பினான். அருமை மகன் பானுகோபன் மாண்டபோது அலறியதைவிட உணர்ச்சியுடன் தம்பிக்காகக் கதறினான்.

"பொன்னை நிலந்தன்னைப்
புதல்வர்களை மங்கைபரைப்
பின்னை யுளபொருளை
யெல்லாம் பெறலாகும்
என்னை யுடைய
இளங்கோவே இப்பிறப்பில்
உன்னை இனிப்பெறுவது
உண்டோ உரையாயே"

ஒருவன் பெரு நிதியத்தை இழந்து விட்டாலும் பிற்பாடு சம்பாதித்துக் கொள்ளலாம். குழந்தை ஒன்று தவறி விட்டாலும் பகவான் கிருபை புரிந்தால் இன்னொரு குழந்தையைக் கொடுப்பார். மனைவி மறைந்தாலும் மறு மணம் செய்து கொள்ளலாம். ஆனால் தம்பியின் இழப்புக்கு இட்டு நிரப்ப எது உண்டு?

இராம பிரான் சீதையைப் பிரிந்தார்; வருத்தப்பட்டார். தற்கொலைக்கு முயலவில்லை. இளையபெருமானாகிய இலட்சுமணரை அயோமுகி தூக்கிக் கொண்டு போய்விட்டாள். குறித்த நேரத்தில் இலக்குமணர் திரும்பி வராததால், "தம்பி இறந்தே விட்டான்" என்று கருதிய இராமர் கத்தியை எடுத்துக் கழுத்தைக் குறி வைத்துக் கொண்டாராம்.

"அறப்பால் உளதேல்
அவன்முன் னவனாய்ப்
பிறப்பா னுரின்வந்
துயிறக் கவெனு
மறப்பால் வடிவாள்
கொடுமன் னுயிரைத்
துறப்பா னுறுங்கின்
றதொடர்ச் சியின்வாய்"

மனைவி இடையிலே வந்தவள்: தம்பி அப்படியன்று. என்று தம்பி பிறந்தானோ அன்றே அவனுக்கு



மனைவி: அப்பப்பா! போதும்; ஓட்டலில் தங்கி விட்டு வந்தது போதும். இது நம்ப வீடுன்னு ஞாபகம் இல்லாமல் இன்னும் ஓட்டலில் தங்கியிருப்பது மாதிரியே நடந்துகொள்றீங்களே!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அண்ணனுண்டு. பாசம் சிறந்தது. ஆகவே வாஞ்சைகளிலெல்லாம் சகோதர பாசம் சிறந்தது.

சகோதர பாசத்தினால் சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களும் அதிருமாறு கதறியழுதான்.

இனிக் கதறுவதற்கில்லை என்ற நிலையில், உற்றமனைத்தையும் போரில் காவு தந்த சூரபன்மன் தானும் குமரக் கடவுளுடன் சமரம் புரிவதற்கு எண்ணினான்.

ஃ ஃ ஃ

சூர சம்ஹாரம் கந்தபுராணத்தின் மிகச் சிறந்த பகுதி. திருச்செந்தூர் முதலிய முருகத் தலங்களிலெல்லாம் சூரசம்ஹார விழா இப்பொழுதும் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

இந்தத் தொடரின் ஆரம்பத்தில் கூறியவற்றை ஈண்டு நினைவு கொள்வோம். கலியுகம் தருமத்தைக் காய்ச்சி வறுக்குமே என முனிவர்கள் வியாஸாசாரியாரிடம் முறையிட்டனர். ''கலியுகப் பாவங்களைப் போக்க ஒரு தெய்வம் உண்டு'' என்றார் வியாஸாசாரியார். ''அது எந்தத் தெய்வம்?'' என்று முனிவர்கள் கேட்டனர்.

''கந்தஸ்ய கீர்த்திம் அதுலாம் கல்மஷ நாசினீம்'' அதாவது, ''கந்தனுடைய கீர்த்தி ஒன்றுதான் கலியின் பாவங்களைப் போக்கவல்லது'' என்று வியாஸ பகவான் கூறினார்.

கார்த்திகேயனின் கீர்த்தியைச் சொன்னார் மகரிஷி. கீர்த்தி என்ற பதம் 'புகழ்' என்பதைக் குறிக்கும். தமிழில் கந்தனைப் பாடிப் பரவிய அருணகிரிப் பெருமானும், வியாஸர் கூறிய கந்தனின் கீர்த்தியையே குறிப்பது போலத் தமது பாக்களுக்குத் திருப்புகழ் எனப் பெயரிட்டார். அல்ல, அருணகிரி ஸ்வாமி அப்படிப் பெயரிட வில்லை. வியாஸ பகவான் சொன்னதை நினைவில் வைத்திருந்த வேலாயுதப் பெருமானே 'திருப்புகழ்' எனப் பெயரிட்டார்.

முருகப் பெருமானிடம் அருள் பெற்றவர்கள் பலர். ஆனால் மெய்ஞ்ஞான பண்டிதனும் செவ்வேட் பரமன் திருவாக்கால் பிரணவ மந்திர உபதேசம் பெற்றவர்கள் மூன்றே பேர்கள் தான். அவர்கள், தேவசிரேஷ்டர் சிவபெருமான்; முனி சிரேஷ்டர் அகத்தியர்; நரசிரேஷ்டர் அருணகிரிநாதர்.

வேலா சரணம் சரணமென்மேல்
வெகுளாமல் இனி
மேலாயினுங் கடைக்கண்பார்
பருப்பத வேந்தன்மகள்
பாலா குறுமுனியார்க்குந்
திருப்புகழ்ப் பண்ணவர்க்கும்
ஆலால முண்டவர்க்கும் உபதேசித்த
என் ஆண்டவனே

—முருகரந்தாதி

''அருணகிரி! நம் திருப்புகழை உலகம் உய்யப் பாடு'' என்றார் முருகவேள். நூல் ஒன்றைப் பாடினால் ஆசிரியர்தான் அதற்குப் பெயர் வைப்பார். ஆனால், அருணகிரிநாதர் பாடிய நூலுக்குக் காவியநாயகராம் முருகப் பெருமானே திருப்புகழ் என்று பெயர் வைத்தார். (இவர் கச்சியப்பரின் கந்த புராணத்தைச் சரி பார்த்ததையும் இந்தச் சரிதைத் தொடக்கத்தில் கண்டிருக்கிறோம்.)

''முருகப் பெருமானே பெயரிட்டது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்பவர்களும் இருக்கலாம். அருணகிரிநாதரே விடை கூறுகிறார்.

பக்கரைவி சித்ரமணி பொற்கலனை
யிட்டநடை
பட்சியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு
பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கமதும திக்கவரு குக்குடமும் ரட்சைதரு
சிற்றடியுமுற்றிய பனிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி
ருப்பமொடு
செப்பென எனக்கருள்கை
மறவேனே

இவ்வாறு இணையற்ற புகழை—'அதுலாம் கீர்த்திம்' என்று வியாஸர் கூறிய மகிமையை — முருகன் பெற்றதற்கு முக்கியமான காரணம் சூரசம்ஹாரம் செய்ததுதான். சூரனை வதைக்கவேதான் ஸ்வாமி தோன்றியதேயன்றோ ?

அருணகிரிநாதரின் பக்தி நூலுக்குப் பெயரிட்ட குமாரக் கடவுளேதான் 'முத்தைத் தரு' என்று அடியும் எடுத்துத் தந்து மறைந்தார். அக்கணத்திலே,

''முத்தைத் தரு பத்தித் திருநகை
அத்திக் கிறை சத்திச் சரவண
முத்திக் கொரு வித்துக் குருபர''

எனப் பாடிய அருணகிரிநாதர் நாதாந்தமாகிய சிவயோகத்தில் அமிழ்ந்து விட்டார். அப்புறம் திருப்புகழ் பாடுவது எப்படி? 'ஏன் இன்னும் திருப்புகழ் பாடவில்லை?' என்று முருகப் பெருமான் அவரெதிரே தோன்றி வினவினார்.

''ஐயனே! வேதாகமங்கட்கும் எட்டாத நின் புகழை ஏடு எழுதா முழு ஏழையாகிய எளியேன் எங்ஙனம் பாடுவேன்?'' என்று அருணகிரிநாதர் கேட்டார்.

''வயலூருக்கு வா'' என்றார் முருகப் பெருமான். வயலில் பயிர் விளையுமாப் போலே அருணகிரியின் நாவில் பாவினைப் பயிர் செய்யத்தான் பரமன் அழைத்தார்.

அருணகிரிநாதர் வயலூர் சென்றார்.

முருகன் தமது திருக்கை வேலைப் பூமியில் பாய்ச்சினார். சக்தி உருவான ஆயுதம் பாய்ந்ததும் சக்தி தீர்த்தம் புவியினின்று பெருகியது. இதைப் பாடுகிறார் அருணகிரிநாதர்.

கன்னா ருரிந்தஎன் மன்னா எனக்குநல்
கர்ணா மிர்தப்பதம் தந்தகோவே
கல்லார் மனத்துட னில்லா மனத்தவ
கண்ணா டியிற்றடம் கண்டவேலா
........ .................... ........

அருணகிரியின் மனத்தில் கவித்துவத்தை ஊற்றெடுக்கச் செய்தவர் கண்ணுக்குத் தெரியும் தடாகத்தையும் தோற்றுவித்தார். கிரி என்றால் மலை; கல். அருணகிரிநாதர் தம் மனம் கல் போலிருந்ததாகச் சொல்கிறார். அந்தக் கல்லில் நார் உரித்தாராம் எம்பெருமான். 'கர்ணாமிர்தம்' என்பது அருணகிரியின் செவியில் சுவாமி அமிருதமான பிரணவ உபதேசம் செய்ததைக் குறிப்பிடுகிறது. கவியின் செவியில் கர்ணாமிர்தம் பாய்ந்தவுடன் அவர் மற்றவர்களுக்கும் கர்ணாமிர்தமாகத் திருப்புகழ் பாடத் தொடங்கி விட்டார். ஐயன் வேலால் தீர்த்தம் உண்டாக்கியதைக் 'கண்ணாடியிற்றடம் கண்ட வேலா' என்கிறார் அருணைப் பெருமான். இத்தடாகத் தீர்த்தத்தால் சிவபிரானுக்கு முருகன் பூஜை செய்தார். இங்கு சுவாமியின் பெயர் அக்கினீசுவரர். அம்பாள், முன்னிலை நாயகி. பூர்வஸ்திதி நாயகி என்று வடமொழியில் கூறுவர். ஸ்தூலத்துக்கு முன்னரே சூட்சுமமாகவும், சூட்சுமத்துக்கும் முன்னரே காரணமாகவும் இருப்பதால் தேவியைப் பூர்வ ஸ்திதி நாயகி எனக் கூறுவது பொருந்தும். எனினும், 'முன்னிலை நாயகி' என்பதற்கு வேறு பெரும் கருத்தும் கொள்ளலாம். தன்மை—முன்னிலை — படர்க்கை என்ற முன்னிலையும் இங்கு பொருந்தும்.

ஆன்மாக்கள் மூன்று வகை. ஒரு மலம் உடைய ஆன்மாக்கள் சில; இரு மலம் உடைய ஆன்மாக்கள் சில; மும்மலம் உடைய ஆன்மாக்கள் சில. ஒருவர் வீட்டுக்குள் இருக்கும்பொழுது வெறும் பனியன் மட்டும் அணிந்து கொள்கிறார். கடை வீதிக்குப் போகும் பொழுது சட்டையணிந்து கொள்கிறார். ஆபீசுக்குப் போகும்போது பனியனும் சட்டையும் அணிந்து அவற்றின்மேல் கோட்டும் போட்டுக் கொள்கிறார். அதுபோல் ஒருமலமுடைய ஆன்மாக்கள் விஞ்ஞானகலர். இருமலமுடைய ஆன்மாக்கள் பிரளயாகலர். மும்மலமுடைய ஆன்மாக்கள் சகலர்.



''ஜூரிகளே! இதென்ன? உங்க எல்லார் உடம்பிலும் காயம்?''

''குற்றவாளி உண்மையிலேயே சண்டை போட்டாரா? என்பது பற்றி எங்களுக்குள் ஏகமனதாக முடிவுக்கு வர முயற்சி செய்ததின் பலன்தான் இது!''

---

கந்த சஷ்டியை யொட்டி இவ்விதழ் அட்டைப் படத்தில் பாதாமி (வாதாபி) கார்த்திகேயனின் திரு உருவத்தை வழங்குகிறார் ஓவியர் திரு மணியம்

மும்மலமுடைய ஆன்மாக்களுக்கு (சகலர்) பகவான் மானிடச் சட்டை தாங்கி வந்து அருள் புரிவார்; சுவாமி தம் திவ்விய சொருபத்துடன் வரமாட்டார்; விறகில் தீயைப்போன்று மிக மிக மறைந்திருப்பார். இறுதியில் சிவமேயாகி ஆளப்பட்ட மாணிக்க வாசகருக்கே சுவாமி திவ்விய சொருபத்துடன் வராமல் உத்தமமான மானுட சொருபத்துடன் அந்தணராக வந்து தரிசனம் தந்ததுண்டு.

செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதும் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே
— திருவாசகம்

அருணகிரிநாதருக்குக்கூட சுவாமி முதலில் மானுட உருவில் வேதியராகத்தான் காட்சியளித்தாராம். அந்தணனாக வந்த சுவாமி அருணகிரிப் பெருமானைக் கடைக் கண்ணால் நோக்கினார். ஒரு மலம் போய் விட்டது. இரு மலமுடைய ஆன்மாக்களுக்கு — (பிரளயாகலர்) இறைவன் பாலில் நெய் போல் மறைய நின்று தோன்றுவார். ஒரு மலமுடைய ஆன்மாக்களுக்குள்ளே (விஞ்ஞானகலர்) மணியில் ஒளிபோல் அற்புதமாக மறைவு என்று சொல்லவொண்ணா லயமாகத் தோன்றுவார். மும்மலம் உள்ள ஆன்மாக்களுக்கு மானுட வடிவிலும், இரண்டு மலமுள்ள ஆன்மாக்களுக்கு, சுப்பிரமணிய பக்தர்களாயிருந்தால் ஆறு முகங்கள், பன்னிரண்டு தோள்களுடனும் ஒரு மலமுள்ள ஆன்மாக்களுக்கு ஜோதியாகவும் ஆண்டவன் காட்சி தருவார். ஒரு மலமுள்ள ஆன்மா தன்மை. இரண்டு மலமுள்ள ஆன்மா முன்னிலை. மூன்று மலமுள்ள ஆன்மா படர்க்கை. இந்த நுணுக்கத்தை வைத்துத்தான் திவ்விய ரூபத்துடன், தோன்றும் தேவியை முன்னிலை நாயகி யென்று பெயரிட்டார்கள்.

"உலகெ லாம்உணர்ந் தோதற்
கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்
தாடுவான்
மலர்ச்சி லம்படி வாழ்த்தி
வணங்குவாம்"

மும்மலமுடைய ஆன்மாக்களுக்கு 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவர்'. இருமலமுடைய ஆன்மாக்களுக்கு 'நிலவுலாவிய நீர்மலிவேணியன்.' ஒருமலமுடைய ஆன்மாக்களுக்கு 'அலகில் சோதியன்'.

சூரன் — தாரகன் — சிம்மமுகன் ஆகிய மும்மலங்களில் சுவாமி இரண்டை ஒழித்தாயிற்று. இன்னும் ஒன்றே மீதம். சூரனையும் ஒழித்தபின் ஜோதி ஸ்வரூபமாகி விடுவார். சிவபெருமான் நயனங்களினின்று ஜோதியாகத் தோன்றியவர் ஜோதிமய உருவை நன்கு புலப்படுத்திக் கொள்வார். இதுவே முருகப் பெருமானுடைய கீர்த்தியின் பூர்த்தியாகும். சூர சம்ஹாரத்தின் பெருமை இதுவே. கீர்த்தியை, திருப்புகழை நாம் எல்லோரும் உணர வேண்டும் என்பதற்காகவே சூரன் அவரது பெருமையை உணர்ந்து திருந்தவில்லை. குமாரக் கடவுளோடு தானே போர் செய்ய வேண்டும் என்று எண்ணினான். ஆயிரங்கோடி ஒற்றர்களை அழைத்தான். "ஆயிரத்தெட்டு அண்டங்களிலுமுள்ள சேனைகள் யாவற்றையும் விரைவில் திரட்டிக் கொண்டு வாருங்கள்" என்று ஆணையிட்டான்.

(தொடரும்)

---

## கல்கி வெள்ளிவிழாப் பரிசுப் போட்டி

எழுத்தாளர்களின் எழுத்துப் பணி சிறக்கச் செய்வதே இந்த வெள்ளி விழா ஆண்டை விமரிசையாகக் கொண்டாடுவதற்கான சிறந்த வழி என்ற அளவில் இருபத்தையாயிரம் ரூபாய் பரிசுத் திட்டம் வைத்துள்ளோம். சிறந்த நாவலுக்கு முதல் பரிசு 10,000 ரூபாய்; இரண்டாவது பரிசு ரூபாய் 7,500 மூன்றாவது பரிசு ரூ. 5,000. சிறந்த சிறுகதைக்கு ரூ. 1000; இரண்டாவது பரிசு ரூ. 500; மூன்றாவது பரிசு, பத்துச் சிறுகதைகளுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூ. 100 வீதம் ரூ. 1000.

இந்த நாவல், சிறுகதைப் போட்டிகளுக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பி வைக்கலாம்.

இந்தப் போட்டிக்கு வரும் சிறுகதை, நாவல்களைப் பரிசீலனை செய்து தீர்ப்பளிக்க இலக்கியத் துறையிலும், எழுத்துத் துறையிலும் முதிர்ந்த பஞ்சாயத்தார்கள் நியமிக்கப்படுவார்கள். இந்த நாவல், சிறுகதைப் போட்டிகளின் விஷயத்தில் "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

**முடிவுத் தேதி 31-12-65 என்பதை நினைவூட்டுகிறோம்.**

### அத்தியாயம் நாற்பத்திநான்கு

## ஒன்றிப் பிரிந்த உயிர்

ஆல விழுதைப் பிடித்துக் கொண்டிருந்த சபேசன் வாலிப மிடுக்குடன் நிமிர்ந்து ஓர் இராணுவ வீரனைப் போல் நடந்து சென்று சந்தியாவின் வலது புறத்தில் சிறிதும் அச்சமின்றி நெருங்கி நின்றான். குதிரைச் சிலைமேல் முல்லைச் செடியென ஒசிந்து சாய்ந்து நின்ற அவளும் விறைப்பாக நிமிர்ந்து அவனோடு இழைந்து நின்றாள்.

''நீங்கள் தேசிய கீதத்தை ஒவ்வொரு வரியாக மெல்லப் பாடுங்கள்; நான் அதற்கு த்தம் சொல்லிக் கொண்டு வருகிறேன்.''

பரவச நிலையில் ஒரு கணம் மௌனமாயிருந்த சபேசன் மிக மெல்லிய — ஆனால் உணர்ச்சியும் கவர்ச்சியுமான குரலில் பாட ஆரம்பித்தான்:

''ஜன கண மன அதி நாயக ஜயஹே, பாரத பாக்ய விதாதா...''

பூஞ்சாற்றை மாந்திய பொன்வண்டு ரீங்காரமிடுவது போன்ற குரலில் — தேனின் சுவை நிறைந்த நீந்தமிழில் — சொல்லத் தொடங்கினாள் சந்தியா:

''இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.''



''பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா திராவிட உத்கல வங்கா...''

''உன் திருநாமம், பஞ்சாபையும் ஸிந்துவையும் குஜராத்தையும் மகாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸ்ஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.''

''விந்திய ஹிமாசல யமுனா கங்கா உச்சல ஜலதி தரங்கா!... தவசுப நாமே ஜாகே, தவசுப ஆசிஷ மாகே, காஹே தவஜய காதா...''

''அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப் படுகிறது. அவை உன் ஆசியை வேண்டுகின்றன; உன் புகழைப் பாடுகின்றன.''

''ஜன கண மங்கள தாயக ஜயஹே, பாரத பாக்ய விதாதா...''

''இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு—''

சபேசன் உணர்ச்சி வயப்பட்ட நிலையில் தன்னையறியாமலே சந்தியாவின் வலது கரத்தைத் தன் இடது கரத்தால் இறுகப் பிடித்துக் கொண்டு வலது கையைத் தலைக்கு மேல் உயர்த்தி, ''ஜயஹே! ஜயஹே! ஜயஹே! ஜய ஜய ஜய ஜயஹே!'' என்றான் உச்சக் குரலில்.

சந்தியாவும் அவ்வாறே தன் வெண் தந்தம் போன்ற இடது கரத்தைத் தூக்கி, ''வெற்றி! வெற்றி! வெற்றி!'' என்றாள் வீணையின் டங்கார தொனியில்.

எதிரேயிருந்த கோயிலின் கொடி மரத்து இலைமணிகள் காற்றிலே குலுங்கிக் கணகண வென்ற இன்னொசையை எழுப்பின.

சுக விநாடிகள் சில கழன்றோடி மறைந்த பின்—

இன்பக் கனவு கண்டு கண் விழித்தவர்கள் போல் ஒரு போதைத் தள்ளாடலுடன் திரும்பிய சபேசனும் சந்தியாவும் ஒரே சமயத்தில் நிமிர்ந்து ஒருவரையொருவர் விழிகளால் விழுங்கினர். மறு கணம், அவள் அவனது பின்னவிட்ட பிடியிலிருந்து நழுவித் துள்ளிச் சற்றுத் தொலைவில் போய்த் தலை குனிந்து நின்றாள்.

''புறப்படலாமா, என் வீட்டுக்கு?'' என்று பூஞ்சிரிப்புடன் கேட்டுக் கொண்டே ஓரடி முன்னால் வந்தான் சபேசன்.

'ஊஹூம்' என்று தலையசைத்த சந்தியா, ''இன்னொரு நாளைக்கு வருகிறேன்'' என்று கொஞ்சும் குரலில் குழறியவாறு குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு, ''வணக்கம்'' என்றாள்.

''நோமஸ்கார்!''

இதைக் கேட்டுக் கலீரெனச் சிரித்த அவள் அங்கிருந்து அழகு நடைபயின்று விரைந்தாள்.

சபேசன் வேலை தேடும் படலத்தைத் தொடங்கி ஐந்து நாட்களாகி விட்டன. ஆறும் நாள் காலையான இன்றும் வேலை கோரி எழுதிய மனுக்கள் சகிதம் வீட்டை விட்டுப் புறப்பட ஆயத்தமான அவனை அபசகுனம் போல் கூப்பிட்டு, ''எங்கே? தம்பி, வெளியே கிளம்பிட்டீங்களா?'' என்று கேட்டுக்கொண்டே பின்கட்டிலிருந்து வந்தாள் அத்தை மீனாட்சி.

தயங்கி நின்ற சபேசன் அவளைத் திரும்பிப் பார்த்தான்.

''மளிகைக் கடை கவுண்டர்கிட்டே போன வாரம் நாலு படி அரிசி வாங்கினதில் ஆறு ரூபாய் பாக்கி நிற்குது. மனுஷன் தினந்துக்கும் நடையா நடக்கிறார். நீ போற வழியிலே அவரைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போயிடு. நாளைக்குக் கொடுக்கிறேன்னு. இல்லேன்னு அவர் இங்கே வந்து தெருவிலே நின்னு சத்தம் போடுவார். பார்க்கிறவங்களுக்குக் கேவலம் ஆகும்.''

இடிந்து போய்த் திண்ணையில் அப்படியே உட்கார்ந்துவிட்ட சபேசன், ''நான் எங்கேயும் போகவில்லை, அத்தை!'' என்று முணுமுணுத்தான்.

''அப்படீன்னு அவர் இங்கே வருவார். வந்தா தாக்கல் சொல்லிடு. நான் வயக்காடு வரை போயிட்டு வாரேன்'' என்றவாறு கூடையை இடுப்பில் வைத்துக்கொண்டு வெளியே புறப்பட்டு விட்டாள் அத்தை.

முன்பு ஒரு நாள் அவள் இப்படிச் சொன்ன போது சபேசன் பத்து ரூபாய் கொடுத்தான். இரண்டு வாரங்களுக்குப் பிறகு மீண்டும் இன்று அதே பல்லவி. இதற்கு அர்த்தம் என்ன? அது அவனுக்குத் தெரியும். அதன் ஆரம்ப கருதியாய்க் கடந்த இரண்டு மூன்று தினங்களாகவே வீட்டில் அடிபட்டு வரும் அலுப்புச் சலிப்பான பேச்சையும் அவன் கவனிக்கத் தவறவில்லை. ஆனால் அவனுடைய கையிருப்பே இப்போது பதினைந்து ரூபாய்தான். ஆகவே, இவ்வுலகத்தில் அவனுக்கு இருக்கும் ஒரே ஆதார ஆஸ்தியான அந்தத் தொகையில் கை வைக்க மட்டும் அவன் மனம் இடம் தரவில்லை.

வெளியே போவதா, வேண்டாமா என்ற குழப்பத்துடன் திண்ணையில் உட்கார்ந்திருந்த சபேசனின் நெஞ்சம் பெரிதும் சோர்ந்து விட்டது. ஐந்து தினங்களாகக் கோவை நகரிலும், அதனைச் சுற்றியுள்ள ஊர்களிலும் உள்ள பஞ்சாலைகளிலும், வேறு கனரகத் தொழிற்சாலைகளிலும் அவன் வேலை கேட்டு அலையாய் அலைந்தும் இன்று வரை நம்பிக்கையான பிடிப்பு எதுவும் கிடைக்கவில்லை. பல இடங்களில் 'நோ—வேக்கன்ஸி'; சில இடங்களில் 'பார்க்கலாம், பதில் அனுப்பப்படும்'; மற்றும் சில இடங்களில், 'இன்று போய் நாளை வா'; இன்னும் சில இடங்களில் 'முன் அநுபவம் தேவை'; வேறு சில இடங்களில் 'வேலை உண்டு. ஆனால்......' — இந்த 'ஆனாலு'க்குப் பல அர்த்தங்கள் இருப்பதைக் கொஞ்சம் தாமதமாகவே அவன் புரிந்துகொண்டான். அதாவது, ஜாதி, மதம், அரசியல் கட்சிச் சார்பு, பெரிய மனிதர்களின் சிபாரிசு; லேபர் யூனியன்களின் கெடுபிடி, கங்காணிகளின் சுயநலம், லஞ்சக் கோரிக்கை இத்தியாதி, இத்தியாதி! இவற்றில் எதற்குமே ஈடுகொடுக்க வக்கும் வகையும் லாயக்குமில்லாத அவன் ஏதோ ஒரு குருட்டு நம்பிக்கையில் 'இன்னமும் முயற்சி பண்ணிப் பார்க்கலாமே' என்றுதான் இன்றும் வெளி

சென்னை : பிளாஸா, ஸ்ரீ கிருஷ்ணா, மஹாலக்ஷ்மி, ராம் மற்றும் தென்னாடெங்கும்

அக்டோபர்

23உ

முதல்

மேகலா பிக்சர்ஸ் அளிக்கும்

கருணாநிதியின்

# பூமாலை

டைரக்ஷன்

ப. நீலகண்டன்

தயாரிப்பு:

முரசொலி மாறன் M.A.



பண்டிட்
டி.கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம் பிரைவேட் லிட். மதராஸ்-17

---

# மூலத்தைச் சுருக்குவதற்குப் புதிய வழி

அரிச்சலைப் போக்குகிறது • வலியிலிருந்து
துரித நிவாரணம் அளிக்கிறது.

முதல் தடவையாக, விஞ்ஞானம் மூலத்தைச் சுருக்கவும், அரிச்சல், இரத்தப்போக்கு மற்றும் வலியிலிருந்தும், புதியதொரு வலியில்லாத முறையில் நிவாரணம் அளிக்கக் கூடிய மருந்தொன்றைக் கண்டுபிடித்திருக்கிறது.

டாக்டர்களின் கண்காணிப்பில் நடத்தப்பட்ட சோதனைகளும் இதை நிருபித்தன. வலியும் அரிச்சலும் உடனேயே குணப்படுத்தப்பட்டன. மேலும், இதமாக வலியைப் போக்குவதுடன் உண்மையாகவே சுருக்கமும் ஏற்பட்டது.

மேலும், வியக்கத்தக்கதென்னவென்றால் இந்த நல்ல முன்னேற்றம் 10-20 வருடங்களாகப் பாதிக்கப்பட்டவர்களிடமும்கூடக் காணப்பட்டது.

இதன் இரகசியம் ஒரு புதிய குணமளிக்கும் மருந்தாகும்-பயோ-டைன்*-உலகப்பிரசித்தமான ஒரு ஆராய்ச்சிக்கூடத்தின் கண்டுபிடிப்பு. இந்த புதிய குணமளிக்கும் மருந்து ப்ரிப்பரேஷன் H* என்ற பெயரில் களிம்பு வடிவத்தில் கிடைக்கிறது. உண்மையிலேயே மூலத்தைச் சுருக்குவதுடன், ப்ரிப்பரேஷன் H வழுவழுப்பாக்குவதன் மூலம் மலம் கழிக்கும்போதுள்ள வலியைக் குறைக்கிறது.

நீங்கள் மூலத்தால் அவதிப்பட்டால் ப்ரிப்பரேஷன் H புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு (ஆங்கிலம்-ஹிந்தி) இன்றே கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்: டிபார்ட்மென்ட் 38, ஜாப்ரே மானேர்ஸ் & கோ லிட்., த. பெ. நிர். 976, பம்பாய்-1

**ப்ரிப்பரேஷன் H** *ட்ரேட் மார்க்

P.H.-S TAM

---

குணத்தில் சிறந்தவை

## ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு

15 ந. பை.

பிளாஸ்டிக் பொட்டலங்கள்

யில் கிளம்ப ஆயத்தமானான். இது பயனற்ற வீண் முயற்சி என்பதுபோல் 'எங்கே போகிறாய்?' என்று கேட்டு அவனுடைய காலை 'ஒடித்து'த் திண்ணையில் உட்கார வைத்து விட்டாள் அத்தை மீனாட்சி !

அவன் போய் ஒரு மணி நேரத்துக்குமேல் ஆகி விட்டது. இதுவரை எந்த மளிகைக் கடை கவுண்டரும் கடன் வசூலுக்கு வரவில்லை. 'பணம் கொடு' என்று நேரிடையாகக் கேட்பதற்குப் பதிலாக அத்தையம்மாள் இந்தவிதமான உபாயத்தைக் கையாள்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டுதான் நேற்றுக் கோவையிலிருந்து சபேசன் கால் நடையாகத் திரும்பி வரும்போது, 'இப்போதைக்கு நிரந்தரமான ஒரு நல்ல வேலை கிடைக்காமற் போனாலும் எங்கேயாவது ஹோட்டல்களிலோ, ஜவுளிக் கடைகளிலோ சர்வர் அல்லது சிப்பந்தி வேலையாவது தேடிக் கொள்ளலாம்' என்று எண்ணினான். ஆனால் இன்றோ, 'அந்த மாதிரி வேலைகளை இவ்வூரிலிருந்து கொண்டு செய்வதைவிட நேரே சென்னைக்குப் போய் ஏற்கனவே நன்கு பழக்கமான காகித ஜல்லி வாங்கி விற்கும் தொழிலைச் செய்யலாமே' என்று தோன்றியது. இதனால் மேலும் சலிப்படைந்த அவன் தான் எழுதி வைத்திருந்த 'அப்ளிகேஷன்'களை ஒரு மூலையில் வீசியெறிந்து விட்டுத் தாகூரின் 'கனி கொய்த'லை எடுத்துப் படிக்க ஆரம்பித்து விட்டான். அப்புத்தகத்தைக் கையிலெடுத்ததுமே சந்தியாவின் நினைவு அவனது மனத்திலே நிறைந்து அடைத்துக் கொண்டு விட்டது !

'அவளைப் பார்த்து இன்றோடு ஆறு நாட்களாகின்றன; இப்போது போய்ப் பார்த்து விட்டு வந்தால் என்ன?'

மறு சிந்தனைக்கே இடம் தராமல் விருட்டென்று எழுந்த சபேசன், மீண்டும் ஒரு முறை முகம் கழுவித் தலை வாரிக்கொண்டு கவுண்டன்பாளையத்துக்குக் கிளம்பத் திண்ணைப்படிகளில் இறங்கியபோது, தன்னையறியாமலேயே தன் காலைக் குனிந்து பார்த்தான். நன்றாகத் துவைத்து இஸ்திரி போட்ட பேண்ட்டும் சிலாக் சட்டையும் உடுத்தியிருந்தாலும் காலில் செருப்பு அணியாமலிருந்தது அவனுக்கே அநாகரிகமாகத் தோன்றியது. இத்தனை நாட்களும் இதே கோலத்தில்தான் அவன் வெளியே போய் வந்துகொண்டிருக்கிறான்; அப்போதெல்லாம் தெரியாத இந்த 'அநாகரிகம்' இப்போது மட்டும் அவனுக்குப் புலப்படுவானேன்?

தனக்குள் மெல்லச் சிரித்துக்கொண்ட சபேசன் அங்குமிங்குமாக நிமிர்ந்து பார்த்தான். சென்னையில் வாங்கி அணிந்து கொண்டு, வந்த மறு நாளே அறுந்து போன அந்த ஹவாய் ஸ்லிப்பர் திண்ணைத் தாழ்வாரத்தின் ஒரு மூலையில் செருகி வைக்கப்பட்டிருப்பது தெரிந்தது. அவற்றைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு, அறுந்த காலணியை மட்டும் திருப்பித் திருப்பிச் சிறிது நேரம் யோசனையுடன் பார்த்த அவன், சரேலென்று உள்ளே போய் ஊசியும் நூலுமாகத் திரும்பி வந்து உட்கார்ந்து, அறுந்திருந்த மேற்புறத்து ரப்பர் வார்களை ஊசியால் துளைத்து நூலைச் சுற்றிக் கோத்து



ஒன்றாக இணைத்துக் கட்டினான். ஐந்தே விநாடிகளில் அந்தக் காலணி அணிவதற்குத் தோதாகி விட்டது ! ஆனால் அது எவ்வளவு தூர நடைக்குத் தாங்குமோ?....

அழகிய நவநாகரிக யுவனாகப் புறப்பட்டான் சபேசன்.

ராஜன் காலனியைக் கடந்து கோயிலின் திருப்பு முனையை அடைந்த அவன், அந்தப் பிரும்மாண்டமான ஆலமரத்தைப் பார்த்ததும் தயங்கி நின்றான். கடந்த வாரம் அம்மரத்தடியில் நிகழ்ந்த சம்பவம் அவனது நெஞ்சத்தில் தேனடையெனத் தித்தித்துக்கொண்டு எழுந்தது.

'என் உள்ளங் கவர்ந்த தேசிய கீதத்துக்கு அந்தப் பெண்தான் என்ன எளிமையாகவும் தெளிவாகவும் பொருள் கூறி விளக்கினாள் ! அவள் அவ்வாறு விளக்கியதிலிருந்து அப்பாடலிலே என்னைவிட அவளுக்கு அதிகப் பற்றும் பக்தியும் உண்டு என்றல்லவா ஆகிறது?'

தன்னை மீறிய ஓர் இன்பச் சிலிர்ப்புடன் திரும்பிய சபேசன், அவளை உடனே போய்ச் சந்திக்க வேண்டுமென்ற ஆவலால் உந்தப்பட்டவனாய்க் கால்களை எட்டிப் போட்டு நடக்கலானான். அகதி முகாமை நெருங்கிய சபேசன், அங்கே ஒரு பெருங்கூட்டம் கூடி நிற்பதைக் கண்டு வியப்பும் திகைப்புமாகத் தயங்கி நின்றான்.

முகாமிலிருந்த அத்தனை அகதிகளும் ஒரு வித ஆத்திரப் பதற்றத்தோடு கப்பிச் சாலையில் கூட்டமாகக் கூடி நின்றனர். ஆயுதம் தாங்கிய போலீசார் ஒருபுறம் உஷாராக நிற்க, முகாம் அதிகாரிகளுக்கும், அகதிகளுக்கும் ஏதோ காரசாரமாக வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. சுரேஷ் சௌத்ரியும், அந்த முரட்டு வாலிபனும்தான் முன்னின்று அதிகமாக இரைந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

விவரம் புரியாமல் குழம்பி நின்ற சபேசன் சுற்றுமுற்றும் பார்த்தான். சந்தியா தன் குடிசைக்குப் பின்னாலிருந்த ஒரு புளிய மரத்தடியில் பயந்து நடுங்கி நின்று கொண்டிருப்பது தெரிந்தது. தன்னை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு தண்ணீர்த் தொட்டிக்கு அப்பால் போய் இறங்கி அவளை நோக்கித் தயங்கித் தயங்கிச் சென்றான்.

''சந்தியா !''

தொலைவில் கும்பலாக நின்ற தன் கூட்டத்தாரையே வெறித்துப் பார்த்துக்

கொண்டிருந்த சந்தியா திடுக்குற்றுத் திரும்பிப் பார்த்தாள்.

"ஓ..... நீங்களா?.... வாருங்கள்!"— அவனைக் கண்டதும் அவள் சற்றே பயம் தெளிந்தவளாய் முகம் மலர்ந்தாள்.

"என்ன சந்தியா, அது? ஏதோ சண்டை சச்சரவு நடப்பதுபோல் இருக்கிறதே!"

'ஆம்' என்பதாகத் தலையசைத்த சந்தியா மௌனம் சாதித்தாள்.

"விஷயம் என்ன? அகதிகளுக்குள் ஏதாவது தகராறு?"

"இல்லை" என்று முனகிய சந்தியா, பீதி கலந்த துயரத்துடன் மேலும் சொன்னாள்: "அகதிகள் புனர்வாழ்வு இலாகாவின் உத்தரவுப்படி சென்னை சர்க்கார் இங்குள்ள அகதிகளுக்கு ஓர் உதவித் திட்டத்தை அமுல் நடத்த முற்பட்டது....."

"அப்படியா?" என்றான் சபேசன், மகிழ்ச்சியுடன்.

"ஆமாம்; ஆனால் அந்த உதவி வேண்டாம் என்கிறார்கள் இங்கே இருக்கும் அகதிகள்!"

"என்னது?" என்றான்வியப்புடன்சபேசன்.

"சர்க்கார் விவசாயப் பண்ணையிலோ, அல்லது சொந்தமாக அளிக்கப்படும் சிறிதளவு நிலத்திலோ இங்குள்ள ஒவ்வோர் அகதிக் குடும்பமும் உழுது பயிரிட்டுத் தம் ஜீவனத்தை நடத்திக் கொள்ள வேண்டும் என்பது திட்டம். அதற்கான எல்லா உதவிகளையும் சர்க்கார் அளிக்கும்....."

"அருமையான திட்டம் ஆயிற்றே?"

"அதைத்தான் ஏற்க மறுக்கிறார்கள் அகதிகள்! நிலத்தை உழுது பயிரிடும் விவசாயிகளாக அவர்களுக்கு விருப்பமில்லை."

"வேடிக்கையாயிருக்கிறதே?"

"அதனால் கடை கண்ணிகள் வைத்து வியாபாரம் செய்ய ரொக்கப் பணம் வேண்டும் என்று கோருகிறார்கள். அப்படிக் கொடுக்க முடியாதென்றால் தங்களைத் தங்கள் சொந்த ராஜ்யமான மேற்கு வங்காளத்துக்கே அனுப்பும்படி கேட்கிறார்கள்."

"ஏன் அப்படி? அந்த முகாமிலிருக்கும் அகதிகளெல்லாரும் பாகிஸ்தானிலே வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் தாமா?"

"அவ்வாறு சொல்ல முடியாது. பெரும்பாலோர் பயிர்த் தொழில் செய்து கொண்டிருந்தவர்களே."

"பிறகு ஏன் இங்கு அந்தத் தொழில் செய்ய மறுக்கிறார்கள்?"

முகாம் அதிகாரிகளுடன் இரைந்து பேசிக் கொண்டிருந்த தன் தந்தையையும், அந்த முரட்டு வாலிபனையும் பயப்பிராந்தியுடன் ஏறிட்டுப் பார்த்த சந்தியா, "ஏனோ!...." என்று இழுத்தவாறு தலை குனிந்தாள்.

ஒன்றும் புரியாமல் விழித்த சபேசன், "நீ ஏன் இங்கு இப்படித் தனியாக வந்து நிற்கிறாய்?" என்றான் இளநகையுடன்.

"எனக்குப் பயமாக இருக்கிறது......" என்று துயரம் முட்டக் கூறினாள் சந்தியா. "தயவுசெய்து நீங்கள் இங்கிருந்து போய் விடுங்கள். நாளைக்கு நாம் சந்திப்போம்."

சபேசனின் முகம் வாடித் துவண்டது. "சரி; நான் வரட்டுமா?" என்றபடி சாலையை நோக்கி மெல்ல நடந்தான். காரணம், தான் செப்பனிட்டு அணிந்திருக்கும் காலணி அவளெதிரில் அறுந்து எங்கே தன் மானத்தை வாங்கி விடுமோ என்ற அச்சம் அவனுக்கு.

"ஒரு நிமிஷம்!"

அவன் நின்று பின்னால் திரும்பினான்.

ஏக்கம் கலந்த பேராவலுடன் அவனது முகத்தையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த சந்தியா, "சரி" என்று தலையாட்டி விட்டு வேறுபக்கம் திரும்பி நின்றாள்.

சபேசன் மௌனமாக முன்னோக்கி நடந்தான். முகாம் அதிகாரிகளுக்கும், அகதிகளுக்குமிடையே இப்போது வாக்குவாதம் உச்ச கட்டத்தில் நிகழ்ந்து கொண்டிருந்தது. ஆனால் அவனுடைய கவனம் வேறொரு பக்கம் திரும்பியது. ஆமாம்; அங்கே, டீக்கடைக்குப் பக்கவாட்டில் நின்றிருந்த அந்த மலையாளிப் பேர்வழி சிகரெட் குடித்தவாறு, அகதிகளின் கூப்பாட்டுப் பேச்சுக்களைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்!

அதற்கு மேல் அவ்விடத்தில் இருக்கப் பிடிக்காமல் தன் கிராமத்தை நோக்கி நடந்தான் சபேசன்.

மறு நாள் காலை பத்து மணி இருக்கும். சந்தியாவைக் காண வேண்டுமென்ற ஆர்வத் துடிப்புடன் அகதிகள் முகாமை அடைந்த சபேசன், சாலையோரமாக நின்று சுற்று முற்றும் பார்த்தான்.

இத்தனை நாட்கள் இல்லாத அளவில் முகாமைச் சுற்றிப் போலீஸ் காவல் பலமாயிருந்தது. அதனால்தானோ என்னவோ, முகாமில் ஒருவித ஆழ்ந்த அமைதியும் நிலவிக் கிடந்தது. ஆனால் அந்த முரட்டு வாலிபன் மட்டும் மரத்தடியில் கும்பலாக உட்கார்ந்திருந்த அகதிகளிடையே ஏதோ உணர்ச்சி வயப்படுத்தும் தொனியில் பேசிக் கொண்டிருந்தான்.

இதிலெல்லாம் அதிகக் கவனம் செலுத்தாத சபேசன், குடிசைகள் பகுதியைப் பரபரப்போடு பார்த்தான். அங்கிருந்த ஏழெட்டுக் குடிசைகளின் மூங்கில் தட்டிக் கதவுகள் பரக்கத் திறந்து கிடந்தன. அப்படிக் காலியாகக் கிடந்தவற்றுள் சந்தியாவின் குடிசையும் ஒன்று!

கண்ணில் மின்னல் பொறி பறந்தாற் போல் சற்று நேரம் அசைவற்று நின்றுவிட்ட சபேசன் தன்னை மீறிய ஒரு தள்ளாட்டத்துடன் டீக்கடையை நோக்கிச் சென்று கடைக்காரரிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்து, அங்கே காலியாகக் கிடக்கும் குடிசைகளைப் பற்றி விவரம் விசாரித்தான்.

"இன்றைய காலை பேப்பரை நீங்கள் பார்க்கவில்லையா, தம்பி? இங்கிருந்த அகதிகளில் ஏழெட்டுக் குடும்பங்கள் நேற்றிரவு முகாம் அதிகாரிகளிடம் சொல்லிக் கொள்ளாமல் எப்படியோ வெளியேறி ஓடிப் போய் விட்டார்களாம்! அவர்கள் இருந்த குடிசைகள் தாம் காலியாகக் கிடக்கின்றன!"

இதைக் கேட்ட சபேசனின் மனம் பாறையாகக் கனத்தது. தன் உயிரில் ஒரு பாதியை இழந்தவன்போல் ஒரேயடியாகக் குன்றிக் குமைந்து போனான் அவன். (தொடரும்)

# டோக்கியோ செல்லும் டாக்டர்



அணு ஆயுதங்கள் ஒழிப்பு பற்றிக் கென்னடியைச் சந்தித்துப் பேசப் பாரத நாட்டிலிருந்து ராஜாஜி, சிவராவ் ஆகியோர் அமெரிக்கா போனபோது துணைக்கு யாரை அழைத்துப் போவது என்று ராஜாஜி நீண்ட நேரம் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. அவருடன் சென்றவர் டாக்டர் சத்யநாராயணா. ஒரு டாக்டராக மட்டுமின்றி நண்பராகவும் காரியதரிசியாகவும் உறுதுணையாகவும் செயலாற்றினார் அவர் அப்போது. அத்துடன் முதிர்ந்த வயது காரணமாக ராஜாஜி அவர்களுக்குத் தேவைப்படக்கூடிய சிறு சிறு உதவிகளைக்கூடச் செய்தார். தமது பதவி, கௌரவம், அந்தஸ்து ஏதும் பாராட்டாமல் பெருமிதத்துடன் இந்தப் பணிகளைப் புரிந்த பண்பாளர் அவர்.

கென்னடி எப்படி இருப்பாரோ என்னமோ, எவ்விதம் நடந்து கொள்வாரோ என்று எண்ணிக் கொண்டு போன சத்யநாராயணாவுக்குப் பெரிய அதிசயம் காத்திருந்தது. அறிவிலும், வயதிலும், அநுபவத்திலும் முதிர்ந்தவரான ராஜாஜியிடம் மதிப்பும் அன்பும் கொண்டு பேசிப் பழகிய கென்னடி தமது பிராயத்தவரான டாக்டரின் தோள் மீது கைபோட்டுக் கொண்டு வெள்ளை மாளிகை தோட்டத்தில் உலவி வந்தார்! பணம், பதவி, மதம், இனம், நிறம் போன்ற பாகுபாடுகளையெல்லாம் கடந்து தமக்குச் சமமாகக் கீழிறங்கி வந்து அவர் உறவாடிய பாங்கு கண்டு பிரமித்துப் போனார் அதிர்ஷ்டக்காரரான சத்யநாராயணா.

பேச்சு வார்த்தைகளெல்லாம் நடந்து முடிந்த பிறகு, கென்னடி டாக்டர் சத்யநாராயணாவைத் தனியே அழைத்து, ''உங்களிடம் ஒரு மகத்தான பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது: ஒரு மகத்தான மனிதரை நன்கு கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு'' என்றார்.

டாக்டர் சத்யநாராயணா, சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஈ. என். டி. (காது, மூக்கு, தொண்டை) ஸர்ஜனாகவும் சென்னை மருத்துவக் கல்லூரியில் அதே பிரிவுக்குப் பேராசிரியராகவும் பணியாற்றுகிறார்.

இத்துறையில் நடக்கும் மூன்று சர்வதேச மாநாடுகளில் கலந்து கொள்ளத் தற்போது ஜப்பானுக்குச் சென்றிருக்கிறார். காது, மூக்கு, தொண்டை, நுரையீரல், 'ஈஸாபகஸ்' எனப்படும் உணவுக் குழல் பகுதி ஆகியவற்றுக்கு ஏற்படும் நோய்கள் குறித்து ஆராய நான்கு வருஷங்களுக்கு ஒரு முறை கூடும் இம்மகாநாடுகள். இம்முறை ஜப்பானில் பல நகரங்களில் நடக்கின்றன. மகாநாடுகளின் விஞ்ஞானப் பகுதிக்குத் தலைமை தாங்கி நடத்திக் கொடுப்பார் டாக்டர் சத்யநாராயணா. பல தடவைகளில் அயல் நாடு சென்று பல மாநாடுகளில் பங்குபற்றியிருந்தாலும் இம்முறை இந்த மிகப் பெரிய கௌரவத்தை அடைந்துள்ள டாக்டர் சத்யநாராயணா பாரதத்தின் பெருமையையும் அங்கு சிறக்கச் செய்வார் என்பதை அவருடன் நெருங்கிப் பழகிய அறிஞர்கள் நன்கு அறிவார்கள். அவரது அறிவை அளவிட்டுக் கூற முடியாத போதிலும் அவரது இனிய சுபாவத்தை அள்ளிப் பருகி ஆனந்தித்தபடியே அவரிடம் சிகிச்சை பெற்றுள்ள அன்பர்கள் பலருக்கு அவர் தமது புன்னகை ஒன்றினாலேயே அனைவரது உள்ளங்களையும் கவர்ந்துவிடும் திறம் படைத்தவர் என்பது தெரியும். ஆகக்கூடி, டாக்டர் சத்யநாராயணா தமது டோக்கியோ விஜயத்தினை வெற்றிகரமாக முடித்துத் திரும்புவார் என்பதில் சந்தேகமில்லை. வாழ்த்துகிறோம்.

# அவள் எங்கே?

கதை: கௌசிகன்
சித்திரம்: ரமணி..

நினைவு திரும்பப் பெற்ற ரேணுகா சுய ஆடையில் தன் நிலை உணர்ந்து வெட்கமடைகிறாள்.

மன்னிக்க வேண்டும். உணர்ச்சி வசப்பட்டு தர்மராஜனைச் சந்திக்கப் போய் சுபந்திரமாயத்தில்..

நீங்கள் தந்திருக்கும் நிஜ நீதி புதிய தகவல்.

30

இது என்ன புதிய கதையாக இருக்கிறது? அப்படியானால்...

இந்த முகச் சாயலுக்குரியவருக்குத்தான் அந்தக் கதை தெரியும்.

முகமூடியணிந்து உலாவிய கொலைகாரனைக் காவலில் வைத்துவிட்டு எல்லாரும் தர்மராஜனின் பங்களாவுக்கு வருகிறார்கள்.

மனிதன் தவறு செய்யவும் கூடாது. பாசத்துக்கு அடிமையாகவும் கூடாது. இந்த இரண்டையும் செய்ததால் நான் சொல்ல முடியாத துன்பங்களுக்கு ஆளானேன். பலரையும் கஷ்டத்துக்கு உள்ளாக்கினேன்.

சங்கிலியாண்டி மாறுவேடத்தை கைது செய்தீர்களே - அவன் பெயர் கந்தசாமி. என்னைப் போல வேஷமிட்டு அவன் வாழ்ந்தது எனக்குத் தெரியாமலில்லை. ஒரு விதத்தில் நானே அதற்கு உடந்தையாக இருந்தேன் என்று கூடச் சொல்லலாம். நீதியையும் நேர்மையையும் காப்பாற்ற வேண்டிய நான் பாசத்தின் வசப்பட்டேன். படாத பாடுபட்டேன். எனக்கு ஒரு தம்பி உண்டு. முறையற்ற வாழ்வு வாழ்ந்தான் அவன். எத்தனையோ சொல்லிப் பார்த்தேன். கேட்கவில்லை. திருத்த முடியாத பிறவியாகிப் போய்விட்டான். கடைசியில் மறக்க முடியாத ஒரு காரியத்தையும் செய்துவிட்டான்.

உங்களுக்கு வேடிக்கையாகக் கூட இருக்கும். அவள் எங்கே என்ற பிரச்னையில் நீங்கள் குழம்பிக் கொண்டிருந்தீர்களே, என் தம்பியின் செயலும் இதுபோல ஒரு பெண்ணின் விஷயம் தான். அவளைக் கொலை செய்துவிட்ட இரவில் என்னைத் தேடி ஓடி வந்தான் - தன்னை எப்படியாவது காப்பாற்ற வேண்டுமென்று. அப்போது நான் பிரபல லாயர். இருந்தாலும் தம்பியின் பாசம்தான் முன் நின்றது. தர்மத்தையும் நீதியையும் ஒதுக்கித் தள்ளினேன். என்னுடைய வாதத் திறமையும் சந்தர்ப்பத்தின் நிலையும் என் தம்பிக்குச் சாதகமாக இருந்தன...

அந்த அதிசய நடனத்தைப் பார்க்கச் சிரிப்பு வந்தாலும், நமக்கும் அம்மாதிரியான நிலைமை ஏற்படலாம் என்பதை மறந்துவிடக்கூடாது. காரணம்? சிறிய விஷயம் தானே என்று பல சமயங்களில் கவனக்குறைவாக இருப்பதால்தான் நாம் தவறிவிடுகிறோம். வாழைப் பழத்தோல் சிறிதுதான். என்றாலும் அதனால் விளையும் துன்பம் சிற்சில சமயங்களில் பொறுக்க முடியாததாகி விடுகிறது. எனவே, வாழைப் பழத்தோல்களையும் பிற பழங்களின் தோல்களையும் அவற்றிற்குரிய குப்பைத்தொட்டியில் போடவேண்டும். ஈரமுள்ள தரையில் நடக்கும்போது கவனத்தோடு நடக்க வேண்டும். ஆபத்து நேரக்கூடாததுதான். ஆனால் நேரிடுகிறதே! பத்திரமாக இருப்பதோடு பாதுகாப்புடனுமிருக்க எல்லாவிதமான எச்சரிக்கைகளையும் இன்சூரன்சையும் இயன்ற அளவில் மேற்கொள்ளுங்கள்.

# காலைத் தூக்கி நின்று ஆடும்...



**ஆயுள் இன்சூரன்சு** போல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை

# பல்சுவைப் பக்கங்கள்



★ விமானப் போர்ப் பயிற்சித் தளத்தில் அனுபவ மிக்க வீரர் ஒருவர் பயிற்சிப் பாடங்களை மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்து வந்தார். பாடம் போதிப்பதற்கு நடுவே தம் வீர தீரப் பிரதாபங்களைக் கூறி வந்தார். ஒவ்வொரு தடவை சொல்லும் போதும் சுட்டுத் தள்ளின விமானங்களின் எண்ணிக்கை கூடி வந்தது. ஒரு நாள் மாணவன் ஒருவனை, 'நாம் வரிசையாக மேலே பறந்து கொண்டிருக்கும்போது, நீ எதிரி விமானியைப் பார்த்தால் என்ன செய்வாய்?' என்று கேட்டார் பயிற்சியாளர்.



'உடனே உங்கள் பின்னால் வந்து நீங்கள் சுட்டுத் தள்ளும் விமானங்களை எண்ணுவோம், ஸார்!' என்றான் மாணவன் சட்டென்று. -பி.-ஆர்.ராஜாராம்.

★ ரகசியம்! மூன்று பேர்வழிகள் ஒரு ரகசியத்தைக் காப்பாற்ற முடியும் — அவர்களில் இருவர் இறந்திருந்தால்! — பெஞ்சமின் ஃப்ராங்க்ளின்



இருவருக்கிடையில் உள்ள ரகசியம் தெய்வத்தின் ரகசியமாம்; மூவரிடையே உள்ள ரகசியம் உலகறிந்த ரகசியமாம். — ஒரு பிரெஞ்சுப் பழமொழி

★ வெற்றியின் ரகசியம்: மூதாட்டி ஒருத்தி சட்ட நிபுணர் ஒருவரிடம் சென்று ஒரு கேஸ் வெற்றி பெற என்ன தேவை என வினவினாள். நிபுணரின் பதில்:



முதலாவதாக உங்கள் கேஸ் வலுவானதாக இருக்கவேண்டும். இரண்டாவதாக, ஒரு நல்ல வக்கீல்; மூன்றாவதாக, நல்ல சாட்சியம்; நான்காவதாக, நல்ல ஜூரி; ஐந்தாவதாக நல்ல ஜட்ஜ். கடைசியாக நல்ல அதிர்ஷ்டம். இவ்வளவே. வெற்றிக்கு வேறொன்றும் தேவையில்லை.

— என். ஸ்ரீநிவாஸ்.

## ஆராய்ச்சிக்குத் தூண்டுகோல்

ஒரு நாட்டை உன்னதமாக்குவது எது? புதும் புது ஆராய்ச்சிகளுக்கும் கண்டுபிடிப்புகளுக்கும் தூண்டுகோலாக உள்ள பேடண்ட் முறைதான்!

ஆராய்ச்சியாளர்கள், விஞ்ஞானிகள் தாங்கள் கண்டுபிடிக்கும் புதிய விஷயங்களைப் பதிவு (Patent) செய்வதால் பெரும் பயனடைய வாய்ப்புண்டு. இந்த மாதிரி குறிப்பிட்ட காலத்துக்குத் தங்கள் கண்டுபிடிப்புக்கு ஏகபோக உரிமைப் பத்திரம் பெறுவதால் நல்ல வருவாய் அடைவதோடு அதுவே மேலும் பல புதிய ஆராய்ச்சிகளுக்குத் தூண்டுகோலாகவும் அமைகிறது.

1790ம் வருடத்தில் அமெரிக்காவில் மூன்று உரிமைப் பத்திரங்களை (Patent) வழங்கப்பட்டன. அதன் பின் 175 வருடங்களுக்குப் பிறகு இந்த உரிமைப் பதிவு எவ்வளவோ வளர்ந்து விட்டது. அமெரிக்காவில் மட்டும் முப்பது லட்சம் உரிமைப் பத்திரங்கள் வழங்கப்பட்டுள்ளனவாம். மோட்டார்கள், விமானம், தந்தி, ரேடியோ, டெலிவிஷன், மின்சார விளக்கு, பிளாஸ்டிக், திரைப்படச் சாதனங்கள், டைப்ரைட்டர், தையல் இயந்திரம் போன்ற பலப் பல விஷயங்கள் ஆரம்ப நாட்களில் இந்த உரிமைப் பதிவு பெற்றவையே. இவையெல்லாம் கண்டுபிடிக்கப்பட விஞ்ஞானி எடுத்துக் கொள்ளும் காலத்துக்கும் அடையும் பொருட் செலவுக்கும் ஈடுகட்டும் வகையில் அவர் அவற்றுக்குக் கொஞ்ச காலம் ஏகபோக உரிமை பெறலாம்.

இந்த உரிமைப் பதிவில் கண்டுபிடிப்பின் நுண்ணிய இரகசியமனைத்தும் அம்பலப்படுத்தப் படுகின்றன. உரிமைப் பதிவுக் காலம் முடிந்ததும் அந்த நவீன சாதனங்கள் பெருவாரியாக உற்பத்தி செய்யப்பட வாய்ப்பேற்படுகிறது. இந்த மாதிரி உரிமைப் பதிவில்லாமல் கண்டுபிடிப்புக்கள் எல்லாம் உடனடியாகப் பொதுவுடைமையாகிவிடும் என்ற கொள்கை கொண்ட நாடுகளான இத்தாலியும் சோவியத் ருஷ்யாவும் குறிப்பாக மருந்துகள் கண்டுபிடிப்பில் முன்னேற்றம் காணவேயில்லை. இந்தத் தருணத்தில் லிங்கனின் பொன் மொழிகளை நினைவு கூர்வோம். "ஆராய்ச்சித் தீ பிரகாசமாகக் கொழுந்து விட்டெரிய ஊற்றப்படும் எண்ணெய் போன்றது பேடண்ட் முறை" என்றார் அவர். 'இந்த உரிமைப் பதிவு இல்லாத நாடு பக்க வாட்டிலும் பின்னேயும் மட்டுமே நகரக் கூடிய நண்டினைப் போன்றது' என்று மார்க் ட்வெய்ன் சொன்னது எவ்வளவு பொருத்தம்!

"ஏனய்யா! நீங்க இதற்கு முன்னாலே நாதஸ்வர வித்வானோ?" ●



'ஸாரி'

இரவு நேரம். மூன்றாவது வகுப்புத் தூங்கும் பெட்டியில் எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர்.

திடீரென்று மேல் தட்டிலிருந்து தொப்பென்று ஏதோ கீழே விழுந்தது. எல்லோரும் திடுக்கிட்டு எழுந்தனர். விழுந்தது ஒரு செருப்பு.

'ஸாரி' என்றார் மேல் தட்டிலிருந்தவர்.

எல்லோரும் மீண்டும் தூங்கிப் போயினர். சிறிது நேரம் கழித்து மீண்டும் ஏதோ விழுந்தது. எல்லோரும் விழித்துக் கொண்டனர். விழுந்தது ஒரு மூட்டை. 'ஸாரி' என்றார் மேல் தட்டிலிருந்தவர்.

சிறிது நேரம் கழித்து மறுபடியும் 'தொப்'பென்று சற்று அதிகமாகவே சப்தம் செய்துகொண்டு ஏதோ விழுந்த ஒலி கேட்டு அனைவரும் தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்தனர்.

'ஸாரி' என்றார்கள் கீழ் தட்டிலிருந்தவர்கள். விழுந்தது மேல் தட்டிலிருந்தவரேதான்!

- கே. சுந்தரேசன்

**ஃபூல்ஸ்கேப்:** காகிதத்தின் பல அளவுகளில் ஃபூல்ஸ்கேப் அளவும் ஒன்று என்பது அனைவருக்கும் தெரியும். காகிதம் கண்டுபிடிக்கப்பட்ட ஆரம்பக் காலத்தில் இந்தக் குறிப்பிட்ட அளவுக் காகிதத்தில் கோமாளியின் தொப்பி அணிந்த தலையை நீர்க் குறியாகப் பதித்ததால் இப்பெயர்பெற்றது. தற்போது அந்த நீர்க்குறி இல்லையானாலும் இப்பெயரே நிலைத்துவிட்டது.

— ராஜன்



## போலீசாருக்குப் பயிற்சியளிக்கும் நாடகமேடை

● நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் பராமரிக்கும் முக்கிய பொறுப்புக்களை ஏற்கும் போலீசாருக்குப் பயிற்சி அளிக்க, மேற்கு ஜெர்மனியில் 'பயிற்சி நாடக மேடை'யே இருக்கிறது. இதில் பாங்க், போலீஸ் நிலையம், கோர்ட்டு போன்றவை அப்படியே கட்டப்பட்டிருக்கின்றன. கொள்ளை நடப்பது போன்ற நிகழ்ச்சிகளில் அநுபவம் மிக்க போலீஸ் அதிகாரிகள் பலர் சேர்ந்து நடிப்பார்கள். புதிய போலீஸ்காரர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை விளக்குவார்கள். படத்தில் கலாட்டா செய்பவர் ஒருவரிடமிருந்து துப்பாக்கியைப் பறிப்பது எப்படி என்பதை ஒரு போலீஸ்காரர் நேரடியாகக் கற்றுக் கொள்கிறார். புதிய போலீஸ்காரர்கள் எப்படி நடந்தார்கள் என்பதைப் பெரிய போலீஸ் அதிகாரிகள் எடுத்துக் கூறி, குறைகளைத் திருத்த முயலுவார்கள்.

— யூ. பி. எஸ்.

○ 'பலாப் பழத்தில் ஈ மொய்த்தாற் போல்' என்ற வசனம் எல்லோருக்கும் தெரிந்ததே. நகர சபைகள் பல "ஈ" ஒழிப்பு வாரங்களைக் கொண்டாடுகின்றன. ஈயினால் ஏற்படும் தொல்லையை விவரித்து "எட்மண்ட்க்ளார்க்" என்பவர் எழுதுகிறார். ஈயினால் முப்பது வகை ஆபத்தான நோய்கள் பரவுகின்றன. 3,000,000 வகைக் கிருமிகளை ("பாக்டீரியா") ஈக்கள் தங்கள் உடல்களின் மேற்பக்கங்களில் எடுத்துச் செல்கின்றன. கோடைக்காலங்களில் 325,923, 200,000,000 ஈக்கள் உற்பத்தியாவதற்கு ஒரு ஜோடி ஈக்கள் போதுமானவை என நம்பத் தகுந்தவர்கள் கூறுகிறார்களாம்.



[ஆதாரம்: 'ஸண்டே ஸ்டாண்டர்டு' 'ஈ தொல்லை' என்ற கட்டுரை]

---

ஒருவர்: புடவை வாங்குவதற்குன்னு அந்தக் கடைக்குள் போகாதீங்க! பழம் புடவைகளையெல்லாம் உங்க தலையில் வைத்துக் கட்டி அனுப்பி விடுவார்கள்.



# மக்கள் நிலை



## அணில்

கீச்சென்று கத்தி - அணில்
கிளையொன்றில் ஓடிப் - பின்
விச்சென்று பாய்ந்து தன்
காதலன் வாலை
வெடுக்கென்று தான் கடிக்கும்
ஆச்சென்று சொல்லி - ஆண்
அணைக்க நெருங்கும் - உடன்
பாய்ச்சிய அம்பென கீழ்த்தரைநோக்கிப்
பறந்திடும் பெட்டை அணில் !
மூச்சுடன் ஆணோ - அதன்
முதுகிற் குதிக்கும் - கொல்லர்
காய்ச்சும் இரும்பிடை நீர்த்துளி ஆகக்
கலந்திடும் இன்பத்திலே.
ஏச்சுக்கள் அச்சம் - தம்மில்
எளிமை வளப்பம் - சதிக்
கூச்சல் குழப்பங்கள்
கொத்தடி மைத்தனம்
கொஞ்சமும் இல்லை அங்கே!

## மனிதர்

மஞ்சம் திருத்தி - உடை
மாற்றி யணிந்தே - கொஞ்சம்
கொஞ்சிக் குலாவிட நாதன் வரும்படி
கோதை அழைக்கையிலே,
மிஞ்சிய சோகம் - மித
மிஞ்சிய அச்சம் - 'என்
வஞ்சியும் பிள்ளையும்
நானிறந்தால் என்ன
வாதனை கொள்வாரோ'
நெஞ்சிலிவ் வாறு - நினைந்
தங்குரைக் கின்றான் : - 'அடி
பஞ்சைப் பரம்பரை நாமடி !
பிள்ளைகள்
பற்பலர் ஏதுக்' கென்பான்
கஞ்சி பறித்தார் - எழுங்
காதல் பறித்தார் - கெட்ட
வஞ்சகம் சேர்சின்ன மானிடச்
சாதிக்கு
வாய்ந்த நிலை இதுவோ !

(குடும்பக் கட்டுப்பாட்
டுப் பிரசாரம் தீவிரமாய்
நடைபெற்று வரும் இந்
நாளில் பாரதிதாசனின்
இக்கவிதை மக்களின்
பரிதாபநிலை குறித்துச்
சினம் பொங்கச் சிந்
திக்க வைக்கிறது.)



# சாதல் இல்லையேல் காதல்




[நாகராஜனுக்குக் காதலி மாலதி கிடைக்கும் முயற்சியிலே ஈடுபட்ட சுரேஷுக்கு நிர்மலாவைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டுகிறது. சுரேஷ் தனக்கு ஏற்பட்ட காதலில் எங்கே தன் காரியத்தை மறந்து விடுவானோ என்று நாகராஜன் பயந்தான். அவன் நினைத்தபடியே நடக்கிறதா? படித்தால் தெரிந்து விடுகிறது.]

சுரேஷ் (பயந்து): கார் ஓட்டறச்சே சிரிக்காதீங்களேன், ப்ளீஸ்!

நிர்: டோண்ட் வொர்ரி!

சுரே: உங்களை எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்கு.....

நிர்: என்ன சொன்னீங்க?

சுரே: உங்க டிரைவிங்..... உங்க.... டிரைவிங்கை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு!

நிர்: தாங்க்யூ!

சுரே: இந்த மாதிரி நாம் ரெண்டு பேரும் தனியா கார்லே போறதைப் பார்த்தா உங்க ரெிலேடிவ்ஸ் என்ன நினைச்சுப்பாங்க?

நிர்: உங்களை யாரோ எங்கப்பா பிரெண்ட்னு நினைச்சுப்பாங்க!

சுரே: உங்க பிரெண்ட்ஸுக்கு என்ன மூளையே கிடையாதா?.... ஓர் இளம் யுவதி.....யங் கேர்ல், ஒருத்தனோட கார்லே போனா, அவனை, அவளுடைய அப்பா பிரெண்ட்னு நினைச்சுப்பாங்க?

நிர்: ஆளைப் பொறுத்திருக்கு!.... நான் ஒரு ப்யூட்டிபுல் யங்மேனோட கார்லே போனா.....

சுரே: போனா.....?

நிர்: எனக்கு வெக்கமா இருக்கு!

சுரே: அட! உங்களுக்கு வெட்கப்படத் தெரியுமா?

நிர்: போங்க, மிஸ்டர் சுரேஷ்!....

சுரே: சரி..... நீங்க ப்யூட்டிபுல் ஆளோட கார்லே போனா என்ன நினைச்சுப்பாங்க?

நிர்: என்ன நினைச்சா என்ன? அழகானவரோட கார்லே போனால்தானே?.... உங்களோடே போனா என்ன?

சுரே: நான் அழகா இல்லையா?

நிர்: சே! சும்மா ஜோக் அடிச்சேன்!

சுரே: ரொம்ப சீரியஸா ஜோக் அடிக்கிறீங்களே! எனக்குச் சிரிப்பா வரது!

நிர்: ஹஹ்ஹஹா!....

சுரே: ஓர் அழகான இளம் வாலிபனோட கார்லே போனா உங்க பிரெண்ட்ஸ் என்ன நினைச்சுப்பாங்க, அதைச் சொல்லவே இல்லையே?

நிர்: நீங்க மிஸ்டேக் பண்ணிக்க மாட்டீங்களே?

சுரே: மாட்டேன். சொல்லுங்க?

நிர்: என்ன தெரியுமா நினைச்சுப்பாங்க? அவங்க பந்தயத்திலே தோத்துப் போயிட்டோம்னு நினைச்சுப்பாங்க!

சுரே: பந்தயமா?

நிர்: ஆமாம்! நாங்க பிரெண்ட்ஸ் எல்லாம் ஒரு பந்தயம் போட்டோம். யார் இன்னிக்கு சாயங்காலத்துக்குள்ளே ஒரு ப்யூட்டிபுல் யங் மேனைக் கார்லே தைரியமா அழைச்சுக்கிட்டுப் போறாங்களோ, அவங்களுக்கு மத்தவங்க டின்னர் கொடுக்கணும்! நான்தான் ஜெயிச்சேன்! எனக்கு இன்னிக்கு ஹைட் டின்னர்!

சுரே: அட கடவுளே! இதுக்காகத்தான் நான் கூப்பிட்ட உடனே கார்லே வந்தீங்களா?

நிர்: யெஸ்! எப்படி என் ஐடியா? அத்தனை பிரெண்ட்ஸும் அங்கே பீச்சிலேதான் இருந்தாங்க! உங்களாலே நான் ஜெயிச்சேன்! தாங்க் யூ!

சுரே: இத்தனை நேரம் எங்கிட்ட பேசினதெல்லாம் அதுக்காகத்தானா?

நிர்: யெஸ்! இல்லாட்டி எங்கப்பா, என்னை சும்மா உட்ருப்பாரா?

சுரே: உம்! நான் என்னவெல்லாமோ நினைச்சுப்புட்டேன்!

நிர்: என்ன நினைச்சீங்க?

[கார் பழைய இடத்துக்கே வருகிறது. இருவரும் இறங்குகின்றனர்.]

சுரே: நான் நினைச்சது கிடக்கட்டும். நீங்க என்னைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?

நிர்: ஐயோ பாவம்னு, நினைக்கிறேன்!

சுரே: ஐயோ பாவம்னு? ஏன்?

நிர்: நான் உங்களை 'லவ்' பண்றேன்னு நினைச்சுட்டீங்க இல்லே!..... ஐயோ பாவம்! நல்லா ஏமாந்துட்டீங்க?

சுரே: (திகைத்து நிற்கிறான்)

நிர்: மிஸ்டர்! என்ன..... என்ன ஆச்சு?

சுரே ஹஹ்ஹஹா!....(உரக்கச் சிரிக்கிறான்)

நிர்: என்ன சிரிக்கிறீங்க?

சுரே: நீங்க என்னை லவ் பண்றீங்கன்னு நான் நினைச்சேனா? ஹஹ்ஹஹா!.... நல்லா ஏமாந்தீங்க!...என் பிரெண்ட்கிட்டே நானும் ஒரு பந்தயம் போட்டேன், உங்களோட கார்லே போய்க் காட்டறேன்னு. அதுக்காகத்தான் இப்படி யெல்லாம் நடந்துக்க வேண்டி வந்தது! உங்களாலே நான் ஜெயிச்சுட்டேன். ரொம்ப தாங்க்ஸ்!

நிர்: மிஸ்டர்! அப்போ இந்த இண்டர்வ்யூ?

சுரே: வேறே யாராவது பத்திரிகை நிருபர் உங்களைக் கார் ஓட்டும் அநுபவம் பற்றி இண்டர்வ்யூ பண்ணினா, இந்த அநுபவத்தைச் சொல்லுங்க. நான் வரேன்!

நிர்: ஓ!.... ரொம்ப நல்லாயிருக்கு..... (கோபமாக) உங்க அட்ரெஸ் என்ன?

சுரே (அவனும் கோபமாகவே): இந்தாங்க என் அட்ரெஸ் (விஸிட்டிங் கார்டை அவள் மீது போடுகிறான்.)

நிர் (கோபமாக ஒரு கார்டை விட்டெறிகிறாள்): இந்தாங்க என் அட்ரெஸ்!

சுரே: நாகு நெருங்கி வருவதைப் பார்த்து): டேய் நாகு! ஸக்ஸஸ்டா!.... அட்ரெஸை என் மூஞ்சியிலே அடிச்சிட்டுப் போறாள்டா!

## காட்சி-17

[நாகராஜன் ஜன்னல் வழியாக பம்பாய்த் தெருக்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். சுரேஷ் கையில் காப்பி டம்ளரோடு அவன் பக்கம் வருகிறான்]

சுரே: என்ன நாகு, இன்னொரு கப் காப்பி சாப்பிடறியா?

நாக: எனக்கு இனிமேல் காப்பியும் வேண்டியதில்லே, ஒண்ணும் வேண்டியதில்லே. நீ சபேசனைப் பார்க்கவும் இல்லே. பம்பாய்க்கு வந்தா, அதைப் பண்ணிடுவேன், இதைப் பண்ணிடுவேன்னு வாய் கிழியப் பேசினியே, இப்ப என்ன ஆச்சு? எவளோ பேர் தெரியாதவ பின்னாலே சுத்திக்கிட்டிருக்கே.

சுரே: யாரு, நிர்மலாவா?

நாக: டேய்! நீ ஒரு மானஸ்தனாக இருந்தா அன்னிக்கு பீச்சிலே நடந்ததுக்கப்புறம் அவ இருக்கிற பக்கம் திரும்பிக்கூடப் பார்த்திருக்க மாட்டே. உன்னை நல்லா ஏமாத்தியிருக்கா, அதுக்கப்புறமும் அவள் வீட்டைத் தேடிக் கிட்டுப் போறியேடா, வெட்கமாயில்லே!

சுரே: டேய் அவதானேடா அட்ரெஸைக் கொடுத்தாள்.

நாக: கோபத்திலே உன் முகத்திலே விஸிட்டிங் கார்டை விட்டெறிஞ்சா.

சுரே: அதுக்கு என்ன அர்த்தம்? 'நான் கோபமா யிருக்கேன். என் விலாசம் இதோ இருக்கு. வந்து என்னைச் சமாதானப்படுத்துங்க' அதானேடா அர்த்தம்? ஒரு பெண் கோபமா இருக்கச்சே போய்ச் சமாதானப் படுத்த வேண்டாமா? அது ஒரு காதலன் கடமை இல்லையா?

நாகு: காதலன்னு தீர்மானமே பண்ணிட்டியா?

சுரே: ஓ எஸ்! நான் காதலைப் பற்றிப் பேசணும்னு அவளே எதிர்பார்க்கிறாடா!

நாக: எப்படிடா தெரியும்?

சுரே: அவளேதான் சொன்னா! நேத்தி அவள் வீட்டுக்குப் போனேனா. அவள் அப்பாவும் இருந்தார். ''இப்ப எதுக்காக இங்கே வந்தீங்க?''ன்னு எடுத்த உடனேயே கேட்டுப்பிட்டா!

நாக: இதுதான் காதலா?

சுரே: கண்டிப்பா காதல்தான். அவள் ஏன் அந்த மாதிரி கேட்டான்னு யோசனை பண்



ணிப் பாரு. பக்கத்திலேயே அப்பன்காரன் 'மொட் மொட்'னு உட்கார்ந்துகிட்டிருக்கான். அதனாலேதான் இப்ப ஏன் வந்தீங்க என்று கேட்டிருக்கா. அதாவது 'அப்பா இல்லாத சமயமா இருந்தா மனம் விட்டுப் பேசியிருக்கலாமே'ன்னு கேட்டிருக்கா.

நாக: உம்...

சுரே: அரை மணி நேரம் அரசியலைப் பத்தி விளாசிக் கட்டினேன். நிர்மலா அப்பா அசந்து போயிட்டார்.

நாக: அரசியலைப் பத்திப் பேசினியா?— நிர்மலா அப்பா அசந்து போனது கிடக்கட்டும். நிர்மலா என்ன பண்ணினா?

சுரே: எழுந்து போயிட்டா!

நாக (சிரிக்கிறான்): நீ பேசிக்கிட்டே இருக்கச்சே அவ எழுந்தே போயிட்டாளா! உன் பேர்லே கொஞ்சமாவது காதல் இருந்தால் அந்த மாதிரி செய்வாளாடா?

சுரே: காதல் இருக்கிறதுனாலேதான் எழுந்து போயிட்டா. தன்னுடைய அப்பாவும், காதலனும் பேசிக்கிட்டிருக்கச்சே காதலியாலே எத்தனை நேரம் எதிரிலேயே இருக்க முடியும்? வெட்கமாக இருக்காதா? கண்வரும் துஷ்யந்தனும் பேசிக்கிட்டிருக்கச்சே சகுந்தலையாலே எத்தனை நேரம் அங்கே இருக்க முடியும்?

நாக: அப்புறம் என்ன ஆச்சு?



சுரே: நிர்மலா அந்த இடத்தை விட்டுப் போனப்புறம்தான் நான் காதலைப் பத்தியே பேச ஆரம்பிச்சேன்.

நாக: அவளுடைய அப்பாகிட்டயா?

சுரே: யெஸ்!

நாக: ரொம்ப நல்லா இருக்கு! அப்பன்காரன் கிட்டப் போய் ஏன்டா காதலைப் பத்திப் பேசினே!

சுரே: அதுதான் ராஜதந்திரம்.

நாக: ராஜதந்திரம் — மண்ணாங்கட்டி! அவர் உன்னைப் பத்தி என்ன நினைச்சிருப்பார்? சரியான அசடுன்னு நினைச்சிருப்பார்.

சுரே: ரொம்ப நல்லதாப் போச்சு. அப்போ நிர்மலாவை நான் கல்யாணம் பண்ணிக்க அவர் தடையே சொல்ல மாட்டார்.

நாகு: என்னடா சொல்றே?

சுரே: இந்தக் காலத்துத் தகப்பனுரெல்லாம், தங்கள் பெண்களைக் கட்டிக்க யாராவது அசடுப் பய வரமாட்டானான்னு தானே காத்துக்கிட்டிருக்காங்க.

நாகு: சரி மேலே என்ன நடந்தது சொல்லு?

சுரே: இப்பத்தான் ஒரு எதிர்பாராத திருப்பம். நான் பேசிக்கிட்டே இருந்தேனு. திடீர்னு திரும்பிப் பார்த்தா அவர் நல்லா தூங்கிக்கிட்டிருக்கார். அப்பதான் நிர்மலா திரும்பி வந்தாள். அப்பா தூங்கறதைப் பார்த்தாள்...உடனே...உடனே...நைனா...சே! எனக்குக் கூச்சமா இருக்குடா! (ஒரேயடியா உடம்பை நெளிக்கிறான்.)

நாக (ஆவலோடு): என்னடா பண்ணினா சொல்லுடா!

சுரே: அப்பா தூங்கறதைப் பார்த்து... அவ....அவ....அவ... சே! எனக்கு உடம்பெல்லாம் என்னமோ செய்யறதுடா!...

நாக (ஆர்வம் தாங்க முடியாமல்): விஷயத்தைச் சொல்லுடா!

சுரே (உடம்பை நெளித்து): சொல்ல விடமாட்டேன்றதே... ஹி...ஹி... (சிரிக்கிறான்). உம்...உம்... (முகத்தைச் சுளிக்கிறான்)...

நாகு: என்னடா பண்ணினா! நீ இப்படி நெளியும்படியா அவள் என்னடா பண்ணினா?

சுரே (ஷர்ட்டின் பின்புறம் கைவிட்டு முதுகிலிருந்து ஒரு பூச்சியை எடுத்துக் கீழே வீசி எறிகிறான்). இதனாலேதான்டா நெளிஞ்சேன்!... அவ ஒண்ணும் பண்ணலே!

நாக: அடகடவுளே! நான் என்னமோன்னு பார்த்தேன். அவள் என்னதான் செய்தா? அதைச் சொல்லு.

சுரே: அப்பா தூங்கறதைப் பார்த்தா. 'மிஸ்டர் சுரேஷ்! அப்பா எப்படித் தூங்கினார்?' என்று ஆச்சரியத்தோடே கேட்டா. 'நான் பேசினேன்'னு சொன்னேன். 'நீங்க தினம் கண்டிப்பா வரணும்' அப்படின்னு ஒரு வேண்டுகோள் விடுத்தாளே, பார்க்கணும்!

நாக: நீ தினம் வரணும்னு உன்னைக் கேட்டுக்கிட்டாளா?

சுரே: யெஸ்! அவ அப்பாவுக்குத் தூக்கமே வரதில்லையாம். ரொம்ப அவஸ்தைப்படுறாராம். நான் தினம் போய்ப் பேசினு சுலபமா தூங்கிடலாமேன்னுதான். எப்படி?

நாக: உனக்கு வெட்கமா இல்லே?

சுரே: இதுலே வெக்கம் என்னடா அழறது? அவ வீட்டுக்கு அடிக்கடி போகச் சான்ஸ் கிடைச்சதே அது போறாதா?

[அப்போது பத்திரிகை விற்கும் பையன் அன்றைய பத்திரிகையை அறையில் வீசி எறிந்து விட்டுப் போகிறான். சுரேஷ் தாவி அதை எடுத்து அவசரம் அவசரமாகப் புரட்டுகிறான்.]

சுரே: டேய் நாகு! இங்கே பாருடா. உன் விஷயமா நான் ஒண்ணுமே கவனிக்கலையே இங்கே பாரு....

நாகு: என்னடா?

சுரே: படிக்கிறேன் கேளு.. (படிக்கிறான்) ''இளம் கவிஞர் திடீர் மரணம் — பிரபல இளம் கவிஞர் நாகராஜன் மாரடைப்பினால்

இவர் மரணமடைந்தார். தன் தம்பி தியாகராஜனைப் பார்க்க பம்பாய்க்கு வந்த நாகராஜனின் மரணம், தமிழ் நாட்டின் துரதிர்ஷ்டம்! இவர் தமது கவிதைகளால் சிந்தனையைக் கிளறி, கருத்தைக் கலக்கி, அறிவைப் பெருக்கி நாட்டைச் சீர்திருத்தி வந்தது தெரிந்ததே!''

நாரு: அப்போ நான் செத்துப் போயாச்சா?

சுரே: யெஸ்! நேத்திக்கே நீ அவுட். இன்னி லேருந்து நீதான் தியாகராஜன். இதோ இந்த ரெண்டு போட்டோவையும் பாரு. (பத்திரிகையைக் காட்டிப் படிக்கிறான்) ''இவர்தான் இளம் கவி நாகராஜன். இது அவர் உடன் பிறந்த தம்பி தியாகராஜன். இருவரும் இரட்டைப் பிறவிகள் என்பது தெரிந்ததே.''

நாக: நான் செத்துப் போயிட்டேன்னு நினைச்சா எனக்கே ரொம்ப வருத்தமா யிருக்குடா! உம்..... சபேசனை எப்படா போய்ப் பார்க்கப் போறே?

சுரே: உடனே அவரைப் போய்ப் பார்த்துடறதா? எப்படா பேப்பர்லே நியூஸ் வரப் போறதுன்னு காத்துக்கிட்டிருந்த மாதிரி எடுத்துக்கிட்டுப் போய் நிக்கச் சொல்றியா?

நாக: ஐ ஆம் சாரி, சுரேஷ். டைம் ஆயிகிட்டே இருக்கு. பத்தாயிரம் சம்பாதிக்கணும். அதனாலேதான் அவசரப்படறேன்.

சுரே: எனக்குத் தெரியாதாடா இடியட்! இந்த நியூஸை எப்படியாவது சபேசன் தானு கவே படிக்கணும். அப்புறம் அவரா எங்கிட்ட நாகராஜனைப் பத்தி விசாரிக்கணும்.

நாக: என்னைப் பத்தியா?

சுரே: உன்னைப் பத்தி இல்லே. நாகராஜனைப் பத்தி! நீ இப்ப நாகராஜன் இல்லே. தியாகராஜன்.

நாக: யெஸ் யெஸ்!

சுரே: டேய் மறந்து தொலைக்கப் போறே. நல்லா ஞாபகம் வைச்சுக்கோ. நீ செத்துப் போயாச்சு!

நாக: அய்யய்யோ! நான் இப்பத்தானே பொறந்திருக்கேன்.

சுரே: என்னது?

நாக: நான் இப்ப தியாகராஜன் இல்லையா? இப்பத்தானே தியாகராஜனா நான் அவதாரம் பண்ணியிருக்கேன்.

சுரே: கரெக்ட்! சபேசனே இந்த விஷயத்தைப் பத்தி எங்கிட்ட பேசும்படியாச் செய்யறேன். அப்புறம் அவ்வளவுதான். உன்னைப் பத்தி — ஐ மீன் நாகராஜனைப் பத்தி அரை மணி நேரம் அப்படியே விளாசிக் கட்டுவேன்! அவ்வளவுதான்!

நாக: அவர் தூங்கிப் போயிடுவார். நீ பேசிப் பேசி நீர்மையா அப்பாவைத் தூங்க வைத்தது போதாதா?

சுரே: டோன்ட் வொர்ரி! எல்லாத்தையும் நான் கவனிச்சுக்கிறேன்.

நாக: டேய் யாரோ வராங்கடா!

சுரே: வரட்டும்! யாருன்னு கேளு...

நாக (அவரை நெருங்கி): யாரை சார் பார்க்கணும்?

சபேசன்: யாரையாவது பார்க்கணும்!... உனக்கென்ன? ஹூ ஆர் யூ? நான் யாரை வேணுமானாலும் பார்ப்பேன்!

நாக: சரி, என்னைப் பாருங்க.

சபே: நீ யாரு?

நாக: நான் யாரா யிருந்தா உங்களுக்கென்ன? நான் யாரா வேணுமானாலும் இருப்பேன் கேக்கறதுக்கு நீங்க யாரு? ஹூ ஆர் யூ?

சுரே (ஓடி வருகிறான்): உஸ்...வந்து...குட் மார்னிங் ஸார்! மிஸ்டர் சபேசன்..

சபே: உம்! சுரேஷ், இந்தப் பையன் யாரு? என்னவெல்லாமோ பேசுறானே? யார் இவன்?

சுரே: இவன்தான் நாக... ஐ மீன் தியாக..

நாக: நான்சொல்றேன் ஸார். என் பேர்..

சுரே (குறுக்கிட்டு): தியாகராஜன்!.... நாகராஜன் தம்பி!... இவர்தான்டா சபேசன்! மிஸ்டர் சபேசன்...

நாக (திடுக்கிட்டு): ஓ! ஓ! சபேசன்!....

[உள்ளே ஓடி விடுகிறான்.]

சபே: ஏன்? அவன் ஏன் ஓடுறான்?

சுரே: அவன் தமாஷ் பேர்வழி ஸார்! அப்படித்தான் அடிக்கடி ஓடுவான்.

சபே: என்னைப் பார்த்ததும் ஓ சபேசன்னு கத்திட்டு ஓடுறானே! ஏன்... ஏன்?

சுரே: என்ன ஸார் இது? நீங்க சபேசன் இல்லையா?

சபே: ஆமாம்!

சுரே: அதனாலேதான் ஓ சபேசன்னு கத்தி றான்!

சபே: ஓ! அப்ப ஏன் ஓடுறான்?

சுரே: அசிங்கமா கத்திவிட்டான். ஓடாமல் என்ன பண்றது?

சபே: கரெக்ட்! அவன் ரொம்பப் புத்திசாலித்தனமா பேசுறான்பா!... வந்த உடனே எங்கிட்ட பேசினான் பாரு!... ரொம்பச் சாமர்த்தியமாப் பேசுறான்!

சுரே: யெஸ் யெஸ்! நாகராஜன் எப்பவுமே அப்படித்தான்.

சபே: நாகராஜனா? இவன் பேர் தியாகராஜன்னு சொன்னியே?

சுரே: யெஸ்... இவன் அண்ணன் நாகராஜன். அவனும் இப்படித்தான். இவன் மாதிரியேதான். அதனாலேதான் சொன்னேன்.

சபே: எங்கே அவன்? கூப்பிடு!

சுரே: யாரு அண்ணனா?

சபே: உன்னைக் காலையிலே பார்க்க வந்தது தப்பு! ஏன் உளறிக்கிட்டே இருக்கே! இப்பத்தான் தூங்கி எழுந்தியா? அந்தப் பையனைக் கூப்பிடுய்யான்னா அண்ணனைக் கூப்பிடறேன்றியே?

சுரே: (உரக்க) நாகராஜன்!

சபே (கோபமாக): அண்ணனை ஏன் கூப்பிடறே?

சுரே: ஐ ஆம் ஸாரி! தியாகராஜன்!

நாக: (வந்து) என்னையா கூப்பிட்டே? எல்லாம் தெரிஞ்சு போச்சா?

சபே: எல்லாம் தெரிஞ்சு போச்சு.

நாக: அய்யய்யோ!

சபே (சிரிக்கிறார்): தமாஷ் பேர்வழி! எனக்கு எல்லாம் தெரியும்!

சுரே: என்ன ஸார் சொல்றீங்க?

சபே: என்னைப் பார்த்த உடனே இவன் ஏன் உள்ளே ஓடுறான்னு எனக்குத் தெரியாதுன்னு நினைச்சுக்கிட்டீங்க இல்லே!

சுரே: நிஜமாகவே தெரியுமா? (தொடரும்)

# குளிர்ந்த காற்றைத் தருகிறது

# ராலி:.பேன்




ஒவ்வொரு ராலி:.பேனும் 2 வருட உத்தரவாதத்துடன் வருகின்றன. இன்றைய தேதியில் மிக நம்பகமான மேஜை விசிறி இதுவே என்பதை நிரூபிக்கும் மிகக் கடும் பரிசோதனைகளில் தேறியதாயிற்றே.

ராலி:.பேன் வகைகளைப்பற்றி மேலும் விவரங்கள் தேவையா? இதோ உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து, 'ராலி ஹாய்லண்ட் லிமிடெட், 21, ராவெலின் ஸ்ட்ரீட், பம்பாய்' என்ற விலாசத்துக்கு அனுப்புங்கள்.

| |
|---|
| ராலி:.பேன்களைப்பற்றிய முழு வர்ண இலவச வெளியீட்டை எனக்கு அனுப்புமாறு கோருகிறேன். |
| பெயர் ............................................ |
| ............................................ |
| விலாசம் ............................................ |
| ............................................ |

சென்னை, கேரளம் ராஜ்யங்களுக்கு விநியோகஸ்தர்கள்:
மெஸர்ஸ் மஹமத் இப்ராஹீம் & கோ., ப்ரைவேட் லிமிடெட்
7/8, மவுண்ட் ரோட், சென்னை.



# இவர்களுடைய வளமான வருங்காலம் இப்பொழுதே திட்டமிடப்படுகிறது

இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் ரெக்கரிங் டிபாஸிட் திட்டத்தின் சேமிப்பைக்கொண்டு.

குறைந்த பட்சம் ரூ. 5/-லிருந்து அதிக பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதிமாதம் டிபாஸிட் செய்யும் தொகையான :

| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- | ரூ. 500/- |
|---|---|---|---|---|---|
| கீழ்க்கண்டபடி பெருகும் : | | | | | |
| 12 மாதங்களில் | ரூ. 62 | ரூ. 123 | ரூ. 618 | ரூ. 1,236 | ரூ. 6,180 |
| 48 மாதங்களில் | ,, 271 | ,, 542 | ,, 2,714 | ,, 5,428 | ,, 27,142 |
| 84 மாதங்களில் | ,, 536 | ,, 1,072 | ,, 5,360 | ,, 10,720 | ,, 53,600 |
| 108 மாதங்களில் | ,, 750 | ,, 1,500 | ,, 7,500 | ,, 15,000 | ,, 75,000 |

# இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிட்.

தலைமைக் காரியாலயம் : 151, மவுண்ட் ரோட், சென்னை-2

உங்களுக்கு சேவை செய்வதற்காக 100 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் இந்தியாவின் முக்கிய இடங்களில். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 60 க்குமேற்பட்ட கிளை அலுவலகங்கள் உள்ளது.

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்

IOB-17-5A

# அந்தகாரத்தின் அரசன்



[எழுத்தாளர்கள் தங்கள் கதைகளில் வரும் பாங்குக்குப் பெயர் தேடிச் சிரமப்படுவதில்லை. உடனே 'குபேரா பாங்கு' என்று நாமகரணம் செய்து விடுவார்கள். குபேர வாழ்க்கை நடத்த யாருக்குத்தான் ஆசையில்லை? இதோ குபேரனைப் பற்றிய ருசிகரமான தகவல்கள்:]

லட்சுமி குபேரன் ஆகிய இருவருமே இப்பொழுது தன தேவதைகளாக வருணிக்கப்படுகிறார்கள். ஆனால் ரிக் வேதத்தில் லட்சுமி தனதேவதையாக வருணிக்கப் படவில்லை. குபேரனே தன தேவதையாக வருணிக்கப்படுகிறான். ஆகவே லட்சுமி பிற்காலத்தில்தான் தனதேவதை யாக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஆகவே இன்னும் பழமையில் நம்பிக்கையுள்ள பலர் தீபாவளியன்று லட்சுமிக்குப் பதிலாகக் குபேர பூஜையே நடத்துகிறார்கள். லட்சுமி குபேரன் இருவரையும் வைத்துப் பூஜை நடத்துபவரும் உண்டு. அவர்களோடு இந்திரனையும் சேர்த்து மூவருக்கும் ஏககாலத்தில் பூஜை நடத்தித் தீபாவளி கொண்டாடும் மக்களும் உண்டு.



குபேரன் கீழ் லோகத்தில் வாழும் ஆத்மாக்களின் அரசன், அந்தகாரத்தின் ராஜா என வேதங்கள் கூறுகின்றன. இராமாயணத்தில் குபேரனைப் பற்றிய வரலாறு காணப்படுகிறது. பிரமதேவனின் மானச புத்திரரான புலஸ்தியனுக்கும் திருணவிந்துவின் புத்திரிக்கும் மகனாக விஸ்ரவா பிறந்தார். இந்த விஸ்ரவா பரத்வாஜரின் பெண்ணை மணந்தார். அவர்களின் புத்திரனே குபேரன் என இராமாயணம் கூறுகிறது. சகஸ்ர வருடம் தவம் செய்து பிரும்மாவிடமிருந்து வரம் பெற்றுத் தனபதி பதவியைக் குபேரன் பெற்றான். இலங்கையின் அதிபதியும் ஆனான். ஆனால் இதைப் பார்த்த விஸ்ரவாவுக்குக் கோபம் தாங்கவில்லை. அவர் கோபத்தைத் தணிக்க மூன்று அழகிய ராட்சசிகளை அவரிடம் குபேரன் அனுப்பி வைத்தான். அந்த ராட்சசிகளுக்கும் விஸ்ரவாவுக்கும் பிறந்தவர்களே ராவணாதிகள். தவமிருந்து பிரம்மாவிடம் குபேரனிடமிருந்து இலங்கை ஆட்சியை அவர்கள் கைப்பற்றிக் கொண்டார்கள். அதன் பிறகு கந்தமாதனத்துக்குக் குபேரன் போய்விட்டதாகவும் இராமாயணம் கூறுகிறது.

வாயு புராணத்தில் குபேரனைப்பற்றிய வரலாறு காணப்படுகிறது. வெள்ளை நிறம், பெரிய வயிறு, எட்டுப் பல்லுடன் விகாரத் தோற்றமுடையவன் குபேரன் என அது கூறுகிறது. இதற்குக் காரணம் ஒரு சமயம் பார்வதியைக் கண்டு குபேரன் மோகம் கொண்டதே யாகும். பார்வதி கோபமடைந்து விகாரத் தோற்றமுடையவனாகப் போகும்படி சபிக்கவே அவ்விதம் குபேரன் மாறி விட்டதாகவும் ஒரு கதை அந்தப் புராணத்தில் உண்டு.

வராஹ புராணத்திலும் குபேரனைப் பற்றிய ஒரு செய்தி உண்டு. பிரமதேவன் உலகைப் படைத்தபோது அவர் வாயிலிருந்து வெண்மை நிறக் கற்கள் மழை போல் வர்ஷித்தன. வாயு பகவானே அக்கற்களை அவ்வளவு வேகமாக வெளியே தள்ளிக் கொண்டு வந்து சேர்த்தார். ஏராளமாகக் கற்கள் இவ்விதம் குவிந்ததும் அவர் கற்குவியலை நோக்கித் தேவனாகும்படி கட்டளையிட்டார். இவ்விதம் தேவனான கற்குவியலைச் சுவர்க்கத்தின் கணக்கராக நியமித்தார். இக்கணக்கர் சிவனோடு நட்புபூண்டு அழகாபுரிக்கு அதிபதியானார் என்பதாகும்.



குபேரன் யக்ஷர்கள் கின்னரர்கள் ஆகியோரின் மன்னன் என பாகவத புராணம் கூறுகிறது. அவன் ராஜ்யத்தில் நான்கு யுகங்களிலும் ஒரு மாற்றமும் ஏற்படுவதில்லை. யாரும் பசியால் பட்டினியால் வருந்துவதில்லை.

மனிதர்கள் இழுத்துச் செல்லும் இரதத்தில் குபேரன் அமர்ந்திருப்பதாகச் சில இடங்களில் கூறப்படுகிறது. மனிதர்களே தங்கள் தோள்களில் தூக்கிச் செல்லுவதாகவும் சித்திரிக்கும் ஓவியங்கள் உண்டு. கதாயுதம், பை, தேங்காய், கமண்டலம் தாங்கிய நான்கு கைகளுடையவராகவும் பல ஓவியங்களில், குபேரனைக் காணலாம்.

நம் நாட்டுக்கு வெளியே பௌத்த மதம் பரவியுள்ள இந்தோ சீன நாடுகளில் (சயாம், லாவோஸ், கம்போடியா, வியட்நாம்) குபேரன் தனபதியாகவும், வடக்குத் திக்குப் பாலகனாகவும் இன்றும் கொண்டாடப்படுவதைக் காணலாம். ஜாவாவில் சிறு தேவதைகளில் ஒன்றாகக் குபேரன் இன்றும் கொண்டாடப்படுவதைப் பார்க்கலாம். ஜப்பானில் குபேரனைக் கோம்பீர் அல்லது குபிரி என இன்றும் வணங்குகிறார்கள். முதலில் ராட்சசனாக இருந்த குபேரன் பௌத்த மதத்தைத் தழுவித் தேவனாகி விட்டதாக அங்கு ஒரு கதையும் உண்டு.

— அ. ராம்கோபால்

''பாலா...பாலா...''

கிழவரின் அழைப்பு அவள் காதில் விழுந்ததாகவே தெரியவில்லை.

''பாலா...பாலா... யாரங்கே? கொஞ்சம் பாலாவை இங்கு வந்துவிட்டுப் போகச் சொல்லு...''

''என்ன வேண்டும்? எதற்காக இப்படி அலறுகிறீர்கள்? வேலைக்காரர்கள்கூடத் திரும்பிப் பார்க்கிறார்கள் இந்தக் கூக்குரலைக் கேட்டு!'' என்று சிடுசிடுத்தபடி வந்து நின்றாள் பாலா.

''வாசலில் கோலம் போடவில்லைபோலிருக்கிறது. போய்ப் பாரேன்.''

''நன்றாயிருக்கிறது. மணி எட்டடிக்கப் போகிறது. இன்னமும் கோலம் போடாமலா கிடக்கிறது வாசல்? சரியாகக் கவனிக்காமலே எதையாவது எண்ணி அலட்டிக்கொள்ளாதீர்கள்.''

அடுத்து பாலத்தின் அதிகாரக் குரல் சமையல் கட்டிலே ஒலித்தது. ''சமையல் கடையைச் சீக்கிரம் ஒழித்துக் கொள்ளுங்கள், மாமி. அடுத்து பட்சண வகையறாக்கள் தயாராக வேண்டும்.''

''பாலம்... நான் ஒண்ணு சொல்றேன், தப்பாக எடுத்துக்காதே. பூந்தி தேய்க்க, பிடிக்க எனக்கு வழக்கமில்லை....நீ ஆயிரம் கொடுக்கத் தலை தீபாவளிக்கு ஏற்பாடு பண்றே. சரியாக வரலேன்னு மனசுக்குச் சுருக்குன்னு படும்.''

''என்ன பாட்டி, சமயத்திலே உதறி விடறேனே! அப்படியானால் ராஷ்ஜி மாமாவுக்குச் சொல்லி யனுப்பட்டுமா? - யாரங்கே? சிக்கந்தர்...சிக்கந்தர்...''

''என்னம்மா வேண்டும்? நான் போகிறேனே!'' என்றபடி சந்துரு அருகே வந்தான்.

''வேலைக்காரர்களைக் கூப்பிட்டால் நீ ஏன் வந்து நிற்கிறாய்? தனக்குள்ள கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியவில்லையே! போய் உன் வேலையைப் பார்!'' கோபத்திறால் குலுங்கிய தாயின் தோற்றத்தைக் கண்ட அவன் பேசாமல் மாடி ஏறிச் சென்றான்.

ஈரக் கூந்தலைத் துவட்டாமலே பின்னவிட்டுப் பூச்சூட்டி அழகு பார்த்துக்கொண்டிருந்த பத்மினி, மடிமீது வந்து உட்கார்ந்த லல்லியைப் பிடித்துத் தள்ளினாள். ''எருமை மாடு போல இப்படியா மேலே வந்து விழுவது?'' என்றாள் எரிச்சலோடு.

''அக்கா, என் கைக்குள் என்ன இருக்கிறது, சொல்லு?''

''உன் தலை...'' சகோதரியின் ஓங்கிய கைக்குள் சிக்காது தாவி ஓடினாள் லல்லி.

அறைக் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்த லல்லியைக் கவனிக்காது சந்துரு குனிந்து எழுதிக் கொண்டிருந்தான். எழுதிய தாளைக் கிறுக்கி அடித்து, சுருட்டிக் கீழே வீசி எறிந்தான். அண்ணாவின் இந்தச் செயலைத் தூரத்தில் நின்றபடியே உற்று

# ஒரு நாள் அமளி



நோக்கி வியந்தாள் லல்லி. ''அண்ணா.... அண்ணா.''

''என்ன லல்லி?'' கவலை தோய்ந்த பார்வை அந்த மலர் விழிகளிலே தோய்ந்து நழுவியது.

''நீ ஏன் அண்ணா வருத்தமாக இருக்கே?''

''இல்லையே, லல்லி.''

''ஊஹூம். உன் முகம் அழ முடியாமல் அடக்கி வைச்சிண்டிருக்காப் போலவே தெரியறது....''

''அதெல்லாம் ஒண்ணுமில்லையடி..''

''அண்ணா! நாளைக்கு பால்பாயஸம், பதிர்ப் பேணியெல்லாம் பண்ணப் போறாளே... உனக்கு சந்தோஷமாக இல்லையா?''

''அதெல்லாம் உன்னைப் போலக் குழந்தைகளுக்குத்தான் கொண்டாட்டம்.''

''பெரியவாளுக்கு...?''

''ஒரு சந்தோஷமும் கிடையாது.''

''அப்போ என் ஒருத்தியின் சந்தோஷத்துக்கா இத்தனை அமர்க்களம்?'' விழிகளினின்றும் உதிர்ந்த வர்ஷிப்பை அப்படியே நெஞ்சிலே ஏந்திக் கொண்டான். ''நீ ஏன் அண்ணா சந்தோஷமாகவே இல்லை?''

''நான் எப்படியடி சந்தோஷமாக இருக்க முடியும்? இன்று என் பரீட்சை ரிசல்ட் வருகிறதே!'' என்றான் குழந்தை உள்ளத்தோடு கலந்தபடி.

''ரிசல்ட் வந்தால் என்ன?''



''நான் பெயிலாகி விட்டது தெரிந்து போய் விட்டிலே எல்லோரும் துக்கப்படு வார்களே, வல்லி!''

''ஐயையோ.... ரிஸல்ட் எதிலே வரும்?''

''பேப்பரிலே வரும். பாஸான நம்பர்க ளாகப் போட்டு வரும்....''

''பேப்பர் எதிலே வரும் அண்ணா?''

''இன்னும் இரண்டு மணி நேரத்திற்குள் எக்ஸ்பிரஸ் ரயிலிலே வரும்.'' அவன் வார்த்தைகளை முடிப்பதற்குள் பூச்சரம் போன்ற உடலை வளைத்து ஓடினாள் சிறுமி.

''அக்கா! என்னோடு கொஞ்சம் மாடிக்கு வாயேன்.''

''போடி! இந்த அசதி நிலையில் என்னால் மாடி ஏறி வர முடியாது. இப்பவே மூச்சு வாங்குகிறது.''

''ஒரு நிமிஷம் வந்து விட்டுப் போயேன்!'' சகோதரியின் கைகளைப்பற்றி மேலே அழைத்து வந்தாள் வல்லி.

''அண்ணா, நீயும் என்னுடன் வாயேன்.''

சந்துரு எழுந்து வந்தான். மலர்க் குவியல்களுக்கு நடுவே முருகபிரான் வேல் மறைக்க வீற்றிருந்தார். மேலே ஏறி வந்த சிரமம் பெருமூச்சுக்களாகத் தூரத்தி வர, உடல் அதிர நின்று கொண்டிருந்தாள் பத்மினி. ''எதற்கடி இங்கே அழைத்து வந்து வம்பு பண்ணுகிறாய்?''

''எல்லோருமாகச் சேர்ந்து வேண்டிக் கொண்டால் சாமி நினைச்சதைக் கொடுப் பாருனு எங்க விஸ்டர் சொல்லியிருக்காங்.''

''அதற்காக........?''

''எல்லோரும் நன்றாய் இறுகக் கண்ணை மூடிக் கொண்டு, சாமியை நினைச்சுண்டு, நான் சொல்றதை அப்படியே திருப்பிச் சொல்லுங்கோ..... என்ன சந்துரு அண்ணா, ரெடியா?''

''உம்....''

''சாமி ஆண்டவனே !''

''சாமி ஆண்டவனே !''

''இன்னிக்கு இன்னும் இரண்டு மணிக் குள்ளே வரப் போற எக்ஸ்பிரஸ் வண்டி வழியிலே பாலத்து மேலே, தண்ட வாளத்திலிருந்து இறங்கி விழுந்து...''

''சீ, கழுதை!'' வல்லியின் கன்னம் பளீரென்ற தாக்குதலால் சிவந்தது. கோபா வேசம் கூத்தாடக் கண்ணகிக் கோலம் தாங்கி நின்றாள் பத்மினி. நெற்றியினின்றும் வியர்வை முத்துக்கள் கன்னங்கள் வழியே உருண்டன. அவளது செவ்வரி சுழன்ற கண்களைக் கண்டு சந்துருவே ஒரு கணம் நடுங்கிப் போனான். ''என்ன பத்மினி ? குழந்தை ஏதோ சொல்லப் போக இப் படிக் கோபித்துக் கொள்கிறாய்?''

''குழந்தையா...? கரிநாக்குக் கொள்ளி!'' கண்களில் துளித்த நீர்த் துளிகள் சிதற முன்னே, கையிலிருந்த காகிதச் சுருளைக் கீழே வீசி எறிந்துவிட்டு, தடதட வென்று கீழே இறங்கிப் போய் விட்டாள் பத்மினி.

''அண்ணா அக்கா ஏன் அப்படிக் கோபிச் சுக்கறா ?''

''எக்ஸ்பிரஸ் வண்டி கவிழணும்னு வேண் டிண்டது தப்பு, வல்லி'' என்றான் சிந்தனையில் கவலைகள் ஊசலாட.

''ஏன் அண்ணா?''

''அதிலேதான் பத்மினி அக்காவுடைய கணவர் வரப்போறார். இதோ, புறப்பட்டு வருவதற்கு முன் தந்தி அடித்திருக்கிறார். அதனாலேதான் அக்காவுக்குக் கோபம் வந்து விட்டது.''

குழந்தையின் உள்ளத்தில் பீதியும், தவிப்பும் புயலாக வீசிய வாட்டம் ஒரு விநாடி முகத்திலே இருட் கோலத்தைப் பரப் பியது. சிறுமியின் பிஞ்சுப் பாதங்களின் ஒலி படிக்கட்டிலே தேய்ந்து அடங்கியது.

## 2

''ஏண்டா, சந்துரு, இன்னமும் பையன் பேப்பர் கொண்டு வந்து போடவில்லையா?''

''வண்டி லேட் போலிருக்கிறது. வந்து விடும்.''

''வானம் இருண்டு கொண்டு வருகிறது. வண்டியெல்லாம் சரியாய் வந்து சேரணு மேடா !''

''எல்லாம் சரியாய் வந்து சேர்ந்துவிடும். தாத்தா, உங்களிடம் ஒன்று சொல்வதற் காக வந்தேன்.'' கிழவரின் அருகே நெருங்கி உட்கார்ந்தான்.

''என்ன, சொல்லு!''

''நான் வீட்டை விட்டு ஓடிப் போய்விடலா மென்று பார்க்கிறேன்.''

''என்ன சொல்றே ?''

''இன்றைக்குப் பரீட்சை ரிஸல்ட் வந்து விடும், தாத்தா!''

''வந்து விட்டுப் போகட்டுமே.....!''

''பேப்பரில் நிச்சயம் என் நம்பர் வராது.''

''நீயாகச் செய்து கொள்ளும் முடிவா?''

''எழுதினவனுக்குத் தெரியாதா, நடந் ததைத் ?''

''போனால் போகிறது. மார்ச்சில் மறுபடி யும் எழுதி விட்டுப் போயேன்.''

''முதலில் இன்றைய நிலையை யோசித்துப் பாருங்கள் ! நல்ல தீபாவளி மாப்பிள்ளை விஜயம் ஆரவாரங்களுக்கு நடுவே என் தோல்வி விளம்பரமானால் எவ்வளவு அவ மானம் ! அம்மா, எல்லோருக்கும் நடுவே தன் கௌரவமே போய் விட்டதென்று உயிரையே விட்டு விடுவாள், தாத்தா.''

''அதற்காக......''

''கண் காணாமல் ஊரை விட்டே போய் விடலாமென்று பார்க்கிறேன்.'' சிந்தனையின் தெளிவு முகத்திலே பிரதிபலித்தது.

''இங்கே வா, சந்துரு. ஒரு பேனாவும் பேப்பரும் எடுத்து வந்து நான் டிக்டேட் செய்வதை எழுது.''

''என்ன எழுதப்போகிறீர்கள், தாத்தா?''

''பத்திரிகையின் நேயர்கள் குரலுக்கு ஒரு லெட்டர் எழுதிப் போடுகிறேன்.''

''எதற்கு?''

''வருஷத்துக்கொரு நாள் தீபாவளிக்கு முதல் நாள் இப்படி ரிஸல்ட் போடுவதினால் எத்தனை பேருடைய மனமும், வாழ்க்கை யும் பாதிக்கப்படுகின்றன என்று 'டோஸ்' கொடுத்து எழுதுகிறேன்.''

ரயில் கவிழ வேண்டுமென்று பிரார்த் தித்த சிறுமிக்கும், ஆசிரியருக்குக் கடிதம்



பம்பாய் ஸ்ரீ V. K. மூர்த்தி அவர்களின் குமாரத்தி சௌ. பத்மாவுக்கும், திருச்சூர் T. B. அனந்தராம அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி T. A. பலராமன் B. Com., அவர்களுக்கும் பம்பாயில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

## உங்கள் சருமத்தை சுத்தமாக வையுங்கள்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம்(Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப் பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம்(Nixoderm) வாங்குங்கள். முகப் பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

# கற்பகம்

## கலர்

# பட்டுச் சேலைகள்

இவ்வருஷம் தீபாவளி கலராக எங்களால் அறிமுகம் செய்யப்பெற்ற கற்பகம் கலர் பட்டுச் சேலைகள் ஏற்படுத்திய பரபரப்பும், மவுசும் பட்டுச் சேலை- தயாரிப்பு வரலாற்றிலேயே இதற்குமுன் எப்பொழுதும் கண்டிராத ஓர் அதிசயமாகும்.

கற்பகம் கலர் பட்டுச் சேலைகளுக்கு, நம் தமிழ் நாட்டு பெண்மணிகளிடம் மட்டுமின்றி, அகில இந்தியாவிலிருந்தும் அமோகமான வரவேற்பு இருந்தது ஓர் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

கற்பகம் கலர் பட்டுச் சேலைகளை நேரிலும், பார்சல் மூலமும் பெற்ற உள்ளூர்-வெளியூர் வாடிக்கையாளர்கள் தங்களது பரிபூரண திருப்தியை தெரிவித்ததற்கு நாங்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறோம்.

கற்பகம் கலர் பட்டுப் புடவைகளை அணிந்து இவ்வாண்டு தீபாவளியைக் குதூகலமாகக் கொண்டாடிய தங்களது பேராதரவிற்கு எங்கள் உளங்கனிந்த நன்றி!

கற்பகம் கலர் பட்டுச் சேலைகளுக்கு, காலந்தாழ்ந்து எமக்கு வந்து சேர்ந்த ஆர்டர்களைப் பூர்த்தி செய்ய இயலாமல் போனது பற்றி தாங்கள் குறைப்பட வேண்டாம். அடுத்து வரும் ஆண்டுகளில் நாங்கள் தீபாவளிக்கு அறிமுகம் செய்யப்போகும் புதுப்புது ரகங்களின் தங்கள் தேவைகளை முன்னதாகவே ஆர்டர் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**நல்லி சில்க்ஸ்**

82, ராயப்பேட்டை ஹைரோடு

லஸ், மயிலாப்பூர். | போன் 74667 · சென்னை 4



கிளாப்பர் பாய்: சினிமா பார்க்கிறவங்க, கிளாப் தட்டியிருக்காங்களோ இல்லையோ? இங்கே, ஷூட்டிங்போது ஒவ்வொரு ஷாட்டிற்கும் நான் தட்டுறேன்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

எழுத விழையும் முதியவருக்கும் உள்ளத் தளவில் ஒரு வேற்றுமையும் இல்லை என்று எண்ணிய சந்துரு அந்தனை வருத்தத்திலும் வாய்விட்டுச் சிரித்தான்.

''என்னடா, சிரிக்கிறாய்?''

''நீங்கள் இந்தக் கடிதத்தை எழுதித் தபாலில் சேர்ப்பதற்குள் இன்றைய பேப்பர் வந்து விடும். என்னுடைய நிலைமைக்கு ஒரு நிவாரணமும் கிடைக்கப் போவதில்லை.''

''அடடா..... பெயிலாகும் போகிறது. அதற்காக நல்ல நாளும் அதுவுமாக வீட்டை விட்டுப் போக நினைக்காதேடா சந்துரு.'' கிழவரின் கண்கள் கரகரவெனக் கண்ணீரைப் பொழிந்தன.

''போன பரீட்சை முடிவைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள், தாத்தா!''

''உம்.......''

''மனசைத் தொட்டுப் பதில் சொல்லுங்கள், தாத்தா. இந்தப் பணமும் அந்தஸ்தும் நமது நேர்மைக்கும், நாணயத்துக்கும் இறைவன் தந்த பரிசுதானே?''

''ஆமாம், சந்தேகமென்ன?''

''ஆனால் அந்தக் கௌரவமும் அந்தஸ்தும் நேர்மைக்கா பயன்படுகின்றன? பதில் சொல்லுங்கள், தாத்தா!''

''இல்லை.......''

''அதனால்தான் சொல்கிறேன். என்னை முன் விட்டு இனிப் பல பொய்கள் கிளைக்க வேண்டாம். எனக்கு இந்தப் போலி வாழ்க்கை பிடிக்கவுமில்லை. ஒட்டவுமில்லை. அப்பாவின் படிப்பு, அறிவுக் கூர்மை இவற்றின் விளைச்சலினால்தான் நாம் சுக வாழ்வு வாழ்கிறோம். எனக்கு நாலு வயது இளையவன் ஹானர்ஸ் முடிக்கப் போகிறான். அண்ணா இரண்டு பேரும் பி. எச். டி. முடித்துவிட்டு வந்து விட்டார்கள். நான் மட்டும் இந்தக் குடும்ப மண்ணிலே தப்பி விழுந்த வித்தாக, நல்ல பயிரினூடே தழைக்கும் களையாக வளர்ந்து வருகிறேன் இல்லையா? சொல்லுங்கள், தாத்தா?''

''ஐந்து விரலும் ஒன்று போல இருக்காதடா அம்பி?''

''நீங்க சொல்றது சரி. ஐந்து விரலும் ஒண்ணு போல இருக்கணுமென்பதற்காக விரலை வெட்டிக்கிற கதைதான் என் படிப்பு முயற்சி. இன்றைக்கு எனக்குப் படிப்பு வரவில்லை. ஒரு வெற்றிலை பாக்குக் கடை வைத்துக் கொடுங்கள். பிழைத்துக் கொள்கிறேன் என்று கேட்டால் என் கோரிக்கையை நிறைவேற்ற உங்கள் அந்தஸ்து இடம் தருமா?''

''அதெப்படி முடியும்?''

''அதனால்தான் சொல்கிறேன். உங்கள் மட்டத்துக்கு என்னை உயர்த்த முடியாது. என் மட்டத்துக்கு உங்களால் தாழ்ந்து நோக்கவும் முடியாது. அதனால்தான் எங்கேனும் போய்ப் பிழைத்துக் கொள்கிறேன் என்கிறேன்.''

''பதற்றப்படாமல் சிந்தனை செய்து பாரடா!''

''சிந்திக்க என்ன இருக்கிறது? பிறர் பார்ப்பார்களே, பேசுவார்களே என்று அஞ்சிப் பிறருக்காக நடித்து வேஷம் போட்டு வாழ்வதைவிட நானாகவே சிந்தித்து எனக்காக வாழ்வது பல மடங்கு மேல்.... நீங்கள் வாய் ஓயாது ஒரு சம்பவத்தைச் சொல்லிக்கொண்டிருப்பீர்களே, ஞாபகம் இருக்கிறதா?''

''என்ன சம்பவம்?''

''சின்ன வயதில் பள்ளிக்குச் சுமந்து செல்லும் சாப்பாட்டுப் பாத்திரத்தைப் பாட்டியின் வீட்டிலே வைத்து விட்டு, பள்ளிக்குப் போய் வந்து சாப்பிடுவீர்கள் என்றும்......''

''ஆமாம், தீபாவளிக்கு முதல் நாள் உன் பாட்டி என்ன செய்தாள், தெரியுமா? டிபன்பாக்ஸைத் திறந்து பார்த்திருக்கிறாள். மூன்று நாள் புளிச்ச பழையது! மனசிலே என்ன தோன்றியதோ என்னவோ....காலை உதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்து விட்டாள். 'அந்தப் பழைய சாதத்தைத் தான் சாப்பிடுவேன்' என்று பிடிவாதம் பிடித்துச் சாப்பிட்டாள். எனக்கு வடை, பாயசத்தோடு தடபுடல் சாப்பாடு....அப்புறம் அவர்கள் வீட்டிலேயே நிரந்தர விருந்தாளியாகி விட்டேன்.''

''அதைத்தான் சொல்ல வந்தேன். தங்கள் வீட்டுக்கு வந்த சிறுவனுக்கு விருந்துச் சாப்பாடில்லையே என்ற தயையின் கசிவு தான் அந்தப் பிடிவாத சாதனை. அப்புறமும் தன் பணத்தால் ஒருவரை வாழ வைக்க வேண்டுமென்ற ஆசையால்தான் உங்களுக்கு வாழ்க்கைப்பட்டிருக்கிறாள். இல்லையா?''

கிழவர் உதடுகளில் உணர்ச்சிகள் தாளமிட்டன. கண்களை அழுந்தத் துடைத்துக் கொண்டார்.

''அந்த நாளைய அன்பிலே வெளிக் கலப்பில்லாத பாசமும் தயையும் நிறைகுடமாக இருந்தன. இன்று அன்புகூட ஒரு பேரமாகி விட்டது. தன் குழந்தையின் இதயத்தையே துருவி ஆராய முடியாதபடி ஒரு திரை

விழுந்து விட்டதை என்னால் உணர முடிகிறது, தாத்தா......''

''உன்னைப் போல எனக்குச் சிந்திக்கவும், பேசவும் தெரியாதென்று நினைக்கிறாயா, சந்துரு? காலத்தை ஒட்டி வாழ வேண்டுமென்ற தர்மத்தைப் பெரியவர்கள் வைச்சு விட்டுப் போயிட்டார்களே !''

''உங்களைப் போல பாயின்ட்ஸ் மாற்றாத கண்ணாடியை மாட்டிக் கொண்டு, இந்த உலக நடவடிக்கைகளைப் பார்த்துக் கொண்டிருக்க என்னால் முடியாது.''

கிழவர் மனம் விரியச் சிரித்தார். ''இதைக் கொண்டே பாயின்ட்ஸ் மாற்றிப் பார்க்கும் சூட்சம உணர்வு உண்டு எனக்கு'' என்றார்.

''எப்படிச் சுற்றி வளைத்துப் பேசினாலும் என்னால் ஒப்புக் கொள்ள முடியாது. எந்தக் காரணத்துக்காகவும் என் பிரயாணத்தை நான் நிறுத்தப் போவதில்லை.'' சந்துரு எழுந்தான். கிழவரின் குழி விழுந்த நேத்திரங்கள் குளமாயின.

3

**வா**னம் இரண்டாகப் பிளந்து வர்ஷிக்கிறதோ என்று எண்ணும்படி குமுறிக் குமுறி மழையாகக் கொட்டிக் கொண்டிருந்தது. ஒற்றைப் பையோடு பிறர் அறியாதவாறு நடந்து செல்ல எத்தனை சாதகமான சூழ்நிலை! ''டிரிங்.....டிரிங்...''

'அடேடே! சைக்கிளில் வருவது ராஜாமணி போலிருக்கிறதே!' சந்துரு கைகளைப் பலக்கத் தட்டி அழைத்தான். ''ராஜாமணி! நம் வீட்டுப் பேப்பரை என்னிடமே கொடுத்து விட்டுப் போ.''

''நம் வீட்டுப் பேப்பரைத் தங்கச்சி கடை வீதியிலேயே வாங்கிக் கொண்டு போய் விட்டதே!'' சைக்கிளை விட்டு இறங்காமலே அவன் பதிலிறுத்தான்.

''தங்கச்சி வாங்கிப் போனாளா....?''

''ஆமாம், சின்னத் தங்கச்சி....ரெட்டை ஜடைப்பிள்ளை....... இந்த ஒற்றையடிப் பாதையிலேதான் ஓடிச்சு.'' சைக்கிளை அழுத்தி அவன் வேகமாகப் போய்விட்டான். உணர்ச்சிகள் பெய்து புலன்களை நனைக்க, சந்துரு ஒற்றையடிப் பாதையினூடே ஓட்டமும் நடையுமாக விரைந்தான் !

'பேப்பரை எதிர் கொண்டு வாங்குவதற்காக இரண்டு மைல் ஓடி வந்திருக்கிறாள் மழையிலே......' வல்லி..... கண்ணு.... மனத்தின் ஓலத்தில் வெளிப் பிரளய கோஷம் அடங்கி விட்டதோ?'

அவுட் ஹவுஸ் அருகேயிருந்த ஷெட்டில் இருண்ட மூலையில் முணுக்கென்று ஒளிப்பொறி தெறித்தது. ஷெட்டின் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே பாய்ந்தான் சந்துரு. தலையிலிருந்து சொட்டிய ஈரம் தரையிலே கோலமிட, கைகளைக் கட்டியபடி அசையாது நின்று கொண்டிருந்தாள் வல்லி. அவள் எதிரே அன்றைய தினசரியைத் தீயின் செந்நாக்குகள் கவைத்துக் கொண்டிருந்தன. மகிழ்ச்சிப் பெருக்கை மூத்துப்

## ஐந்தாம் வகுப்பு படிக்கும் குழந்தைகளுக்குப் பாவைப் பரிசு

★

நமது நாட்டில் உள்ள ஒவ்வோர் ஆரம்பப் பள்ளிக்கூடத்திலும் ஐந்தாம் வகுப்புப் படிக்கும் குழந்தைகளில் திருப்பாவை முப்பது பாசுரங்களையோ, திருவெம்பாவை இருபது பாசுரங்களையோ மனப் பாடம் செய்ய அவாவுள்ள குழந்தைகளின் எண்ணிக்கையை ஐப்பசி மாதம் 30-ம் தேதிக்குள் எழுதி அனுப்பும் தொண்டில் ஈடுபடுமாறு ஆசிரியர்களை வேண்டிக் கொள்கிறேன்.

மனப்பாடம் செய்த குழந்தைகளுக்குத் தலைமை ஆசிரியர் மூலம் ஸ்ரீ அம்பிகையின் முத்திரையிடப்பட்ட ரக்ஷை காமகோடி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் ஆசியுடன் அனுப்பப்படும்.

விவரத்துக்குக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்.

**காரியதரிசி**

திருப்பாவை, திருவெம்பாவை மத்தியக் குழு,
பெரிய கடைத் தெரு — மாயூரம்



★

பந்தலிடையே சிதறியபடி கைகளைக் கொட்டிக் குதித்தான்.

"லல்லி...... லல்லி...." சந்துருவின் கரகரத்த குரல் நெகிழ்ந்து கரைந்தது....

"அண்ணு, கவலைப்படாதே. அதோபார்!"

அவளை இழுத்து நெஞ்சோடு அணைத்துக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதான் அவன்.

"ஏன் அண்ணு, அழுகிறாய்?" பிஞ்சுக் கரங்கள் கண்டத்தைச் சுற்றி இறுகின. "இந்த ஓர் உள்ளத்தின் அழைப்புக்காவது நான் இங்கேயே இருப்பேன்." மன அடிவாரத்திலே எழுந்த குரல் சொற்களாகத் தொடராது நெஞ்சுக்குள்ளேயே தன்மயமாகி ஒளியைப் பாய்ச்சியது.

"யாரங்கே? சந்துரு....... சந்துரு" பாலத்தின் குரல் தீனமாக ஒலித்தது.

"என்னம்மா? கூப்பிட்டாயா?"

"ஆமாம். பத்மினிக்கு உடம்பு சரியில்லை. ஓடிப் போய் டாக்டரை அழைத்து வா."

"சிக்கந்தர் எங்கே அம்மா?"

"அவன் அப்பாவுக்கு டிபன் கொண்டு போயிருக்கிறான்."

"பூவாயி இல்லையா?"

"ஊஹூம்!"

"ராமதாசும் இல்லையா?"

"ஒரு பாவியுமில்லை. நீ உடனே ஓடு."

"வேலைக்காரர்கள் இருக்கும் பொழுது இந்த மழையிலே என்னைப் போகச் சொல்கிறாயா, அம்மா?"

பாலா கீழே விழாதபடி திராணியற்றவளாய் வாசல் நிலையைப் பற்றிக்கொண்டாள்.

"சந்துரு, விளையாடாதேடா! என் மனசை முறுக்கிப் பிழியறது. ஓடு, ஓடு...."

"சைக்கிளையும் காணோம்...... ஸ்கூட்டரும் இல்லையே அம்மா!"

"உன் கால்கள்கூடவா இல்லாமல் போய் விட்டன? நிற்காமல் ஓடடா...... என் குழந்தை தவிக்கிறாள் உள்ளே! நூறு கேள்வி கேட்கிறாயேடா..... ஓடு.... டாக்டரம்மாளோடு திரும்பி வா..... அது வரை நான் வெறும் கூடடா.....!" சிறு குழந்தை போலத் தேம்பி அழும் தாயாரை நோக்கிப் பிரமித்து நின்றான் சந்துரு. பணம், கௌரவம், நாகரிகம், டாம்பீகம் என்ற நிலைக் களன்களைக் கடந்து நின்ற தாயின் கருணைக் கோலத்தை விழிகள் வழியாக நெஞ்சிலே வார்த்துக் கொண்டு விடுவிடு வென்று கதவைத் திறந்து கொண்டு வெளியே நடந்தான்.

## 4

"நீ மட்டும் வந்து நின்றால் எப்படி வீடு போய்ச் சேருவது? மூன்று தந்தி கொடுத்திருந்தேனே! ஸ்டேஷனுக்குக் கார் அனுப்பி வைத்திருக்கக் கூடாதா? என்ன மனிதர்கள், சட், நான்சென்ஸ்!" என்று உறுமிய சகோதரியின் கணவன் முன்பு குற்றவாளி போலக் குறுகி நின்றான் சந்துரு. "பத்மினிக்கு உடம்பு சரியில்லை. வீட்டிலே யார் மனசும் தெளிவாக இல்லை."

"என்ன? பத்மினிக்கு உடம்பு சரியில்லையா?"

"ஆமாம். அதற்குத்தான்.... டாக்டரம்மாளைக் கூட்டி வரப் போறேன்."

"சந்துரு, சாமான்களை வெயிட்டிங் ரூமிலே போட்டு விடு..... நான் முன்னாலே போகிறேன்." சாமான்களோடு கால் ஜோடுகளையும் உதறி விட்டுக் கொட்டுகின்ற மழையிலே விரைந்து செல்கின்ற ஆண்மகனைக் கண்டு சந்துரு வியப்படையவில்லை... ஏனெனில், சில நிமிஷங்களுக்கு முன்புதான் நீறுபூத்துக் கிடக்கும் உண்மை மனிதத் தன்மையை உணர்ந்திருந்த நிறைவு அவனைத் தன் வயப்படுத்தியிருந்தது.

## 5

வீட்டிலுள்ள அனைவரும் மகிழ்ச்சியோடு உரையாடிக் கொண்டிருந்த நிலையில், சந்துருவின் வேதனை பொதிந்த பார்வை மாப்பிள்ளையின் கையிலிருந்த தினசரியிலே பதிந்து மீண்டது. இதோ விரித்த பக்கங்களூடே அவர் பார்வை ஓடுகிறது! இன்னும் சில விநாடிகளே நீடிக்கப் போகும் மகிழ்ச்சியை நெஞ்சுக்குள் அடக்கிக் கண்களை மூடிக் கொண்டான். "வெரி குட் சந்துரு!.... ஹௌ லக்கி யூ ஆர்! யூ ஹெவ் கம் இன் த செகண்ட் க்ளாஸ்!" தோள்கள் குலுங்கிய அதிர்ச்சியில், கண்களைத் திறந்து வரி வடிவங்களூடே அரை விழிப்பு நிலையைத் தளர விட்டான். 'உண்மைதான்....! இது வரை நடந்த பிரளயம்தான் பொய்!"

"கங்ராட்ஸ் சந்துரு!"

"தேங்க்யூ..... தாத்தா.... தாத்தா!" அவர் அணைக்குள் பாய்ந்தான் சந்துரு.

"தாத்தா..... நான் செகண்ட் க்ளாஸில் பாஸாயிருக்கிறேன், தாத்தா..." அவனது முரட்டுப் பிடிக்குள் அவரது முதிய சரீரம் ஆடிக் குலுங்கியது. விழிகள் வலியத் திறந்து கொண்டன. "சந்துரு..... நீயாடா?..... வந்து விட்டாயாடா, கண்ணே?"

"தாத்தா..... எங்கும் நான் போகவில்லை. நான் செகண்ட் கிளாஸில் பாஸ் செய்திருக்கிறேன், தாத்தா!"

"அப்படியா? சந்தோஷம்!" உணர்ச்சிப் பெருக்கை மறைத்துக் கொண்டார் கிழவர்.

பாலா ஸ்டோர் ரூம் இருட்டுக்குள்ளே மகனின் கையை மெல்லப் பற்றிக் கண்ணிலே ஒற்றிக் கொண்டாள். அவற்றிலே பனித்த வெம்மை நீரின் ஸ்பரிசத்திலே அவன் உடல் சிலிர்த்து நின்றான்.

"மாப்பிள்ளைக்கு இது தலைதீபாவளி!" இது லல்லியின் தமக்கை ஜில்லு.

"பத்மினிக்குத் தலைச்சன் தீபாவளி!" என்றான் சந்துரு.

"அண்ணாவுக்கு இது ரிஸல்ட் தீபாவளி!" இது லல்லியின் குறும்புக் குரல்.

# B·I



# S. S. ரஜுலா

**சென்னையிலிருந்து**

1965 நவம்பர் 9 | 1965 டிசம்பர் 3

சென்னையிலிருந்து பினங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**

7, அரமனைக்காரத் தெரு, சென்னை -1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

C. M. குட்டி
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை -1

மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

**நாகப்பட்டினத்திலிருந்து**

1965 நவம்பர் 10 | 1965 டிசம்பர் 4

நாகப்பட்டினத்திலிருந்து பினங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்.

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**

முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்



# காலச் சக்கரம்

## கி. ராஜேந்திரன்

### அத்தியாயம் 42
### மனச் சோர்வு

தேர்தலில் வெற்றி பெறுவதற்கான நல்ல சூழ்நிலை உருவாகிப் பலப்படப் பலப்பட, தங்கப்பனை ஒரு மனச் சோர்வு ஆட்கொண்டு, அது நாளுக்கு நாள், நிமிஷத்துக்கு நிமிஷம் வளர்ந்து கொண்டும் வந்தது. உண்மையான ஜனநாயக முறையில் வாதப் பிரதி வாதங்களைச் செய்து தான் பரப்பிய கொள்கைகளின் அடிப்படையில் கிடைக்கப் போகிற ஜெயமாகவா அது இருக்கும்? எதிர்த் தரப்பினர் குண்டர்களின் துணையை நாடித் தன்னை அடக்கிவிட நினைத்தால் அவர்களுடைய அம்முயற்சியையே தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு நிலைமையைத் தலைகீழாக மாற்றி விட ஒரு தந்திரத்தையல்லவோ அவன் கையாள நேர்ந்தது? குண்டாந் தடிகளும், ரூபாய் நோட்டுக்களும் ஸ்டண்ட் வேலைகளும்தான் தேர்தல்களில் வெற்றி தோல்விகளை நிர்ணயிக்க வேண்டுமா? கொள்கை விளக்கங்களுக்கு இங்கு மதிப்பில்லையா?

ஜனநாயகத்தைப் பற்றியும், அது வளரத் தான் உதவப் போவது பற்றியும் லட்சியக் கனவுகள் கண்டு கொண்டிருந்த தங்கப்பனின் உள்ளம் உடைந்து போயிற்று. சாட்சியங்கள் ஏதுமில்லாமல் தொழிலாளர் பெருமக்கள் மீது வீண் பழி சுமத்துவதை வன்மையாகக் கண்டிக்கிறேன் என்று மேடைக்கு மேடை அவன் முழக்கியிருந்தபோதிலும் அந்தத் தொழிலாளரில் முரட்டுச் சுபாவம் கொண்ட ஒரு சிலருக்குக் கூட இதில் சம்பந்தம் ஏதும் கிடையாது என்று நிரூபிக்கவும் தன்னிடம் சாட்சியங்கள் ஒன்றுமில்லை என்பதை அவன் அறிந்துதானிருந்தான். அறிவைக் கிளறி விடுவதற்குப் பதில் உணர்ச்சிகளைத் தூண்டி விட்டுத் தான் பெற முயலும் வெற்றி அது என்று நினைத்த போதெல்லாம் அவன் அவமானத்தால் தன் மனம் கூனிக் குறுகுவதைக் கண்டான்.

இதே எண்ணங்களுடன் போராடிக் கொண்டிருந்த அவன், மகனைக் கண்ணுல் பார்த்தே ஒரு மாசமாகுதே என்று புலம்பிய தாமரையைக்கூட லட்சியம் செய்யவில்லை. பல நாட்கள் பிரிவுக்குப் பிறகு வந்த மகனுக்கு வாய்க்கு ருசியாகச் சமைத்துப் போட விரும்பினுள் தாமரை. தனக்குச் சாப்பாடு இறங்காது என்று தங்கப்பனுக்குத் தெரியும். காரணம் கூறினுல் தாமரைக்குப் புரியவும் செய்யாது. அவன் சாப்பிடும் லட்சணத்தைப் பார்த்தால் அவன் அம்மா தன் கைத்திறனில்தான் தங்கப்பன் குறை காண்கிறுன் என்பதாக நினைத்து மேலும் வருந்திக் கண்ணைக் கசக்க ஆரம்பித்து விடுவாள். அதைத் தன்னுல் இப்போதுள்ள மனநிலையில் சகிக்க முடியாது. தங்கப்பன் ஒருவேளை கூட வீட்டில் தங்கிச் சாப்பிடாமல் கிளம்பி விட்டான். தொழிலகம் நோக்கிச் சென்றுன்.

தேர்தலை முன்னிட்டு ஏற்பாடு செய்து கொண்டிருந்த வாடகைக் காரினை ஓட்டிப் போகையில், பிரிட்டனில் கண்ணியமான முறையில் நடைபெறும் தேர்தல்கள் குறித்து மாருதி வியந்து வியந்து கதை கதையாகக் கூறியவையெல்லாம் அவனுக்கு ஞாபகத்துக்கு வந்தன. வோட்டுச் சீட்டுகளில்கூட அவர்கள் கட்சியின் பெயரையோ சின்னத்தையோ குறிப்பதில்லை. அபேட்சகர்களின் பெயர் மட்டுமே அச்சடிக்கப்பட்டிருக்கும். கட்சியின் சார்பில் ஒருவர் போட்டியிட்டாலும் தனி மனிதன் என்ற முறையில் அவர் தகுதியைக் கணித்தே மக்கள் வோட்டளிப்பார்கள்! தேர்தல் கூட்டம் ஒவ்வொன்றுக்கும் பிறகு அபேட்சகரை மக்கள் பல கேள்விகள் கேட்பார்கள். அபேட்சகரது கொள்கைகள் குறித்துத் தங்களுக்குள்ள சந்தேகங்களை இவ்விதம் கேள்விகள் கேட்டும் பதில்களைப் பெற்றும் போக்கிக் கொள்வார்கள். இப்படி ஒன்று இரண்டா எத்தனையோ உன்னதமான பழக்கங்கள் நாம் பின்பற்றிப் பய

ளடையக் கூடிய வழக்கங்கள் இருந்தன. ஆனால் அந்நிலை இங்கு ஏற்படுவதற்கு இன்னும் எத்தனையோ காலமாகும். எல்லாவற்றுக்கும் அடிப்படைத் தேவையான கல்வி அறிவு பெருகிய பின்னர்தானே இந்த முன்னேற்றங்கள் குறித்து நினைத்துப் பார்க்க இயலும்?

அதுவரை....? 'அதுவரை ஸ்டண்டு வேலைகளில் இறங்க வேண்டியதுதான்! என்று விரக்திப் புன்னகையுடன் எண்ணியபடி தொழிலகத்துக்குள் நுழைந்தான் தங்கப்பன்.

ஒவ்வொரு நாளும் தங்கப்பன் தன் தொழிலகத்தின் காரியாலய அறைக்குள் நுழையும்போதும் மேஜையின் மீது அவன் பதிலுக்காகக் கடிதங்கள் பல காத்திருக்கும்; அவனால் தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினைகள் பல குவிந்திருக்கும்; கவனிக்கப்பட வேண்டிய வரவு செலவுக் கணக்குகள், கையெழுத்தாகவேண்டிய செக்குகள் இப்படிப் பல இருக்கும். அவற்றைப் பார்க்கும்போது ஒரு நூதனமான உணர்வு அவனுக்கு ஏற்படும். தன் எதிரே இருக்கும் மேஜை, வேலைகள் என்னும் காகித அஸ்திரங்களால் தன்னைத் தாக்கித் தன்னுடன் போராடுவதாக அவன் எண்ணிக் கொள்வான். 'இத்தனை பாணங்களையும் உன்னால் சமாளிக்க முடியுமா?' என்று ஏளனமாக அது கேட்டுச் சவால் விடுவது போல் தோன்றும். அன்றைய அலுவல்களை யெல்லாம் பாக்கி ஏதும் வைக்காமல் மளமளவென்று செய்து முடித்துத் தீர்த்துவிட்டதும் அவனுக்கு ஓர் உள்ள நிறைவும் பெருமிதமும்கூட ஏற்படும். மேஜையுடன் யுத்தம் செய்து அதனை அடிமை கொண்டுவிட்டது போல் அவன் வெற்றிக் கர்வத்துடன் தன் கால்களைத் தூக்கி அதன் மீது போடுவான்! அப்போது ஏற்படும் ஆனந்தத்துக்கு ஈடாக அவன் வேறு எதையும் அனுபவித்ததேயில்லை!

தேர்தலை முன்னிட்டு அவன் தொழிலகத்துக்கே வராதிருந்த நாட்களில் அவனது அன்றாட அலுவல்கள் பலவற்றை இன்ஜினியர் குமாரன் தாமே பொறுப்பேற்றுச் செய்து முடித்து விட்டிருந்தார். எனினும் தங்கப்பனாலேயே கவனிக்கப்பட வேண்டிய பல பிரச்சினைகள் குவிந்துதான் கிடந்தன. ஏற்கெனவே மனச் சோர்வுடன் வந்திருந்த தங்கப்பனுக்கு அவற்றைப் பார்த்ததும் களைப்பு மிகுதியாயிற்று. நிம்மதியாகத் தொழில் நடத்த வழியின்றி நாளுக்கு நூறு பிரச்சினைகளுடன் போராடிக் கொண்டு, 'இதென்ன வாழ்வு?' என்று மனம் தளர்ந்தான் அவன். எதிரே குவிந்து கிடந்த காகிதங்களை மேஜையின் ஓர் ஓரமாக ஒதுக்கித் தள்ளினான். கரங்களை மேஜை மீது வைத்துக் குனிந்து அவற்றில் தன் முகத்தைப் பதித்துக் கொண்டான்.

அமைதி இழந்துவிட்டிருந்த அவன் மனம் ஒருநாள் மாலை பொன்னகரம் வாசகசாலையில் அவன் தனது போலி அந்தஸ்து, வறட்டுக் கௌரவம் எல்லாவற்றையும் விட்டுக் கூட்டத்தோடு கூட்டமாக நின்று பாடி மகிழ்ந்ததை நினைத்துப் பார்த்தது. அந்த ஒரு மணி நேரம்தான் எத்தனை இனிமையாகக் கழிந்தது! அந்த மகிழ்ச்சிப்பெருக்கை அனுபவிக்கத் தனக்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்தித் தந்த மிருணாளினிக்கு அவன் மானசீகமாகவும் இதய பூர்வமாகவும் நன்றி தெரிவித்தான்.

அவள்தான் எத்தனை எளிமையான உள்ளம் படைத்தவள்? வெளிப்படையாகப் பொதுவுடைமையைப் போதிப்பதைவிட, சமூக சேவை என்ற பெயரில் தீவிர கம்யூனிஸப் பிரசாரம் செய்வதில் அதிக பலன் காணலாம் என்ற கருத்தில் அவளை மேலிடம் இந்தக் காரியத்தில் ஏவி விட்டிருக்கலாம். ஆனால் தனது உண்மை நோக்கத்தை ஒளிக்கக்கூடத் தெரியாத வெள்ளை மனம் அவளுடையது என்பதை அவர்கள் கணித்திருக்க மாட்டார்கள்! தான் கம்யூனிஸச் சார்புள்ளவள் என்பதையோ, கம்யூனிஸச் சித்தாந்தங்களைத் தான் ஏற்றுக்கொள்வதற்கான சூழ்நிலை தன் வாழ்வில் ஏற்பட்டிருந்தது என்பதையோ மறைக்க அவளுக்குத் திறமையில்லை! ஆனால் அவ்விதம் தன் வாழ்வைப் பாதித்த சம்பவம் அல்லது சூழ்நிலை என்ன என்று அவள் கூறவில்லைதான். மனத்திலுள்ளதையெல்லாம் கள்ளம் கபடமின்றி உடனுக்குடன் கூறிவிடும் இயல்பு படைத்த அவள் தனது செல்வத்தையும், சுகபோக வாழ்வையும் துறந்து இப்படி ஊர் ஊராகச் சுற்றி அலைந்து சிரமப்பட்டு மக்களுக்குத் தொண்டு புரிவதில் இன்பம் காணுகிறாளே? அதற்கான அடிப்படைக் காரணத்தை மட்டும் வெளியிட அவள் விரும்பவில்லையானால், அது அவளை வெகுவாகப் பாதித்துப் பெரிய மன மாற்றத்தை உண்டாக்கிய முக்கிய நிகழ்ச்சியாகத்தானே இருக்க வேண்டும்? அதைப் பற்றிப் பேசவோ, நினைத்துப் பார்க்கவோகூட அவளுக்கு இஷ்டமில்லாத அளவுக்கு அது கசப்பான அநுபவமாகவும் இருந்திருக்க வேண்டும்! பாவம்! என்றாவது ஒரு நாள் என் வாழ்க்கைக் கதையை யாரிடமாவது கூறுவதென்று நான் தீர்மானித்தால் முதலில் உங்களைத்தான் தேடுவேன் என்று கூறியதோடு நிறுத்திக் கொண்டாளல்லவா?

முதல் சந்திப்பிலேயே மிருணாளினியிடம் தான் ஈர்க்கப்பட்டதும், ஆலமரத்தடியில் தான் அசைவற்று நின்றதும், அவள் தனக்கு நேர்மாறான கொள்கைகளையும் நோக்கங்களையும் உடையவள் என்று தெரிந்தபோதிலும் அவளிடம் தான் நெருங்கிப் பழக ஆசைப்படுவதும் எல்லாமே தங்கப்பனுக்கு இயல்பாகத்தான் தோன்றின. ஆனால் ஏன் அப்படி யிருக்கிறது என்பது அவனுக்குச் சரியாகப் புரியவில்லை. அவள் அழகு காரணமாகவா? மிருணாளினி எடுப்பான தோற்றம் கொண்டவள்தான். ஆனால் உஷாவிடம் உள்ளது போன்ற ஒரு வசீகர அழகு அவளிடம் கிடையாது. உஷாவின் மோகனக் கவர்ச்சிக்கே கட்டுப்படாத தனது திடமான உள்ளம் இவள் அழகுக்கா மயங்கிவிடப்போகிறது? செல்லத்திடம் தான் கொண்டுள்ள பரிவு, பாசம், அன்பு போன்ற எதையும் இவளிடத்தில் தான் உணரவில்லையே. ஏதாவது ஒரு காரணத்தைச் சாக்கிட்டுக் கொண்டு செல்வம் தன்னிடத்தில் வலிய வந்து பேச முற்

படும்போதெல்லாம் ஒருவித உள்ள நெகிழ்ச்சி ஏற்படுமே, அப்படி ஏதும் இவளுடன் பழகும் போது ஏற்படவில்லை. கண்டதும் காதல் என்பார்களே, அப்படி யொன்றும் தான் மிருணாளினியைப் பார்த்த மாத்திரத்தில் உருகித் தவிக்கவும் இல்லை. அவ்வாறெனில் அவளிடம் ஒன்றி உறவாட மட்டும் தன் உள்ளம் ஏங்கி எதிர்பார்ப்பது எதனால்? உயர்ந்த, பணக்காரக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்த போதிலும் ஏழை எளியவருக்கு உதவ முன் வருவது போன்ற அவளுடைய உயர் பண்புகள் காரணமாகவா? சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறாள் என்பதாலா? உஷாவிடமோ, செல்லத்திடமோ தனக்குச் சரிநிகரான உரையாடலை எதிர்பார்க்க முடியாததாலா? செல்லத்துக்கு, ரசத்துக்கு உப்புப் போதுமா என்றும், மாட்டுக்கு நாளைக்குப் போட வீட்டில் புண்ணுக்கு இல்லை என்றும் இதுபோலத் தான் பேசத் தெரியும். உஷா வாயைத் திறந்தாலோ அதிகாரமும், ஆணவமும், வெறுப்பைக் கக்கும் குணமும்தான் வெளிப்படும். இவ்விரு துருவங்களுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டிருப்பதால்தான் தனக்குச் சமதையாக நின்று பேசும் மிருணாளினியின் நேசம் தனக்குப் பிடித்திருக்கிறதா? இது ஒருபுறமிருக்க, இதையும்விட இன்னும் முக்கியமானதொரு பங்கு அவள் தன் வாழ்வில் வகிக்கப் போகிறாள் என்று அவனுக்குப் பட்டது. ரத்த பாசம், உறவு முறைகள் இவற்றைக் காட்டிலும் நெருக்கமான ஒரு பிணைப்பு மிருணாளினிக்கும் தனக்குமிடையில் உண்டாகப் போவதாக அவன் எதனாலோ தீர்மானித்து அதனை மனமார விரும்பி வரவேற்கவும் செய்தான்.

## அத்தியாயம் 43

# உற்சாகம்

தங்கப்பனைப் பவழமல்லிகைகளின் நறுமணம் கும்மென்று சுற்றிச் சூழ்கிறது. மிருணாளினி தன் மென்பாதங்களை அடிமேல் அடியெடுத்து வைத்து நடந்து அவனை நெருங்குகிறாள். மிகச் சமீபத்தில் வந்து விடுகிறாள். தங்கப்பன் மனச் சோர்வுடன் கரங்களில் முகம் பதித்து மேஜை மேல் சாய்ந்து கிடப்பதைக் காண்கிறாள். அவளது வெளேறென்றிருக்கும் நீண்ட விரல்கள், அற்புதமான அந்த உள்ளங்கை இரண்டும் அவன் உச்சந்தலையில் அனுதாபத்துடன் பதிகின்றன. அப்படியே அவன் கேசத்தை வழித்துவிட்டாற்போல் கீழிறங்கிப் பின் கழுத்தை அடைகின்றது அவள் கரம். இப்படியே இரண்டு மூன்று தடவைகள் செய்கிறது அது. 'அப்பாடா! எத்தனை இதமாக இருக்கிறது!' வாடியிருந்த தங்கப்பன் இந்தக் கனவு இப்படியே நீடித்துக் கொண்டு போகக் கூடாதா என்று ஏங்க ஆரம்பித்து விடுகிறான். 'கண் திறந்து பார்த்தால் எல்லாம் மறைந்துவிடும். கனவிலேயே தூங்கும் நான் தூங்கிக்கொண்டே இருக்க வேண்டும்!'

நான்கு முறை அவன் தலையைக் கோதி விட்ட அவள் கரம் ஐந்தாவது தடவை கேசத்தைக் கலைத்துப் பொறுமை இழந்தாற் போல் உகப்பி விடுகிறது பரபரவென்று.

தங்கப்பன் திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான். தான் கண்டவை ஏதும் கனவல்ல; நிஜமேதான்! தன் எதிரில் மிருணாளினியே நிற்கிறாள்!

''நீங்கள்... நீங்கள்!...'' என்று குளறினான் தங்கப்பன்.

''என்ன முதலாளி ஸார்! இப்படி ஆபீசிலேயே தூங்குகிறீர்கள்! தொழிலாளர் சமூகத்தின் உழைப்பு இருக்கும் வரையில் முதலாளி வர்க்கம் நிம்மதியாகத் தூங்கலாம்தான்! எங்களிடம் மட்டும் ஆட்சிப் பொறுப்பிருந்தால் இப்படிப் பிறர் உழைப்பில் உண்டு உறங்குபவர்களை ஒழித்துக் கட்டிவிட்டுத்தான் மறுகாரியம் பார்ப்போம்!'' மிருணாளினி தூக தட்டுவது போல் தன் உள்ளங் கைகளை உரசித் தட்டினாள். கலகலவென்று சிரிப்பை உதிர்த்தாள்.

தங்கப்பன் அவள் தன் கேசத்தை அன்புடன் வருடிக் கொடுத்ததை நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவளுடைய செய்கைகளுக்கு ஏதேனும் உள் அர்த்தத்தைக் கற்பித்துக் கொள்ளக் கூடாது என்று அவன் தன்னைத் தானே எச்சரித்துக் கொள்ளவும் செய்தான். 'இப்படித்தான் அவள் குழந்தைத்தனமாக நடந்து கொள்வாள்; கிண்டலாகப் பேசுவாள்; சிரிப்பாள்.'

''நான் ரொம்பவும் களைத்துப் போயிருந்தேன்'' என்றான் தங்கப்பன்.

''அதனால் நான் தடவிக் கொடுத்தது இதமாக இருந்ததாக்கும். அதைத் தொடர்ந்து அனுபவிக்கத் தூங்குவது போல் பாசாங்கு செய்தீர்களாக்கும்!'' என்றாள் மிருணாளினி.

பள்ளி நடத்தும்போது புத்தகத் தமிழைக் கையாண்டு நிதானமாகப் பேசிய மிருணாளினி மற்ற சமயங்களில் விறுவிறுப்புடன் வார்த்தையாடும்போது உபயோகித்த ஹிந்தி, ஆங்கிலம், தமிழ் எல்லாம் கலந்த ஒரு மணிப்பிரவாள நடை இதற்குள் தங்கப்பனுக்கு நன்கு பழகி விட்டிருந்தது.

''சரி, கொஞ்சம் எழுந்து இந்தப் பக்கம் வாருங்கள்!'' என்றாள் அவள். சொன்னபடி கேட்டான் அவன். தங்கப்பன் காலி செய்த நாற்காலியில் அவள் உட்கார்ந்து கொண்டாள். தரையில் காலூன்றி உந்திவிட்டுச் சுழல் நாற்காலியைச் சுற்ற வைத்தாள். தலையை மூடி யிருந்த புடவைத் தலைப்பு பறந்து நழுவ அழகாகக் கொண்டை போடப் பெற்றிருந்த அடர்ந்த கரும் கேசத்தை அலங்கரித்த பவழமல்லிகைச் சரங்கள் பளிச்சிட்டு மணம் பரப்ப, வெள்ளி மணியின் நாதம் போன்று சிரிப்பொலி எழுப்பியபடியே அவள் சுற்றிச் சுற்றி வந்தாள். பிறகு சுழலுவதை

நிறுத்தி ஸ்பிரிங் போடப்பட்டிருந்த அந்த நாற்காலியைப் பின்னுக்குச் சாய்த்துச் சுற்று முற்றும் அலட்சியப் பார்வையை வீசிய படியே, முதலாளியாயிருந்தால் எப்படியிருக்கும் என்று அனுபவித்துப் பார்க்கிறேன்!'' என்று கூறி நடித்துக் காண்பித்தாள்.

தங்கப்பன் கவலைகளையெல்லாம் மறந்து சிரித்தான். ''நீங்க முதலாளியானா தொழிலகத்தில் வேலை ஏதும் நடக்காது! தொழிலாளர்களுடன் நீங்களும் சேர்ந்து உட்கார்ந்து இட்டுப் பாட்டுப் பாடியே பொழுதைக் கழிச்சுடுவீங்க'' என்றான்.

''உழைப்பாளிப் பெருமக்களே! நீங்களே பதில் சொல்லுங்கள்! உங்களுக்குப் பாடும் முதலாளி வேண்டுமா? தூங்கும் முதலாளி வேண்டுமா?'' என்று மேடை முழக்கம் செய்தாள் மிருணாளினி.

''நான் தூங்கிக்கிட்டிருக்கவில்லை. உங்களைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். நீங்களும் ஓசைப்படாம வந்து நிக்கறீங்க!''

''என்ன நினைத்தீர்கள் என்னைப் பற்றி? உண்மையைச் சொல்லுங்கள்! வேஷம் போடுகிறாள்; ஊரை ஏமாற்றுகிறாள் என்றுதானே?''

''இல்லை. ஏழை எளியோருக்கு உதவும் உன்னதமான வாழ்க்கை. ஆனால் தவறான இறுதி லட்சியம். உயர்ந்த லட்சியத்தை அடையத் தவறான மார்க்கத்தைக் கையாண்டாலும் பரவாயில்லை என்பார்கள்; ஆனால் நீங்கள் தவறான லட்சியத்தை அடைய உன்னதமான மார்க்கத்தைக் கடைப்பிடிக்கிறீங்க!'' என்றான் தங்கப்பன்.

''அச்சா!'' என்று பாராட்டினாள் மிருணாளினி. ''அழகான வார்த்தைகள்; ஆனால் தவறான கருத்து! ஜனநாயகம் என்று நீங்கள் அழைக்கும் உங்கள் அரசியல் முறையில் நீங்கள் என்ன கண்டுவிட்டீர்கள்? உங்கள் தொழிலகத்தில் ஏற்பட்ட தொல்லைகள் கொஞ்ச நஞ்சமா? வேண்டுமென்றே சிலர் ஏதேதோ தகராறுகளைக் கிளப்பி விட்டுவிட அது வேலைநிறுத்தத்தில்போய் நிற்கவில்லையா? தேர்தலில் உங்களுக்கு உழைக்கத் துணிந்தவர்களின் கதி என்ன? ஒருவன் லாக் அப்பில் இருந்துவிட்டு வந்தான்; மற்றொருவன் குண்டர்களால் தாக்கப்பட்டு இன்னமும் காயங்களுக்குக் கட்டுப் போட்டுக்கொண்டிருக்கிறான். அந்தக் கட்டுக் காயங்களைக் காட்டி நீங்கள் வோட்டுக் கேட்கும் நிலை. உங்கள் அரசியலில் நேர்மையும் ஒழுக்கமும் வாழ முடிகிறதா? சூது வாதுகளும், லஞ்ச ஊழல்களும் தானே தாண்டவமாடுகின்றன? இதோ இங்கு வந்ததும் இந்தச் சின்னத் தொழிலகத்தை நடத்துவதில் நாள்தோறும் இத்தனை பிரச்னைகளா என்று மலைத்தவராக அத்தனை காகிதக் கட்டுக்களையும் பைல்களையும் ஒதுக்கித் தள்ளி விட்டுச் சோர்வுடன் கரங்களில் முகத்தைப் புதைத்துக் கொண்டீர்களல்லவா? நீங்கள் நேர்மைக் குறைவாக நடந்துகொள்ள முன் வந்தால் இந்தப் பிரச்னைகளில் பாதிக்கு மேல் இருந்த இடம் தெரியாமல் ஓடிப் போய்விடும் என்பதை அறியாதவரா நீங்கள்? உங்கள் அரசியல் முறையில் இன்னமுமா நம்பிக்கை இருக்கிறது உங்களுக்கு?''

''இருக்கிறது மிருணாளினி; நம்பிக்கை இழக்கவில்லை நான். மக்களின் அடிப்படைச் சுதந்திரங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் சில தியாகங்களைப் புரிந்துதானாக வேண்டும். சில கஷ்ட நஷ்டங்களையும், குறைகளையும் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். நேர்மையான நிர்வாகமும் ஒழுக்கமும் இருந்து அடிப்படைச் சுதந்திரங்கள் பறிபோய்விட்டால் பயனென்ன? பிறகு நாம் மக்களில்லை, இயந்திரங்கள்!''

இப்படி சுவாரஸ்யமாக அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்தபடியால் தொழிலகத்தின் வாசலில் ஹெரால்ட் கார் வந்து நின்றதையோ அதிலிருந்து உஷா இறங்கி வேகமாக அவ்வறையை நெருங்கிக் கொண்டிருந்ததையோ அவர்கள் கவனிக்கவில்லை. உஷாவும் ஏதோ ரொம்பக் கோபத்துடன் விடு விடுவென்று நடந்து வந்ததால் பாதிக்கு மேல் கண்ணாடிக் கதவாக இருந்தபோதிலும் அந்த அறைக்குள் தங்கப்பனைத் தவிர வேறொருத்தி இருப்பதைப் பார்க்கவேயில்லை.

துரித கதியில் வந்தவள் கதவைப் படாரென்று ஓசைப்படத் திறந்துகொண்டு, ''நீ செய்வது கொஞ்சம்கூட நன்றாக இல்லை'' என்று தங்கப்பன் வழக்கமாக அமரும் நாற்காலியை நோக்கிக் கூறியபடியே வந்தாள். அருகில் நெருங்கிய பிறகுதான் அதில் தங்கப்பனில்லை; வேறு ஒரு பெண் அமர்ந்திருக்கிறாள் என்பது அவளுக்கு உறைத்தது.

திரும்பித் தங்கப்பனையும் பிறகு மிருணாளினியையும் மாற்றி மாற்றிச் சில கணங்கள் பார்த்துக் கொண்டே நின்றாள் உஷா. (தொடரும்)

வாழ்க்கை ஏணி.
மேல் படியில் நான்.
முதல் படியில் சுந்தரம்.
அதிருஷ்டசாலி....
நான்தான்.

ஐ. ஏ. எஸ். பதவி, அழகான மனைவி, பங்களா, கார், சமையற்காரர்....

ஆனால்....அதிருஷ்டக் கட்டை...சுந்தரம். மங்களத்தைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள ஆசைப்பட்டான். அவன் என்ன, மனிதப் பிறவியெடுத்த யாருமே அதற்கு ஆசைப்படுவார்கள். எழில் பொங்கும் தங்கச் சிலை அவள்.

அவனுடைய ஆசை நிராசை ஆயிற்று—மங்களத்துக்காக இன்னொருவன் காத்திருந்தான்.

மங்களம் இப்பொழுது....
என் மனைவி!
அதை இப்போது நினைத்தாலும்....

"ராமுவா, வா வா, உட்கார். ஒரு நிமிஷம்....இந்தச் சுற்றறிக்கையை வகுப்புகளுக்கு அனுப்பிவிட்டு வந்து விடுகிறேன்."

பஞ்ச கச்சம். வெள்ளைச் சட்டை. சலவை செய்த கோட்டு. முகத்தில் திருநீறு.

சுந்தரத்தின் சித்திரத்தைத் தீட்ட முயன்ற எனக்கு அந்தத் தோற்றத்தின் காம்பீர்யத்தை வர்ணிக்கத் தெரியவில்லை.

இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு....

"ஆமாம், என்ன திடீர்ப் பிரவேசம்? முன்னாடி ஒரு கடுதாசி....ஆனால் உன்னைச் சொல்லவும் கூடாது....பல ஜோலிக்காரன். வந்தது சந்தோஷம். என்ன சாப்பிடுகிறாய்? எலுமிச்சம் பழம் பிழிந்து ஐஸ் போட்ட சர்பத் சாப்பிடு. இந்த வெயிலுக்குக் குளுமை....."

அவன் பொழிந்த அன்பு மழை என்னைக் கூனிக்குறுக வைத்தது. சுந்தரம் இன்னும் மாறவில்லை.

"குடும்பச் சேதி என்ன? உன் ஸ்கோர் எத்தனை?" என்று நண்பர்களுக்கு உரிய பரிபாஷையில் கேட்டேன்.

"ஏற்கனவே ஒன்று, பாவாடை; உனக்குத் தெரிந்தது. இன்னொன்று 'ரிலீஸ்' ஆகிற சமயம்" என்று சொல்லிச் சுந்தரம் இலேசாகச் சிரித்தான்.

பத்தாண்டுகள் ஆகியும் மாறாத அதே நகைச்சுவை.

பேச்சை வேறு திசையில் திருப்ப முயன்ற என்னை இடைமறித்து, "அதிருக்கட்டும். உன் ஸ்கோரைச் சொல்லு, முதலில்" என்று சுந்தரம் கேட்டான்.

"டஜனை முந்திக் கொண்டு விட்டேன். தயாரிப்புகள் இரண்டு. இரண்டும் கௌன். என்ன செய்கிறது?"

"ஏன், குறைப்பட்டுக் கொள்கிறாய்? நல்ல உத்தியோகமும் செல்வாக்கும் உள்ளவ



னுக்குப் பெண்களின் கல்யாணம் ஒரு பிரச்னையா? என்னைச் சொல்லு. இந்த உத்தியோகத்தில் கண்டது என்ன?''

''அமெரிக்காவைப் பற்றிக் கனவு காண்பாயே, நினைவிருக்கிறதா சுந்தரம்? இந்த வேலையை ராஜிநாமா செய்து, டில்லிக்கு என்னுடன் வந்துவிடு. பெரிய கம்பெனியில் வேலை கிடைக்கும். உன் ஆசையும் நிறைவேறும்'' என்றேன்.

சுந்தரம் அழுத்தக்காரன்.

''இக்கரையே பச்சையாய் இருக்கு, ராமு. ஆசிரியர் தொழிலில் ஒரு நிம்மதி இருக்கு. அது போதும்.''

''சுந்தரம்! அதிர்ஷ்டம் என் உருவத்தில் உன்னை அழைக்கிறது. தட்டாதே.''

அவன் சிரித்தான். காரணம்....

அதிர்ஷ்டம், என்னைத் தேடி வந்ததே....

மங்களத்தின் உருவத்தில்தான்!

இளமையிலிருந்து சுந்தரமும் நானும் இணைபிரியாத நண்பர்கள். படிப்பு, விளையாட்டு, பொழுதுபோக்கு, விடுமுறைப் பயணம் எல்லாவற்றிலும் இருவர் பாதையும் ஒன்றாக இருந்தன. பி. ஏ. பரீட்சையில் தேறினோம்—முதல் வகுப்பில்.

ஒன்றாக இருந்த பாதை இங்கே பிரிந்தது.

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் அவன் சேர்ந்தான்.

''ஐ. ஏ. எஸ். இன்னும் மற்றத் துறைகள் எல்லாம் முதலில் முயன்று பாரு. ஆசிரியர் வேலை எப்போதும் காத்திருக்கும்.'' என் எச்சரிக்கை அவனுடைய !பிடிவாதத்திடம் தோல்வி கண்டது. அவன் கொடுப்பினையை மாற்ற நான் யார்?

அந்த ஆண்டு அவன் பயிற்சியில் சேர்ந்தான். நான் ஐ. ஏ. எஸ். பரீட்சைக்கு எழுதினேன்.

அவன் தேறினான். நான் தேறவில்லை.

அதன் பிறகுதான் மங்களம்....

கல்லூரிப் படிப்பின் இறுதி ஆண்டில் இண்டர் வகுப்பில் சேர்ந்தாள் மங்களம்.

'இவளைப் போல் ஒருத்தி மனைவியாக வாய்த்தால் நான் கொடுத்து வைத்தவன்' என்று என் மனம் எண்ணியதை ஒப்புக் கொள்கிறேன்.

அதே எண்ணம் சுந்தரத்துக்கும் இருந்தது. எனக்கு அப்போது தெரியாது.

ஜாதகப் பொருத்தம் பார்த்தார்கள். மங்களத்தின் ஜாதகம் என்னுடைய ஜாதகத்துக்குக் கெட்டி மேளம் கொட்டிற்று.

அதிர்ஷ்டம்....

என் பக்கம் இருந்தது. அழகுத் தேவதையின் கரம் பற்றினேன். சுந்தரம் – அவனுடைய பேறுக் கட்டை விடைத் தான்களைத் திருத்துவதில் முனைந்திருந்தது.

மங்களம் அதிருஷ்ட தேவதையுங்கூட என்பதை அடுத்த ஆண்டு கண்டு கொண்டேன். அவளுடைய ஜாதகத்தின்படி, கல்யாணத்துக்குப் பிறகு கணவனுக்கு யோகமாம்.

மீண்டும் ஐ. ஏ. எஸ். பரீட்சை வந்தது. என் வற்புறுத்தலால் சுந்தரம் முதல் தடவையாகப் பணம் கட்டினான்.

முடிவு....

இந்த முறை எனக்கு மங்களகரமாகவே அமைந்தது. அதிருஷ்டப்பட்டியலில் சுந்தரத்தின் பெயர் இடம் பெறவில்லை.

''மங்களம், கேட்டியா சேதி?''

அவள் ஓடி வந்தாள்.

''சுந்தரம் அடுத்த மாதம் டில்லிக்கு வருகிறான்.''

''நீங்கள் எழுதியிருந்தீர்களா?''

''அவனை மறந்து எத்தனையோ வருஷங்கள் ஆகிறது. அவனுடைய பெண் ரேடியோ இசைப் போட்டியில் முதல் பரிசு வாங்கி யிருக்கிறாள். பார் இதை!''

மங்களம் ஆவலோடு பத்திரிகையை வாங்கிப் பார்த்தாள்.

''எங்கே, நம் பெண் கமலா?''

''பைலட் கோர்ஸ் சேர்ந்திருக்கிறாளே.... பயிற்சிக்குப் போயிருப்பாள்....''

''வில்லி?''

''ட்விஸ்ட் நடன சினிமாவாம். சிநேகிதியோடுபோயிருக்கிறாள்.....''

''என்ன கண்ணே ஒளி இதெல்லாம்?''

''நீங்கள் கொடுத்த இடம்.....'' என்றுசொல்லி முடிப்பதற்குள் வந்த இருமலை மங்களம் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

''மாத்திரையை ஒழுங்காகச் சாப்பிடுகிறாயா?''

''சாப்பிடுகிறேன். குணம் தெரியல்லே.''

''சானிடோரியத்தில் இருந்தால் நல்லது என்கிறார் டாக்டர்.''

''பார்க்கலாம்.''

''உடம்பை அலட்டிக் கொள்ளாதே.''



"சமையலறைக்கு வேறு ஆள்?''

''ஸ்ட்ரைக் பண்ணுகிறீர்கள். ஐ. சி.எஸ். வேலைன்னு நினைப்பு.''

''இதுவும் ஐ. சி. எஸ். உத்தியோகம் தானே !'' என்று அவன் சொன்ன பழைய ஹாஸ்யத்தை ரசிக்க முடியாத நிலையில் இருந்தேன்.

''பழைய போட்டோவுல உன் பக்கத்தில் பாவாடை கட்டிய பெண் நிற்கிறாளே, அவளாடா இவள்! மள மளன்னு வளர்ந்துட்டாளே........'' என்று வியப்பில் ஆழ்ந்த வனாய்க் கேட்டேன் சுந்தரத்திடம்.

''அவர்களைப் பார்க்கும் போதுதான் நமக்கும் வயதாகிறது தெரிகிறது'' என்றான் சுந்தரம். அவனுடைய முகத்தில் மன நிறைவின் ஒளி வீசியது.

''ஏம்மா வெட்கப்படுகிறாய், உட்கார் !'' என்றேன், சீதாவைப் பார்த்து.

அவள் சோபாவில் உட்கார்ந்தாள்.

''ஒரு தடவையாவது நீ வீட்டுக்கு வந்திருந்தால் அவனுக்கு அடையாளம் தெரியும். உன்னைப் பற்றி அவனுக்குக் கேள்வி ஞானம்!''

''அதுதான் இசைப் போட்டியில் முதல் பரிசு தட்டி விட்டாள்.''

''இப்படிச் சொல்லித் தப்பித்துக் கொள்ளாதே. 'இந்த முறை அவர் வீட்டில் தங்குங்கள். அடுத்த தடவை அவர் நம் வீட்டுக்கு வராமல் இருந்தால் பிறகு அந்தப் பக்கமே போக வேண்டாம்' என்று எச்சரிக்கை செய்து அனுப்பியிருக்கிறாள் சரசா'' என்று சுந்தரம் சிரித்துக் கொண்டே சொன்னான்.

''ஆமா, ஏன் சரசாவை அழைத்துக் கொண்டு வரவில்லே?'' என்ற குரல் கேட்டுச் சுந்தரம் நிமிர்ந்து பார்த்தான். தங்கச் சிலையின் மங்கிய எழிலைக் கண்டு அவன் திடுக்கிட்டிருக்க வேண்டும். ஆனால் அவன் தன் உள்ளத் தடுமாற்றத்தை வெளிக் காட்டாமல், ''என்ன மன்னி, சௌக்கியமா? வந்து..... அவளுக்கு வரணும்னு எண்ணந்தான். முடியல்லே. ரயிலுக்குப் புறப்படும் வரையில் அவளுக்கு வேலே சரியாய் இருந்தது சமையலறையில்'' என்றுகூறிச் சமாளித்தான்.

''தனியாகவா விட்டு விட்டு வந்திருக்கிறாய்?'' என்றேன்.

''பிள்ளை இருக்கானே. இந்த வருஷம் பி. எஸ்ஸி. பரீட்சை எழுதியிருக்கான்.''

சுந்தரம்.... அன்று கண்ட மேனி..... நிதானம்.... நரையே காணாத இளமை....

நரை.... என் தலையிலும் உள்ளத்திலும் படிந்திருந்தது........

சமையலறைக்குள் தற்செயலாக நுழைந்தேன். சீதா அரிவாள்மனையில் காய்கறிகளை நறுக்கிக் கொண்டிருந்தாள்.

''ஹாய்யா இருக்க வந்த இடத்தில் வேலே வாங்க ஆரம்பித்து விட்டாளா?''

''நான் எவ்வளவு சொல்லியும் கேட்டால் தானே? அரிவாள்மனையை அவளே பிடுங்கிக் கொண்டு விட்டாள்'' என்றாள் மங்களம்.

''சீதா, உனக்குச் சரியான தண்டனை.''

சீதா உடனே எழுந்தாள். ''ஒன்றுமில்லே, மாமா, எங்கே இருந்தாலும் செய்ய வேண்டியதுதானே ?'' இவ்வளவு அடக்கமும் மரியாதையும் எந்தப் பள்ளிக்கூடத்தில் கற்றுத் தருகிறார்கள்?

அந்தச் சமயம்.......

அவசரம் அவசரமாக வந்த கமலா, ''அம்மா, காப்பி ரெடியா? ஒரே தலைவலி. உயிர் போகிறது'' என்று அவசரப்படுத்தினாள்.

''வெளியே பறந்தாச்சு. வீட்டிலும் பறக்கணுமா? இரேன்....'' என்று மங்களம் கடிந்து கொண்டாள்.

''இரும்மா.... இரண்டே நிமிஷத்தில் காப்பி போட்டுத் தருகிறேன்.'' — இது சீதா.

''பார்த்துக் கொள்ளடி. உன் சடுதான் அவளும்....''

''என் உத்தியோகம் சமையலறையில் ஒரு நாளும் இருக்காது.''

மௌனமாக வெளியேறினேன்.

பரிசளிப்பு விழா. ராஷ்டிரபதியிடமிருந்து சீதா பரிசைப் பெற்றுக் கொண்டாள். அப்போது நான் பார்த்துக் கொண்டே இருந்தேன் — சீதாவை அல்ல ; சுந்தரத்தை !

கண்களில் துளித்த நீரை அவன் துடைத்து விட்டுக் கொண்டான்.

முதன் முறையாகச் சுந்தரத்தின் மீது எனக்குப் பொறுமை ஏற்பட்டது.

........ ........... .........

மாலை மூன்று மணி. ஜி. டி. எக்ஸ்பிரசுக்குத் தந்தையும் மகளும் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். என் மனத்தில் இருந்ததைக் கொட்டி விட்டேன்.

''எனக்கு மட்டும் ஒரு பிள்ளை இருந்தால் நாம் இருவரும் சம்பந்திகளாகி நம் உறவு இன்னும் வலுப்பட்டிருக்கும்.''

சீதா நாணத்தால் தலை குனிந்தாள். மங்களம் என்னைப் பார்த்தாள். எனக்குள்ள குறை இப்போதுதான் அவளுக்குத் தெரிகிறது.

''நீ அதைச் சொல்லணுமா, ராமு?.... வந்து.... சம்பந்தி என்றதும் நினைவுக்கு வருகிறது. ஏற்கனவே ஓரிடத்தில் வந்து போயிருக்கிறார்கள். முன்னால் அவர்கள் பார்த்த ஒரு வரன்...... ஜாதகம் சரியாவில்லே. பெண்ணும் மாநிறம். பதவிக போறது. ஏதோ பெரிய இடமாம். அழகும் குணமும் இருந்தால் போதும் என்று நினைத்த சமயத்தில் சீதாவைப் பார்த்தார்கள். பிடித்து விட்டது. கலியாணச் செலவை அவர்களே ஏற்றுக் கொள்கிறார்கள். ம்....ம்.... யார் யாருக்கு எங்கெங்கே கொடுப்பினையோ....''

நானும் மங்களமும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறோம்.

எங்களுக்குத் தட்டிப் போன அந்த வரனு?

''ஆமாம், பிள்ளை என்னவாம்?''

''ஐ.ஏ.எஸ். இப்போ அண்டர்செக்ரடரி.''

''பெயர் ?''

''சங்கரன்.''

சந்தேகமே இல்லே !

கொடுப்பினை....

அதைப் பற்றிய என் இருந்திய கருத்துக்குத் தீர்மான முத்திரை வைத்தவன் ஸ்ரீராம்.

அன்று அலுவலகத்தில் என்னைப் பேட்டி காண வந்த அவன் தந்த மனுவைப் பார்த்

தேன். 'சி.வி.ராமனைத் தேடி வந்த புகழ் வரும் காலத்தில் இவனுக்கு வந்து சேரும்' என்ற ஆசிரியரின் நற்சான்றிதழையும் படித்துப் பார்த்தேன்.

''ஏன், வீட்டுக்கு வரவில்லே, ஸ்ரீராம் ?''

''அப்பாதான் சொன்னார், 'நேரே ஆபீசுக்குப் போய்ப் பார், அடையாளம் கண்டு கொள்வார்'னு.''

நான் அவ்வளவு பெரிய மனிதனா? சுந்தரத்துக்கு நான் எப்போதும் ராமுதான் !

அமெரிக்காவில் ரசாயனத் துறையில் ஸ்ரீராம் ஆராய்ச்சி நடத்துவதற்குத் தொழிற்சாலை ஒன்று பொறுப்பு ஏற்றிருக்குது. டாலர் செலவுக்கு அரசாங்க அனுமதி வேண்டும்.

இதுதானா முடியாது?

ஸ்ரீராம் வியப்பு எதுவும் தெரிவிக்காமல், நிதானமாக நன்றி சொன்ன விதம்—அப்பனைப் போல் பிள்ளை !

அறைக் கதவு மூடியதும்....

சிந்தனைக் கதவு திறந்து கொண்டது.

சுந்தரத்தின் குடும்பம்....

வரப் போகிற ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை: அமெரிக்காவுக்குப் பறக்கும் பிள்ளை. பெற்றோர்களுக்கு அடங்கிய பெண். இல்லறத்தைச் செவ்வனே பேணும் பெண்ணரசி.

அடுத்து என் குடும்பம்....

இறந்த புத்தகம்.

மீண்டும் பழைய நினைவுச் சுவட்டில் மனம் சென்றது.

வாழ்க்கை ஏணி.

உச்சாணிப் படியில் நான்.

முதல் படியில் சுந்தரம்.

அவன் என்னை அண்ணாந்து பார்க்கவில்லே. நான் அவனைப் பார்க்கிறேன் — எப்படி ?

தலை குனிந்து!

என் கொடுப்பினை அது !

# பெரிய இடத்துப் பெண்!

'' அடேடே! மணி ஆறு பத்து. இன்னும் நீங்க ஸ்டேஷனுக்குக் கிளம்பலியே?''

'' இதோ, புறப்பட்டாச்சு! நல்ல ஷர்ட்டாகத் தேடி எடுக்கக் கொஞ்சம் டயமா யிடுத்து !''

''டைசென்டாக ரயிலடிக்குப் போக வேண்டாமா? இல்லாதபோனால் வேண்டா வெறுப்பாக வரவேற்பு நடக்கிறது என்று நினைக்க இடம் ஏற்படும்!''

''ஆமா, ஆமா! முன்கோபக்காரர்னு தான் நமக்குத் தெரியுமே!''

''நீ டிபனை யெல்லாம் ரெத்தையாகத் தயாரித்து விடுவாயல்லவா? அதிகபட்சம் இன்னும் ஒரு மணி அவகாசம்தான் இருக்கு.''

''அந்தக் கவலே உங்களுக்கு வேண்டாம் ! கல்யாணத்தின்போதேதான் நீங்கள் கவனித்திருப்பீர்களே! ஸ்பெஷல் ரசத்திலே ஒரு உப்பு ஜாஸ்தியாப் போச்சுன்னு சமையற்காரரை வெளியேற்றணும்னு குதிச்சவராச்சே.''

''அதனாலேதான் இப்போ நான் அதிகம் பயப்படுகிறேன். நீ கொடுக்கும் டிபன் மோசம் என்று சீறி உடனடியாக ஊருக்குத் திரும்பிப் போக நினைக்கக் கூடாதே! தீபாவளி நல்லபடியாக நடக்கணுமே?''

''எல்லாம் சரியாக நடக்கும். நீங்கதான் பார்த்துப் பார்த்துத் துணிமணிகள் சேகரித்து வைத்திருக்கிறீர்களே ?''

''அந்த டெர்ரிலீன் ஷர்ட் பிடிக்குமோ?''

''அப்படியே பிடிக்கவேண்ணுக்கூட அாடு மாதிரி அதைப் போய் மாற்றிக் கொண்டு வருகிறேன் என்று சொல்லாதீர்கள். இதுவும் இருக்கட்டும். பிடித்த மாதிரி இன்னொன்றும் வாங்கித் தருகிறேன் என்று சொல்லுங்கள்.''

''எனக்குப் பாடம் சொல்லித் தருகிறாயாக்கும் ! வர ஆசாமியின் திருப்திதான் நமக்குப் பெரிசு.''



'' ரயில் பிரயாணம் சௌகரியமாக இருந்ததா?''

''மோசமில்லே! அப்பர் பெர்த்துதான் கிடைச்சது.''

''கூட யாரையாவது அழைத்து வரக் கூடாதோ?''

''நான்சென்ஸ்!.... உபத்திரவம்... ஜோராயாக நாம் வரணும், போகணும்.''

''டிபன் ரெடி....நீங்க..''

''நோ.... நான் செங்கல்பட்டிலேயே சாப்பிட்டுட்டேன்......!''

''கொஞ்சமாவது......''

''சொன்னால் சொன்னதுதான்! என்னைப் பிரமாதமாய்த் தீபாவளிக்கு அழைத்தீர்களே ! கௌரவமாகத் தீபாவளியைக் கொண்டாட என்ன ஏற்பாடு செய்தீர்கள்?''

''இதோ..... நீங்களே பாருங்களேன்..!''

''உங்களுக்கு டெர்ரிலீன் ஷர்ட்.....''

''ராட்டன்!.... நான் திட்டட்வெரையிடி தான் உபயோகப்படுத்துவேன்.''

''அதையும் இப்பவே வாங்கி வருகிறேன்.''

''நோ!.... பரவாயில்லே! உங்க தீபாவளி பட்ஜெட் என்ன ஆயிற்று?''

''அறுநூறு ரூபாய் ஆயிற்று....''

''சில்லி!... ஆயிரம் ரூபாய்க்குக் குறைந்து ஒரு தீபாவளி நடத்தலாமா?''

''சாரி!.... நீங்க எது வேணுமோ சொல்லுங்கோ!....மீதிக்கும் வாங்கி வருகிறேன்.''

''நாட் நெஸஸரி! வேண்டாம்....! நான் ஆயிரம் ரூபாய்க்கே ஒரு செக் எழுதிண்டு வந்துட்டேன்! மாப்பிள்ளை! இதைப் பிடியும்! மீதிக்குக் கார்த்திகையின் போது பார்த்துக் கொள்ளுங்கள்! இந்தாம்மா!... கொஞ்சம் காப்பி கொண்டா! என்ன மாப்பிள்ளே! கவலா! அப்படியே திண்ணுட்டேங்க!''

''இல்லேப்பா! நீங்க சந்தோஷமா வந்துட்டுப் போகணுமேன்னு எவ்வளவு கவலேப்பட்டோம் தெரியுமா?'' —'மேஜு'



எங்கள் ஊரில் பெரிய கடை வீதியின் மேற்கு மூலையில் தெற்கே பார்த்தவாறு பல்லை இளித்துக் கொண்டு நிற்கிறதே, அந்தக் கட்டடத்தில் பதினைந்து ஆண்டுகளாகத் துடி நடை போட்டு வளர்ந்து வந்த "தமிழ் வளர்ச்சிக் கழக"த்தை இனிமேல் யாரும் அங்கே போய் அநாவசியமாகத் தேட வேண்டாம். கழகம் அங்கே இல்லை... கழகம் அங்கே இல்லை என்றால் அதன் புதிய முகவரி வேண்டுமோ? கண்ணைமூடிதான். கழகமே இப்போது இல்லை ஐயா!

இந்தச் சுதந்திர தினத்தின் போது நீங்கள் கழகத்தின் கொண்டாட்டத்துக்கு வரவில்லை போல் இருக்கிறது. பாவம், நீங்கள் கொடுத்து வைக்காதவர். நீங்கள் மட்டும்தானா? அன்று கழகம் கடைசியாகக் காட்டிய அற்புதமான விளையாட்டுக்களைக் காணாதவர்கள் எல்லாருமே கொடுத்து வைக்காதவர்கள்தாம். எங்கள் ஊரின் வரலாற்றிலேயே — அந்தக் கழகத்தின் வரலாற்றிலேயோ — ஒரே நாளில், ஒரே நிகழ்ச்சியில் இத்தனை வேடிக்கைகள் நடந்தேறியதில்லை. லாரல்—ஹார்டி படம் ஒன்றைப் பார்ப்பது போல் அவ்வளவு பிரமாதமாயிருந்தது சுதந்திர தின விழா.



அன்று நடந்த நாடகத்தில் கழகத்தின் கூட்டுக் காரியதரிசிகளான ராமதுரையும் வைத்தியும்தான் வில்லன்கள். சிறு வயதிலேயே அரசியலில் புகுந்து, சடசடவென்று மேலே சென்று, பெரிய பெரிய பதவிகளெல்லாம் வகித்து விட்டு, இன்று ஒரு பெரிய ராஜ்யத்தின் அரசியல் வாழ்வுக்கே நடுநாயகமாக விளங்கும் தனிப் பெருந் தலைவரான "தியாகி" கடலைமுத்துதான் அன்றைய "ஹீரோ".

இந்த ராமதுரையும் வைத்தியும் அன்று காட்டிய பித்துக்குளித்தனத்துக்கு இருவரையும் அப்பீலுக்கு இடமில்லாமல் நாடு கடத்தி விடலாம். அவர்கள் செல்லும் வெளிநாட்டுக்கு எவ்வளவு ஆபத்து வேண்டுமானாலும் வரட்டும்; இங்கே அவர்கள் இருப்பது நம் நாட்டின் முன்னேற்றத்துக்கு நல்லதில்லை!

சுதந்திர தின விழாவுக்குத் தியாகி கடலைமுத்துவை அழைத்ததே தவறு என்று நான் சொல்லுவேன். தியாகிக்கு முன்கோபம் ஜாஸ்தி என்பதோடு கூட வளர்ச்சிக் கழகம் போன்ற சிறு சங்கம் ஒன்றில் கொடியேற்று விழா நடத்தித் தமது மதிப்பைக் குறைத்துக் கொள்வதையும் அவர் விரும்பாதவர். அப்படியிருந்தும் எங்கள் ஊருக்குத் தனியார் தொழிற்சாலை ஒன்றைத் தொடங்கி வைப்பதற்காக வந்திருந்த அவர் இந்தக் கொடியேற்று விழாவுக்குச் சம்மதிப்பதற்கு, கூட்டுக் காரியதரிசிகள் இருவரும் எப்படியோ மூன்றாம் மனிதர் ஒருவர் மூலம் ஏற்பாடு செய்து விட்டார்கள். தியாகி வந்து கலந்து கொள்வது எங்கள் ஊருக்கே பெருமை; கழகத்துக்கோ கேட்கவே வேண்டாம். பரபரப்புக்கும், பதற்றத்துக்கும் பெயர் போன கூட்டுக் காரியதரிசிகள் பத்து நாட்களுக்கு முன்பிருந்தே அர்த்தமில்லாமல் அங்குமிங்கும் ஓடியவண்ணம் இருந்தார்கள்.

காலை ஒன்பது மணிக்குக் கொடியேற்று விழா. ராமதுரையும் வைத்தியும் நாலு மணிக்கே எழுந்திருந்து ஒரு வரம்பில்லாமல் பரபரப்பைக் கிளப்பி விட்டுக் கொண்டபின், நேராகக் கழகத்துக்கு ஓடி வந்து, "டங்" என்று மோதிக் கொண்டார்கள். குழி தோண்டி, கொடிக் கம்பத்தை நட்டு, சுருட்டிய கொடியுடன் அதைத் தயாராக



# கொடி பறந்தது!

பூர்ணம் விசுவநாதன்

வைப்பதெல்லாம் இவர்கள்தானே செய்ய வேண்டியிருக்கிறது !

கழகக் கட்டடத்துக்கு எதிரே குழி தோண்டிக் கம்பத்தை நட்டு முடிக்கும் 'திமுஸ்' போட்டுக் கெட்டித்த பிறகுதான் கம்பத்தின் உச்சியிலிருந்த கொக்கியில், சுருட்டிய மூவர்ணக் கொடியைத் தொற்ற வைத்தாற்போல் கயிற்றும் இணைக்க வில்லை என்பது தெரிந்தது. கம்பத்தைக் குழியிலிருந்து கல்லியெடுக்க மனமில்லாத ராமதுரை, பக்கத்து மரமொன்றில் ஏறி அங்கிருந்து கொடிக் கயிற்றைக் கம்பத்தின் உச்சிக்கு வீசிப் பார்த்தான், மீன் பிடிப்பது போல். அது பலிக்காமல் போகவே கம்பத்தைக் குழியிலிருந்து எடுத்து, கொடிக் கயிற்றைக் கொக்கியில் மாட்டிவிட்டு, மறுபடியும் கம்பத்தை உறுதியாய் நிறுத்தினார்கள். பிறகு ஜமக்காளங்கள் விரிப்பது முதல், வருகிறவர்கள் குடிப்பதற்கு ஒரு பெரிய பானையில் தண்ணீர் பிடித்து வைப்பது வரையில் எல்லாமே அவர்களே செய்தார்கள். நேரமும் சரியாயிருந்தது.

தியாகி கடலூருந்து காரில் வந்து இறங்கிய போது உண்மையாகவே மலைத்துப் போய் விட்டார்; அவ்வளவு பெரிய கூட்டம் கூடியிருந்தது கொடியேற்று விழாவுக்கு. தூய வெள்ளை உடையில், வட இந்திய பாணியில் கோட்டும் சூரிதார் பைஜாமாவும் அணிந்து அவர் வந்திறங்கிய போது, ராமதுரையும் வைத்தியும் எங்கேயோ தள்ளி நின்று கொண்டு, அன்றைய நிகழ்ச்சியை வெற்றிச் சிறப்போடு நடத்தி முடிக்க வேண்டிய பொறுப்பை முகத்தில் தாங்கி, ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள் பரபரப்புடன். கார் வந்து நின்ற சத்தம் கேட்டுத் திரும்பிய இருவரும், தியாகியைப் பார்த்துவிட்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தோடி வந்தார்கள். இருவரும் வேகத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் தியாகிமேல் மோதி விழப் பார்த்தார்கள்; நல்ல வேளை, அவர்கள் வருவதைச் சரியான சமயத்தில் கவனித்து விட்ட தியாகி ஆயத்தமாக நின்று இருவரையும் அணைத்துப் பிடித்துச் சமாளித்துக் கொண்டார்.

அசட்டுச் சிரிப்புச் சிரித்த ராமதுரையும் வைத்தியும் சட்டென்று 'பிரேக்' போட்டுச் சிரிப்பை நிறுத்தி விட்டு, கூட்டத்துக்கு வெளியே ஒரு மூலையை நோக்கிக் கைக் குட்டையை ஆட்டினார்கள். வைத்தி, காலிப் பயல் மாதிரி ஒரு பெரிய விசில் வேறு அடித்தான். அவ்வளவுதான்; ஊரே கிடுகிடுத்துப் போகும் அளவுக்கு ''டுமீல்'' என்று வேட்டு ஒலித்தது. கூட்டுக் காரியதரிசிகள் இருவரையும் தவிர பாக்கி எல்லாரும் கிட்டத்தட்ட மூன்றடி உயரத்துக்கு எகிறிக் குதித்தார்கள். தியாகி கீழே விழாத குறைதான்; சமாளித்



கலை வளர்ச்சிக் கழகத்தின் கூட்டுக் காரியதரிசிகள் ராமதுரையும் வைத்தியும் சுதந்திர தின வைபவத்தைக் கொண்டாடிய விதமே அலாதி. அவர்களது விபரீதச் செய்கைகளை நுணுக்கமாக உள்ளிப் பார்த்துப் பூர்ணம் விசுவநாதன் தமக்கே உரிய ஹாஸ்ய நடையில் தருகிறார். மனம் விட்டுச் சிரிக்க வைக்கும் சிறப்புச் சிறுகதை இது.

துக் கொண்டார் எப்படியோ! எத்தனை தடவை-என்தான் சமாளிப்பாரோ, பாவம்!

கோயிலில் ஸ்வாமி புறப்பாட்டுக்கு உபயோகப்படும் வேட்டு இந்த நிகழ்ச்சியில் முழங்கினால் புது மாதிரியாக இருக்கும் என்று 'ஐடியா' சொன்னவன் வைத்திதான். ராமதுரை இதை மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டதுடன், இதற்கு ஏற்பாடு செய்வதைக் கடைசி வரை ரகசியமாகவே வைத்திருக்க வேண்டும் என்று வற்புறுத்தினான். கமிட்டி உறுப்பினர்களும் சேர்ந்து துள்ளிக் குதித்ததற்கு இதுவேதான் காரணம்.

தியாகிக்கு முகத்தில் அசடு வழிந்தது. ''இதெல்லாம் என்ன ஆர்ப்பாட்டம்?'' என்று சற்றுக் கடுமையாகவே கேட்டார். உடனே கூட்டுக் காரியதரிசிகள் இருவரும் அசட்டுச் சிரிப்புடன், ''ஹி.... ஒரு புது மாதிரி ஐடியா!.... அதுவும் நீங்கள் முதல் தடவையாக எங்கள் கழகத்துக்கு வருவதால்......'' என்று இழுத்தார்கள். தியாகி வெடுக்கென்று ''சேச்சே, ரொம்ப மோசம்'' என்று கருத்து வெளியிட்டுவிட்டு, கொடிக் கம்பத்தை நோக்கி நடந்தார். கமிட்டி உறுப்பினர்களின் முகத்தில் வெற்றிக் குறி பரவியிருந்தது. பொருளாளர் சபாபதி, கூட்டுச் செயலாளர்கள் இருவரையும் எரித்து விடுவது போல் பார்த்தான். ''பாவிப் பயல்களா, இதற்கெல்லாம் கழகம் பணம் தரும் என்று கனவு காண வேண்டாம்'' என்ற எச்சரிக்கை அந்தப் பார்வையில் தொக்கியிருந்தது. ராமதுரையும் வைத்தியும் அவன் பார்வையின் வழியிலிருந்து விலகி விலகிச் சென்றார்கள்.

பலபேருடைய பாதங்களை மிதித்து நகட்டிக்கொண்டும், வேறு பலரை இடித்துத் தள்ளிக்கொண்டும் கூட்டுக் காரியதரிசிகள் வழி காட்ட, தியாகி கொடிக் கம்பத்தை அடைந்தார். கூட்டத்தில் நின்று கொண்டிருந்த ஒருவர் அருகிலிருந்த நண்பரிடம், ''இப்படி வேட்டுப் போட்டு வரவேற்பது ரொம்ப ரொம்ப 'ஒரிஜினலான' ஏற்பாடு'' என்று பாராட்டினார். அதை மிக ஜாக்கிரதையாகக் காதில் வாங்கிக்கொண்ட ராமதுரையும் வைத்தியும் ஒருவரையொருவர் பார்த்துத் தலையாட்டி வெற்றிப் பெருமிதத்துடன் சிரித்துக் கொண்டார்கள். தன்னடக்கம் காரணமாக, இருவருக்கும் வியர்த்துக் கொட்டியது.

இது ஒன்றுதானா ஒரிஜினல்? கோமாளிப் பயல்கள் இன்னும் எத்தனையோ காரியங்கள் மிகவும் ஒரிஜினலாகத்தான் செய்தார்கள்.

ஒன்பது மணி அடிக்க இன்னும் பத்து நிமிஷங்கள் இருந்தன. தியாகிக்கு இது வேண்டாத வம்புதானே? பத்து நிமிஷங்கள் அவர் முன் கூட்டி வந்ததற்காக நிறைய அனுபவித்தார் பாவம்!

கொடிக் கம்பத்தின் கீழே அவர் போய் நின்றவுடன், சற்றுத் தொலைவில் காத்திருந்த நாலைந்து அப்பாவிப் பெண்கள், சிக்னலை எதிர்பாராமல் இறைவணக்கம் பாட ஆரம்பித்தார்கள். எல்லோரும் 'அட்டென்ஷ'னில் நிற்பதற்குள் ராமதுரை பாய்ந்து சென்று பாட்டை நிறுத்தி விட்டான். வியப்புடன் திரும்பிப் பார்த்த தியாகிக்கு வைத்தி விஷயத்தை விளக்கினான். அரசியல்வாதியான தியாகிக்கு அந்த விளக்கம் ஒரு கொள்கையறிக்கை மாதிரி தொனித்தது. ''இதுவரை கழகத்தில் எல்லாமே குறித்த நேரத்துக்கு முன்போ பின்போதான் நிகழ்ந்திருக்கிறது. புதிய நிர்வாகத்தில் இந்த நிலைமையை மாற்றியமைப்பதென்று உறுதியாயிருக்கிறோம். இன்றைய நிகழ்ச்சி டாண் என்று சரியாக ஒன்பது மணிக்குத்தான் ஆரம்பமாக வேண்டும். அதனால்தான்....ஹிஹி... ராமதுரை...'' என்று இளித்தான் வைத்தி.

ராமதுரை கமிட்டி உறுப்பினர்களின் அக்னிப் பார்வையில் சிக்காமல் நெளிந்து நெளிந்தே தியாகியின் பக்கம் திரும்பி வந்து விட்டான். ''கரெக்டாக ஒன்பது மணிக்கு ஆரம்பிக்கலாம். அதுவரை உட்காரலாமே!'' என்று தியாகிக்குத் தரைக் கம்பளத்தைக் காட்டினான். தியாகியுடன் இந்தக் கொஞ்ச நேரத்தில் பத்து வார்த்தைகள் சாதுரியமாகப் பேசி அவருடைய நம்பிக்கையைச் சம்பாதித்துவிட வேண்டுமென்று ராமதுரை திட்டமிட்டான். தியாகி, தமது மனதில் பயங்கரமாக உருவாகிக் கொண்டிருந்த கலவரத்தைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டே ''அதற்கென்ன'' என்று சிரித்தவாறே உட்கார்ந்தார். அந்தச் சிரிப்பு சப்பென்றிருந்தது. கூடிநின்றவர்களும் அங்கங்கே உட்கார்ந்து கொண்டார்கள்.

ஜமுக்காளங்களுக்கு நடுவே கொடிக் கம்பத்தை ஒட்டினாற்போல் விரிக்கப்பட்டிருந்த ரத்தினக் கம்பளம் தியாகிக்காக ராமதுரை கொண்டு வந்து போட்டது. பலபேர்கள் நடந்து நடந்து அதில் மண்ணேறியிருந்தது. தியாகி மண்ணைப் பொருட்படுத்தாமல் உட்கார்ந்தார். தலைவரல்லவா? அதுவும் தியாகியாயிற்றே! அது வைத்தியின் கண்ணில் படாமல் இருக்குமா? சட்டென்று பாய்ந்தவன், தியாகி உட்கார்ந்து விட்டதைப் பார்த்தாவது சும்மா இருக்கக் கூடாதா? ஆனால் அவனுடைய பதற்றம் அவனைச் சும்மா விடுவதாயில்லை. கண் மூடிக் கண் திறப்பதற்குள் கம்பளத்தின் முன் பகுதியைத் தூக்கிப் படபடவென்று உதறிவிட்டான். வைத்திக்கு என்னத்தையெல்லாமோ கொடுக்க மறந்து விட்ட கடவுள், நல்ல உடல் வலிமையை மட்டும் அள்ளிக் கொடுத்திருந்தார். ஜோடியில் ஹார்டி அவன்தான். அவன் உதறின

உதறலில் தியாகி பின்பக்கம் மடங்கி விழ ஆரம்பித்துவிட்டார். நல்லவேளை, ராமதுரை சரியான சமயத்தில் கையை 'அண்டைக் கொடுத்து'த் தியாகியின் மண்டை தரையுடன் உறவாடாமல் தடுத்து விட்டான். ஆனால் ராமதுரை தியாகியை நிமிர்த்துவதற்கும், வைத்தி உதறினதால் கம்பளத்திலிருந்து கிளம்பிய புழுதி தியாகியின் முகத்திலும், உடையிலும் விசிறியடிப்பதற்கும் சரியாக இருந்தது. இரண்டு விநாடிகளில் எல்லாம் நடந்து முடிந்து தூசியும் அடங்கிவிட்டது. தூரத்திலிருந்து பார்த்தவர்களுக்குப் புழுதியை ஏந்திக் கொள்வதற்காகவே ராமதுரை தியாகியை நிமிர்த்திப் பிடித்துக் கொண்டிருந்தது போலத் தோன்றியது. அவரும் சரியான சமயத்தில் கண்களை மூடிக்கொண்டு விட்டார்.

உண்மையில் தியாகிக்கு அப்போதுதான் கண் திறந்தது என்று சொல்ல வேண்டும். தவறான இடத்துக்கு வந்து எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டு விட்டோம் என்று அப்போதுதான் அவருக்குத் தெரிந்தது. தத்துப்பித்தென்று நடந்துகொள்ளும் இரு அசடுகளின் நிர்வாகத்தில் உள்ள ஒரு கழகத்துக்கு 'வருகை புரிய' ஒப்புக்கொண்டதற்காகத் தம்மைத் தாமே சபித்துக்கொண்டார். வந்த ஆத்திரத்தில் அவர் வாயெல்லாம் உலர்ந்து போயிற்று. ஆனால் அவர் வாயை மூடிக் கொண்டிருக்கக் கூடாதா? ''கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள்'' என்று கேட்டுவிட்டார். தொண்டையை நனைத்துக் கொண்டுவிட்டு அந்த இரண்டு கோமாளிகளையும் பார்த்து ஒரு கத்தல் போட விரும்பினார் அவர்.

அவ்வளவுதான்; ஹார்பி வைத்தி, கூட்டத்தைத் தாறுமாறாகப் பிளந்து கொண்டு பல பேர்களுடைய நாடிகளில் குதிகாலால் உதைத்துக் கொண்டு, ஊன்றியிருந்த பல உள்ளங் கைகளைப் படக் படக்கென்று கடக்கெடுக்கும் அளவுக்கு அழுத்தமாக மிதித்துக் கொண்டு தண்ணீர்ப் பானையை நோக்கிப் பாய்ந்தான். தண்ணீர்ப் பானைதான் குறிக்கோள் என்று முன்னேறுகிறவனுக்குக் கூட்டம் ஒரு பொருட்டாகத் தோன்றுமா?

பானைக்கருகே ஒரு கட்டை மேல் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த இரு டம்ளர்களிலும் தண்ணீரை மொண்டு கொண்டான் வைத்தி. ''வழி! வழி!'' என்று கத்தியவாறு மறுபடியும் கூட்டத்தைப் பல கூறுகளாகப் பிளந்து கொண்டு தியாகியை நோக்கித் தாவினான். அப்படித் தாவும்போது வழியில் பலரது உச்சி மண்டையிலும் மூக்கு நுனியிலும் சட்டையின் முதுகுப்பக்கத்திலும் தண்ணீர் வழிந்தது. அதை ஏந்திக் கொள்கிறவர்களின் முகங்களில் அசடும் வழிந்தது.

இவ்வாறாக, வைத்தி தியாகியை மறுபடியும் நெருங்கியபோது டம்ளர்களில் பாதியளவுதான் தண்ணீர் இருந்தது. இரண்டையும் கூட்டினால்தான் முழு டம்ளராகும். இந்தக் கணக்கு வைத்திக்குத் தெரியாமல் போகுமா? ராமதுரை ஒரு பக்கம் பதற்றத்துடன் நின்று கொண்டிருக்க, தியாகி மனத்துக்குள் தமக்குத் தாமே ஏதோ ஆறுதல் கூறியவாறு தரையைப் பார்த்துக் கொண்டிருந்தார். வைத்தி அருகில் வந்தது தெரிந்தவுடன், நிமிராமலே தண்ணீருக்காகக் கையை நீட்டினார். அதற்குள் வைத்தி ஒரு டம்ளரிலிருந்து மற்ற டம்ளருக்கு 'டோர்ர்' என்று தண்ணீரை மாற்ற ஆரம்பித்தான். தியாகியின் கை உயருவதைப் பார்த்துவிட்டு விரைவாகத்தான் ஊற்றினான். ஆனால் ஊற்றும் சத்தத்தைக் கேட்ட தியாகி, மூட்டு விட்டுப் போனமாதிரி படக்கென்று கையைக் கீழே போட்டுவிட்டார். (ஐயோ, அடுத்த கணம் என்ன நடக்கும் என்பதை யாராலும் ஊகிக்க முடியவில்லையே, இது என்ன உலகம்!) தியாகியின் கை கீழே சென்றதை வைத்தி கவனிக்கவொட்டாமல், அந்தச் சமயம் பார்த்து அவரை ராமதுரை அடித் தொண்டையில் அழைக்கவே, வைத்தி ராமதுரையின் பக்கம் திரும்பிக் கொண்டே தண்ணீர் நிறைந்த டம்ளரைத் தியாகியின் உயர்த்திய கை இருந்த இலக்கு வரையில் கொண்டு வந்து, தியாகி அதைப் பிடித்துக்கொண்டுவிட்டதாக நினைத்துத் தன் பிடியை விட்டுவிட்டான்! தண்ணீருடன் டம்ளர் கம்பளத்தில் பொத்தென்று விழுந்து கவிழ்ந்தது. இப்போதும் தியாகி அசாதாரணத் துடிப்புடன் துள்ளியெழுந்து வெள்ளப் பெருக்கிலிருந்து தப்பினார். ஆயினும் தண்ணீர் விழுந்த வேகத்தில் தலைவர் முகத்திலும் உடையிலும் தண்ணீர் சற்றுத் தாராளமாகவே தெறித்துவிட்டது. கூட்டத்தினர் சிரிப்பை அடக்கிக் கொண்டார்கள். டம்ளர் உடையாமற் போனது ஆச்சரியம்தான்.

ஓரத்தில் நின்றிருந்த ராமதுரைக்குக் கோதாவில் இறங்கித் தனக்கு நற்பெயர் சம்பாதித்துக் கொள்வதற்கு இப்போது சந்தர்ப்பம் வந்து விட்டது. வைத்தியை எரித்து விடுவது போல் ஒரு பார்வை பார்த்துவிட்டு விரைந்து வந்து தன் கைக்குட்டையால் தியாகியின் முகத்தையும், உடையையும் துடைத்தான் ''ரொம்ப ரொம்ப மன்னிக்க வேணும்'' என்று சொல்லிவிட்டு, அவன், கம்பளத்தில் புரண்டுகொண்டிருந்த டம்ளரை எடுத்துக் கொண்டு, யாரும் தடுக்கு முன், பானையை நோக்கிப் படையெடுத்தான். ''தியாகியின் தாகத்தைத் தணித்துவிட்டுத்தான் மறுவேலை!'' என்று வழியில் உட்கார்ந்திருந்தவர்களையெல்லாம் துவம்சம் செய்துகொண்டு ராமதுரை தண்ணீர்ப் பானையை நெருங்கிவிட்டான். ஆனால் ஏதோ கணக்குப் பிசகாகக் காலடி எடுத்து வைத்ததில் அவனது வலது கால் இடது காலில் தடுக்கிவிடவே, மணிக்கு நூறு மைல் வேகத்தில் மண் பானை மேலேயே போய் விழுந்தான். தான் விழுந்த வேகத்திலேயே புரண்டுவிட்டதால் ராமதுரை அதிகமாக நனையவில்லை. ஆனால் பானை நாலு பாளமாக உடைந்து விழுந்து தண்ணீர்ப் பெருக்கெடுத்தது. கூட்டம் எழுந்து நின்றது. தண்ணீர் ஜமுக்காளங்களை நனைத்துக் கொண்டு மண்ணுக்குள் பாய்ந்ததே ஒழிய முன்னைவிட அதிகமாய்க் காய்ந்து கவறிப்போன தியாகியின் வாய்க்கு ஒரு சொட்டுக் கூடக் கிடைக்கவில்லை.

புரண்ட ராமதுரை ஒரே துள்ளலாகத் துள்ளி எழுந்து அசட்டுச் சிரிப்புடன் மண்ணைத் தட்டிக் கொண்டே தியாகியைப்

நீங்கள் இணைப்பை
பொருத்த வேண்டிய இடம் இங்குதான்

**நீங்கள்
தேர்ந்தெடுக்கக்கூடிய
இசைத்தட்டுகளாவன**

பிரபலமான 78 ஆர். பி. எம். இசைத்தட்டுகளும், அதிக நேரம் இயங்கக்கூடிய இரண்டுவித நவீன பிளாஸ்டிக் இசைத்தட்டுகளும்— அதாவது சுமார் 12 நிமிடங்கள் இயங்கக்கூடிய எக்ஸ்டென்டட் பிளே இசைத்தட்டுகளும், சுமார் 50 நிமிடங்கள் இயங்கும் லாங் பிளே இசைத்தட்டுகளுமாகும்.

# உங்களுக்கு ரேடியோகிராம் வசதி 170* ரூபாய் செலவு செய்தால் கிடைத்துவிடும்

எச். எம். வியின் 4-ஸ்பீட் 'ஸ்டார்' ரிகார்டு பிளேயரின் இணைப்பு உங்கள் ரேடியோவை ரேடியோகிராமாக மாற்றும். உங்களுக்கு பிடித்தமான இசை உலகை உருவாக்கும் இசைத்தட்டுகளையும் ரேடியோகிராமையும் நீங்கள் எப்பொழுதும் விரும்பியிருப்பீர்கள்.

ஏன் 170 ரூபாய் மட்டுமே செலவு செய்து உங்கள் ரேடியோவை ரேடியோ கிராமாக மாற்றக்கூடாது.

மேலும் ஏ.ஸி. மெயினுக்கு ஸ்டார்-4 ஸ்பீட் ரிகார்டு பிளேயரும் கிடைக்கும்




**ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்**

மாடல் 5661 பாட்டரி
* ரூ. 169.60
மாடல் 5161 ஏஸி
* ரூ. 193.00
(எக்சைஸ் வரி சேர்ந்தது)
மற்ற வரிகள் தனி



**சுவைபட ரொட்டி மீது தடவ உகந்தது அமுல் வெண்ணெய்**






அமுல் வெண்ணெய் தடவிய ரொட்டி, ஸாண்ட்விச்! ஆஹா, தெள்புதரும் சுவையோடு உங்கள் குடும்பத்தினருக்குச் சூரிய ஒளி வைட்டமின்களான ஏ, டி இரண்டின் நன்மைகளையும் வழங்குவதற்கு அதுவே வழி. ஏடு திரண்ட தூய்மையான புத்தம்புது அமுல் வெண்ணெய்: கடைந்தெடுத்த பண்ணைப் புதுமையோடு ஐந்தே மணி நேரத்தில் பால் பாண்டத்திலிருந்து வெண்ணெய் பொட்டணத்திற்கு மாறிப் பொன் மஞ்சள் நிற வில்லைகளாகப் புதுமை குன்றாமல் வருகிறது உங்கள் கைக்கு.

பண்ணைப் புதுமை மாறாத
சுத்தமான பாஸ்டூரை...

# அமுல் வெண்ணெய்

அமுல் உங்கள் உணவுக்கு மதிப்பிட முடியாத உபரியான போஷாக்கின் பலனை யளிக்கிறது.

கெய்ரா கோ - ஆப் தயாரிப்பு: விலைமதிப்பற்றது.

கெய்ரா டிஸ்டிரிக்ட் கோ-ஆப் மில்க் ப்ரொடியூஸர்ஸ் யூனியன் லிட். ஆனந்த்.



பார்த்தான். அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. தியாகி சிரித்துக்கொண்டிருந்தார். ''தியாகி பார்ப்பதற்குக் கடுந்தமாக இருந்தாலும் ரசிகர்தான்'' என்று எண்ணியவாறு துணிச்சலுடன் கொடிக் கம்பப் பிராந்தியத்துக்குத் திரும்பினன். அப்போதுதான் ராமதுரைக்கு, தியாகி வில்லன் சிரிப்பு சிரித்துக் கொண்டிருந்தது தெரிந்தது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு ''ஹிஹி....தண்ணீர்... பானே'' என்று தந்தி மொழியில் தகவல் கொடுத்தான். தியாகி அதைவிட ரத்தினச் சுருக்கமாக,'' இப்போது எனக்குத் தண்ணீர் கிடையாது; அவ்வளவுதானே? விடு பேச்சை'' என்று ஒரு வறட்டுச் சிரிப்புச் சிரித்தார். அந்தச் சிரிப்பின் அடையாளமாக வெளியே தெரிந்த பல் வரிசைகள் இரண்டும் நறநற வென்று ஓசைப்படுத்தின.

ராமதுரையும் வைத்தியும் துடியாய்த் துடித்தார்கள். பதற்றத்துக்குப் பெயர் போன இருவருக்கும் பிழை செய்வது என்பது ஒரு பொழுதுபோக்கு. இருந்தாலும் இப்போது தியாகி விஷயத்தில் நடந்துவிட்ட சிறு சிறு பிழைகளுக்கு எப்படியாவது ஈடு செய்துவிட வேண்டும் என்பதாக மெய்யாகவே விரும்பினர்கள். அந்தச் சமயத்தில் ஓர் அருமையான வாய்ப்பு அவர்களை எதிர் கொண்டழைத்தது. சுதந்திர தின நிகழ்ச்சிக்கு வந்தவர்களை உபசரிப்பதற்காக எல்லோருக்கும் பன்னீர் தெளித்துச் சந்தனம் வழங்கிவிட்டு, கழகத்தின் 'தொண்டர்கள்' இருவர்கள் கொடிக் கம்பத்தை நோக்கித் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். தியாகிக்குப் பன்னீர் தெளித்துச் சந்தனம் கொடுக்கவில்லை என்பது பதற்றப் பயல்கள் இருவருக்கும் சேர்ந்தாற்போல் நினைவுக்கு வரவே, இருவரும் ஒரே தாவாகத் தாவித் தொண்டர்களிடமிருந்து பன்னீரையும், சந்தனத்தையும் வாங்கிக் கொண்டார்கள்.

ராமதுரைக்குப் பன்னீர்ச் செம்புதான் கிடைத்தது. வைத்திக்குத்தான் சந்தனக் கிண்ணமும்,தாம் பாளமும் கிட்டின. அத்தனை உயரமான சந்தனக் கிண்ணம்,- நம் பழம் பெரும் பாரத நாடு முழுதும் அது ஒன்றுதான் இருக்கிறது போலும்! குறுகிய பாதமும், கொக்காளி உடலும், ராட்சச மண்டையும் கொண்ட கிண்ணம் அது. சமதளத்தில் வைத்தாலும் சாய்ந்து நிற்கக்கூடிய அந்தக் கிண்ணத்தை மேடு பள்ளமான தாம்பாளம் ஒன்றில் வைக்கலாமா? வைத்தி இந்த விமரிசையோடுதான், ஸ்பூன் எலுமிச்சம் பழம் போட்டியில் கலந்து கொண்டவன் போல் தியாகியைப் பார்த்து நடந்தான். கூட்டம் நடுங்கியது. ஆனல் ராமதுரை வைத்திக்கும் முன்னல் தியாகியை நெருங்கி அவர்மேல் பன்னீர் தெளிக்க ஆரம்பித்தான்.

நல்ல உயர்தரமான பன்னீர். தியாகியின் சூடேறியிருந்த மனத்துக்கும் உடலுக்கும் அது இதமாயிருந்தது. நடுநடுவே அவர் சங்கோசத்தில் நாக்கை நீட்டியபோது பன்னீர் நாக்கிலும் பட்டது. கொப்பளிக்கப் பன்னீர் கிடைக்காவிட்டாலும் இரண்டொரு சொட்டுக்களை விழுங்கவாவது முடிந்தது. தியாகியின் மனம் குளிர்வதைக் குறிப்பாக அறிந்து கொண்டுவிட்ட ராமதுரை பன்னீரைத் தெளித்துக் கொண்டே யிருந்தான். காலம் முடியும்வரை இந்தக் காட்சி நீடித்திருக்கும். ஆனல் தியாகிக்கே இந்தப் பன்னீர் அபிஷேகம் அலுத்துப் போய்விட்டது. ''போதும் போதும்'' என்று சொல்லிக் கொண்டே இரு கைகளையும் உயர்த்தினர். கரெக்டாக அந்தச் சமயத்தில்தான் வைத்தி அல்லாடும் சந்தனக் கும்பாவுடன் அவரெதிரே வந்து நின்றுன். தியாகியின் கைகள் தாம்பாளத்தைத் தட்டிவிட சந்தனக் கும்பா தியாகிக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வது போல் முன்னேக்கிக் கவிழ்ந்தது. தூய வெள்ளை நிறத்தில் தியாகி அணிந்திருந்த ஷெர்வானிக் கோட்டில், சந்தனம் படர்ந்தது. தாம்பாளத்தின் விளிம்பில் சற்றே தயங்கிய சந்தனக் கும்பா திடீரென்று நீச்சல் நிபுணன் மாதிரி ஒரு பல்டியடித்து, மிஞ்சியிருந்த சந்தனத்தைக் கோட்டில் அள்ளி வீசி விட்டுக் கீழே கவிழ்ந்தது. கூட்டம் 'ஐயையோ' என்று கத்தியது.

தியாகி கட்டெழுந்து மானசீகமாக மண்டையில் ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டார்! அவரிடம் இரண்டு ஷெர்வானிக் கோட்டுகள் உண்டு. ஒன்று தூய வெள்ளை, மற்றது நல்ல சந்தனக் கலர். அன்று கழகத்துக்குப் புறப்பட்டபோது முதலில் சந்தன நிறக் கோட்டை அணிந்துகொண்டவர்தான், பிறகு மனத்தை








மாற்றிக் கொண்டு வெள்ளைக் கோட்டுடன் வந்து விட்டார். ''சந்தன நிறக் கோட்டில் சந்தனம் கொட்டினால் இவ்வளவு பளிச் சென்று தெரியாதே! ஈசனே! வெள்ளைக் கோட்டில் சந்தனக் கறையுடன் நிற்க வேண்டிய சனநிலை வந்துவிட்டதே!'' என்று புலம்புகிறார். அன்றைக்குத்தான் எவ்வளவு கூட்டம், இதை வேடிக்கை பார்க்க!

வைத்தியோடு ராமதுரையும் சேர்ந்து துடித்தான். கோட்டிலிருந்து சந்தனக் கறையை வெறுங் கையால் துடைப்பதற்கு இருவரும் முன்வந்தபோது தியாகி அவர்களுடைய குட்டைக் கைகளை உதறி எறிந்து விட்டு, தமது கைக்குட்டையாலேயே முடிந்தமட்டும் துடைத்துக் கொண்டார். இப்போது அவர் மனத்தில் ஓர் உறுதி பிறந்து விட்டது. மூவர்ணக் கொடியைப் பறக்க விடு முன் அவர் நிகழ்த்தப் போகும் உரை அவரது அரசியல் வாழ்க்கையிலேயே மிக மிக ஆவேசமான பேருரையாக இருக்கப் போகிறது. கழகத்தையும், கமிட்டியையும் காரியதரிசிகளையும் பேச்சாலேயே பிய்த்து வாங்கி உருத் தெரியாமல் அடித்துவிடுவதென்று நிர்மானித்துவிட்டார். இந்த முடிவுடன் அவர் கூட்டுக் காரியதரிசிகளைப் பார்த்த போது அவருடைய பற்கள் விளைவித்த ஓசை பெரும் பெரும் பாறைகள் நொறுங்குவதை நினைவுபடுத்தின. கூட்டுக் காரியதரிசிகள் நடுங்கினார்கள்.

(ஒரு முக்கிய அறிவிப்பு: இந்த நாடகத்தில் 'க்ளைமாக்ஸ் ஸீன்' இனிமேல்தான் வரப் போகிறது; தயாராயிருங்கள்.)

ராமதுரை தியாகியின் பார்வையிலிருந்து தப்பி, கூட்டத்தின் முதல் நாலு வரிசைகளுக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த பெண்களிடம் சென்று ஜாடை காட்டினான். உடனே அவர்கள் அங்கிருந்தவாறே இறை வணக்கம் பாடினார்கள். கடவுள் கிருபையால் இந்தத் தடவை இறைவனுக்குத் தடையில்லாமல் வணக்கம் கிடைத்தது. கூட்டத்தின் நடுநாயகமாகத் தியாகி கடலைமூத்து, கோட்டில் மானுவாரியாகச் சந்தனத்தைப் பூசிக் கொண்டு நின்றது பரிதாபமாக இருந்தது. என்ன செய்வது? இறை வணக்கம் முடிந்ததும் கொடியேற்றம். இரண்டுக்கும் நடுவே பேருரை.

''அன்பர்களே!'' என்று தியாகி ஆரம்பித்தார். பத்து நிமிஷங்கள் தொடர்ச்சியாகக் கடும் சோதனைகளுக்கு உள்ளாகியிருந்த காரணத்தாலோ என்னவோ அவருடைய தொண்டை மிகவும் கரகரப்பாகி, குரல் சரியாக வெளிக் கிளம்ப மறுத்தது. கொஞ்சம் கனைத்துக் கொண்டு அவர் மறுபடியும் உரையை ஆரம்பிப்பதற்குள் ராமதுரைக்கு ஒரு சிறு சந்தேகம் வந்துவிட்டது. அருகிலிருந்த வைத்தியிடம் அவன் ஏதோ சொல்லவே, இருவருமாகச் சேர்ந்து குறுக்கிட்டுத் தியாகியின் உரையை நிறுத்திவிட்டார்கள். தியாகி எரிச்சலுடன், ''இப்போது என்ன?'' என்று ஒரு கத்தல் போட்டார். லாரலும், ஹார்டியும் சற்றே திடுக்கிட்டாலும் தியாகியிடம் சென்று அவருடைய காதுகளில் ஆளுக் கொன்றாக ரிசர்வ் செய்துகொண்டு விஷயத்தைச் சொன்னார்கள். ''உரை நிகழ்த்தியவுடன் கொடியைப் பறக்க விடுவதற்கு எந்தக் கயிற்றை எப்படி இழுக்க வேண்டும் என்பதை இப்போதே நீங்கள் தெரிந்து கொண்டுவிட்டால் அப்புறம் தாமதம் இராது. கயிற்றிலும் சிக்கல் விழாது; ஏனென்றால் நாங்கள் கயிற்றை ஒரு புது மாதிரியான 'ஐடியா'வுடன் தொற்ற வைத்திருக்கிறோம்'' என்று விளக்கினார்கள். அதோடு நிற்காமல் இருவருமே கொடிக் கம்பத்துக்குச் சென்று கயிற்றின் இரு பகுதிகளையும் சுட்டிக் காட்டிப் பால் கறப்பது போல் ஜாடை செய்தார்கள். தியாகி அருகில் சென்று குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''எந்தக் கயிற்றை எப்படி இழுக்க வேண்டும் என்பதை வாய் திறந்து சொல்லாமல் ஏன் இப்படி என் கழுத்தை அறுக்கிறீர்கள்?'' என்று எரிந்து விழுந்தார்.

ஹார்டி வைத்திக்கு எதையும் இரண்டுங்கெட்டானாக விட்டு வைக்க இஷ்டமில்லை. தியாகிக்கு எவ்வித சந்தேகமும் இருக்கக் கூடாது என்பதற்காக ஒரு பகுதி கயிற்றைப் பிடித்துக் கொண்டு, ''இந்தக் கயிற்றை இப்படி இழுக்க வேண்டும்'' என்று கூறிப் பளிச்சென்று இழுத்தே காட்டிவிட்டான். உடனே.... ஆஹா! கம்பத்தின் உச்சியில் மூவர்ணக் கொடி ஒரு சிறு சுருக்கம் கூட இல்லாமல் பட்டொளி வீசிப் பறக்க ஆரம்பித்தது. ஜனக் கூட்டம் கரகோஷம் செய்தது. பாடும் பெண்களுக்கு இதுதானே சிக்னல்? கம்பீரமான குரலில் 'ஜன கண மன' பாடத் தொடங்கினார்கள். யாரும் எதுவும் செய்ய முடியவில்லை. தேசிய கீதம் பாடும் போது எல்லோரும் நிமிர்ந்து நிற்பதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்? கூடவே எல்லோரும் அபஸ்வரத்துடன் பாட ஆரம்பித்தாலும் தேசிய கீதத்துடன் நிகழ்ச்சி முடிவடைய வேண்டியதுதானே? ''ஜயஹே, ஜயஹே, ஜயஜயஜய ஜயஹே'' என்று தேசிய கீதம் முடிவடைந்தவுடன் கூட்டம் கரைய ஆரம்பித்தது.

தியாகியின் பேருரை நிகழ்த்தாத பேருரையாகவே போயிற்று. கூட்டுக் காரியதரிசிகளும் கமிட்டி உறுப்பினர்களும் மாற்றி மாற்றிக் காலில் விழுந்தும் தியாகி அவர்களை யெல்லாம் கால் பந்தாடிவிட்டுச் சந்தனக் கறையுடன் கார் ஏறி விட்டார். கார் புறப்படும் போது ''உங்கள் கழகத்தை ஒழித்து விட்டு மறுகாரியம் பார்க்கிறேன்'' என்று கத்தினார். அதுவே அவருடைய பேருரையாகத் திரும்பத் திரும்ப ஒலித்துக் கொண்டு காருடன் சென்று கரைந்தது.

ஊர்ப் பெரிய மனிதர்கள் எல்லோரும் சுதந்திர தின விழாவுக்கு வந்திருந்து எல்லா வேடிக்கைகளையும் நேரில் பார்த்துத் திகைப் படைந்திருந்தாலும் தியாகியின் செல்வாக்கு எங்கள் ஊரில் மிகமிக வன்மையானது என்பதாலும் கலை வளர்ச்சிக் கழகம் அதோடு கலைந்தொழிந்து போயிற்று. ஆனால் இனிமேல் கழகம் எதற்கு? அதன் பதினைந்தாண்டு வாழ்விலேயே மிகச் சிறப்பான நிகழ்ச்சியைத்தான் ராமதுரையும், வைத்தியும் சுதந்திர தினத்தன்று நடத்திக் காட்டி விட்டார்களே!

அதுவும் தவிர கழகம் ஓய்ந்தாலும், இருந்தாலும், வைத்தியும் ராமதுரையும் சேர்ந்தோ தனித்தனியாகவோ நடத்தும் 'பரபரப்பு சர்க்கஸ்'க்கு முடிவு ஏது?

# வட்ட மேஜை

* நீதி பெற வழி
* மரியாதை தேவை

**வீ**ரத்துடன் நம் நாட்டின் எல்லை காக்கும் வீரர்களின் நலனுக்கு எதையும் கொடுக்க வேண்டும் என்ற உன்னத உணர்வு நாட்டு மக்களிடையே தோன்றியுள்ளது. நாளொன்றுக்கு இரண்டு ரூபாய் ஊதியம் பெறும் தொழிலாளர் முதல் செல்வந்தர் வரை எல்லோரும் தங்களால் இயன்ற பொருளுதவி செய்து வருகின்றனர். பதினெட்டு ஆண்டு கால ஆட்சியில் மன நிறைவுள்ள வாழ்க்கை பெற முடியவில்லை என்றாலும், அகவிலை மிகவும் ஏறியிருந்தாலும், அவர்கள் அதனை மறந்து, அந்நாள் சுதந்திரப் படைத் தலைவர்கள் ஆயுதமில்லாப் போரில் வென்று பெற்ற அரும் சுதந்திரத்தை, பாட்டன் டாங்கிகளுக்குப் பயந்து பறி கொடுக்கலாகாது என்ற நினைப்பினால் உந்தப் பெற்றுப் பொருளுதவி செய்கின்றனர். டாடா, பிர்லா போன்ற தொழிலதிபர்கள் கொடுக்கும் லட்சங்களுக்கு என்ன மதிப்போ அதே மதிப்பு இந்த ஏழைத் தொழிலாளர், ஆசிரியர்கள் போன்றோர் கொடுக்கும் ரூபாய் தாளுக்கு உண்டு.

இம்மாதிரி, ஏழை மக்கள் இன்று வாங்க வேண்டிய உப்பு, புளி, மிளகாய், அரிசி போன்ற உணவுப் பொருளை வாங்காமல் அதனைச் சுதந்திரப் பாதுகாப்பு நிதிக்குக் கொடுக்கையில், இன்னும் இரண்டு ஆண்டுகள் கழித்து வாங்க வேண்டிய வோட்டுகளுக்காக வைத்துள்ள பணத்தை அரசியல் கட்சிகள் இந்நிதிக்குக் கொடுக்கலாம். இதனால் பாதிக்கப்படக் கூடியவை எதிர்க் கட்சிகள் தான். ஏனெனில் அவை தாங்கள் இதுவரை எறும்பு உணவு சேகரிப்பதுபோல் சேர்த்துள்ள சில ஆயிரங்களையும் இழந்து நிற்கும். ஆனால் ஆளும் கட்சிக்கு இந்த வேண்டுகோளை நிறைவேற்றுவதால் நஷ்டமில்லை. ஏனெனில் கலெக்டர்களும், ஆர்.டி.ஓ.க்களும், தாசில்தார்களும், ரெவின்யூ இன்ஸ்பெக்டர்களும் எங்கும் ஓடிவிடப் போவதில்லை. அவர்களை மீண்டும் ஏவினால் (எவருக்காவது 64வது பிறந்த தினம் என்று) தேர்தல் நிதியைக் கொண்டு வந்து குவிப்பார்கள்!

மேலும் ரெவின்யூ இலாகாவில் அதிகாரிகள் பட்டாளம் (சிமெண்ட் தாசில்தார், ரவை தாசில்தார், மைதா தாசில்தார், சர்க்கரை தாசில்தார், அரிசி தாசில்தார், தவிடு தாசில்தார் என்று பல வகை) பெருகுவது காங்கிரஸ் தேர்தல் நிதி திரட்டவும், காங்கிரஸ் தலைவர்கள் எவருக்காவது பிறந்த நாள் விழா பண முடிப்பு நிதி திரட்டவும்தானே?

ஆகையால் எவ்விதத் தயக்கமும் இன்றி இவ்வேண்டுகோளுக்குக் காங்கிரஸ் இணங்கி எதிர்க் கட்சிகளை ஓர் இக்கட்டான நிலையில் தள்ளித் திகைக்க வைக்கலாம்! மேலும் ஆளும் கட்சியின் பணம், திரு காமராஜ் அவர்களின் பிறந்த தினப் பணம் (சுமார் ரூ. 88½ லட்சம் ரூபாய், அவர்கள் கணக்குப்படியே) பாட்டாளி மக்களின் வியர்வை அல்ல; பல முதலாளிகளும், பெர்மிட், லைசென்ஸ்தாரர்களும், கண்டிராக்டர்களும் பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்த்து அளித்த கறுப்புப் பணம்தான். அதை இப்போது கொடுத்தால் குடி முழுகி விடாது.

நெருக்கடிக் காலத்தில் சிக்கனத்தைப் பற்றிக் கால் வயிற்றுக் கஞ்சிக்கும் தாளம் போடும் மக்களிடம் உபதேசிப்பதை நிறுத்தி, நெருக்கடி தீரும் வரையிலாவது நினைவுச் சின்னமெழுப்புதல், சிலையெடுத்தல், சாலையின் குறுக்கே போக்குவரத்துக்கு இடையூறாக ரூ. 15000 செலவில் மக்களின் வரிப்பணத்தில் நினைவு வளைவு எழுப்புதல் போன்ற வீண் செலவுகள் செய்யாமல் இருக்க வேண்டுகிறேன்.

லால்குடி,
22-9-65 கே. சிவகுமாரன்

'சுவையான சர்ச்சை'' பகுதியில் சென்னை டாக்ஸி டிரைவர்கள் பற்றிய கட்டுரையைப் படித்தேன்.

24-9-65ந் தேதி அதிகாலையில், காலை ஏழு மணிக்கு நானும், எனது நண்பர் ஒருவரும் சென்டிரல் ஸ்டேஷனிலிருந்து புதுப்பேட்டை ஹாரிஸ் ரோடு செல்ல மூன்று டாக்ஸிகளில் ஏறி இறங்கினோம். டாக்ஸியில் ஏறி உட்கார்ந்து 'ஹாரிஸ் ரோட்டுக்குப் போங்கள்' என்றோம். டிரைவர் அலட்சியமாகவும் அநாவசியமாகவும் 'வண்டி போகாது. வேறு வண்டி பார்த்துப் போ' என்றார். சிறிது நேரத்துக்குப் பின் போலீஸ்காரர் ஒருவர், அங்கு வந்து நின்று கொண்டு பிரயாணிகளை 'க்யூ' வரிசையில் நிற்கும்படி கூறி, வரும் டாக்ஸிகளையெல்லாம் வரிசைக்கிரமமாக நிறுத்திப் பிரயாணிகளை ஏற்றி அனுப்பினார். அதில் நாங்கள் 13வது டாக்ஸியில் ஏறி, 'ஹாரிஸ் ரோட்டுக்குப் போங்க' என்றோம். அவர் முகத்தைச் சுளித்து, 'காலையில், சாவுக் கிராக்கி சவாரி தானா ஆம்புட்டுச்சு' என்று சென்னை பாஷையில் பேசிக் கொண்டே வேண்டா வெறுப்பாக, போலீஸ்காரர் விசில் ஊதிய பின் வண்டியைக் கிளப்பினார். குறிப்பிட்ட இடத்துக்கு அப்பாலேயே எங்களை இறக்கி விட்டு விட்டார். நான் மீட்டரைப் பார்த்து வாடகையைக் கொடுத்து விட்டு டிரைவரைப் பார்த்தேன். அவர் முகம் மிகக் கொடூரமாக இருந்தது.

சென்னை டாக்ஸி டிரைவர்களிடையே, சேவா மனப்பான்மையும், ஒழுக்க நெறியும் மரியாதை — பண்பாடும் வளர்க்க வேண்டியது மிகவும் அவசரமும் அவசியமுமான பணி.

கோவை
9-10-65 அல்லாபிச்சை

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10



# மீண்டும் அதையே செய்வேன்!

நான் எனது கடந்தகால வாழ்க்கையை மீண்டும் பெறுவேனேயாகில் நிச்சயமாக நான் முற்றிலும் மாறுபட்ட முறையில் வாழ்வேன். ஆனால் ஒரே ஒரு காரியத்தை மாத்திரம் மீண்டும் செய்வேன். அதுதான் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவிலேயே கணக்கு வைத்துக் கொள்வது!

**சேவை புரிவதற்கே**

**ஸ்டேட் பாங்க்**

LPE-Aiyars 5 56

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# AMCO BATTERIES
## Provide Power For Diverse Utilities

**AUTOMOTIVE**



Heavy Duty Batteries for Tractors, Buses and Trucks, Light Duty Batteries for Pleasure Cars & Taxis, and compact small units for Scooters & Motor Cycles.



**RAILWAYS**

Storage batteries for carriage lighting and working of fans air-conditioning, track & signal circuits and diesel starting.

**POWER STATIONS**

Storage batteries for auxiliary power and control closing & tripping circuit breakers and operating oil switches.





**TELE-COMMUNICATIONS**

Storage batteries for central office equipment, operating relays, message registers, P. B. X boards etc.

**WIRELESS**

Batteries for Broadcasting from studios to the Transmission centre.





**FORK LIFTS**

Fork Lift Batteries for handling heavy materials even in restricted space.

**AMCO BATTERIES STAY STRONGER LONGER**

AMCO BATTERIES LTD. BANGALORE - INDIA.